# ॥ लघुवासुदेवमननम् ॥

# லகு வாஸுதேவ மனனம்

மொழி பெயர்ப்பு :

**K. V. சுப்பரத்னம்**

(அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி பொது காரியதரிசி;
அட்வகேட், ஈரோடு.)

विरचिता आशिषः समुल्लसन्तु ।



## ॥ श्री शृङ्गेरी श्रीजगद्गुरु संस्थानम् ॥




श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य पदवाक्यप्रमाण पारावारपारीण यमनियमासन प्राणायाम प्रत्याहार ध्यान धारणासमाध्यष्टाङ्ग योगानुष्ठाननिष्ठ तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशङ्कराचार्य गुरुपरम्परा- प्राप्त षड्दर्शन स्थापनाचार्य व्याख्यान सिंहासनाधीश्वर सकल- निगमागमसारहृदय सांख्यत्रयप्रतिपादक वैदिकमार्गप्रवर्तकसर्वतन्त्र- स्वतन्त्रादि राजधानी विद्यानगर महाराजधानी कर्णाटकसिंहासन प्रतिष्ठापनाचार्य श्रीमद्राजाधिराजगुरु भूमण्डलाचार्य ऋष्यशृङ्ग- पुरवराधीश्वर तुङ्गभद्रातीरवासि श्रीमद्विद्याशङ्कर पादपद्माराधक श्रीजगद्गुरु श्रीचन्द्रशेखरभारतीस्वामि गुरुकरकमलसंजात श्रीजगद्गुरु शृङ्गेरी

**श्रीमदभिनवविद्यातीर्थस्वामिभिः**

अस्मदत्यन्तप्रियशिष्य सुब्बरत्नमार्यविषये नारायणस्मरणपूर्वकं विरचिता आशिषः समुल्लसन्तु ।

लघुवासुदेवमननं सर्वत्र सुप्रसिद्धो ग्रन्थः । तस्य च परिचयः प्रायः सर्वेषां पण्डितानां वर्तते । अस्मिन् हि प्रकरणे वेदान्तप्रमेयाः अतिसुलभं निरूपिताः । अस्य मननेन जिज्ञासूनां साधकानां तत्त्वावगतिः वेदान्तशास्त्रे प्रविविक्षूणां शास्त्रप्रमेय-परिचयश्च विनायासं संपद्यते ।

अस्य द्राविडभाषयानुवादः श्री सुब्बरत्नार्यैः उपनिबद्धः । श्री सुब्बरत्नार्याः न्यायवादिनः लौकिकव्यवहारादिभिः अलब्ध्या-वकाशा अपि ग्रन्थस्य अनुवादमकुर्वन्नित्येतत् तेषां शास्त्रविश्वास-शालितां प्रकाशयति । अनुवादोऽयं मूलानतिलङ्घी विशदार्थ-श्चेति वयं प्रतीमः ।

अस्य ग्रन्थस्य प्रकाशनम् अस्मत्प्रियशिष्याणां श्री वैद्य-सुब्रह्मण्यार्याणां षष्टितमाब्दपूर्त्यवसरे संपद्यमानस्य उत्सवस्य अङ्गभावं भजत इति तोषातिशयोस्माकम् ।

आशास्महे ग्रन्थोऽयं जिज्ञासुजनपाणिपल्लवमुपारूढः चिरं प्रकाशताम् । अनूदितारः अभिवर्धन्तामिति च ।

इति नारायणस्मरणम्

शृङ्गगिरिः,
२२-८-१९६९.



ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதி
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் அபிநவவித்யாதீர்த்த ஸ்வாமிகள் அருளிய

# ஸ்ரீமுகம்

"லகுவாஸுதேவ மனனம்" என்ற நூல் எங்கும் மிகவும் பிரஸித்தமானது. அநேகமாக எல்லா பண்டிதர்களுக்கும் இந்நூலைப்பற்றி நன்றாகத் தெரியும். இந்த பிரகரணத்தில் வேதாந்த விஷயங்கள் மிகத்தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இந்நூலிலுள்ள விஷயங்களைச் சிந்திப்பதால், ஞானமடைய விரும்பும் ஸாதகர்களுக்கு உண்மை அறிவும், வேதாந்த சாஸ்திரத்தில் நுழைய விரும்புபவர்களுக்கு சாஸ்திர விஷய ஞானமும் சிரமமில்லாமல் ஏற்படுகிறது.

ஸ்ரீ சுப்பரத்னம் ஐயர் இந்நூலைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். வக்கீல் உத்தியோகத்தில் லோக வியவஹாரங்களில் ஈடுபட்ட ஸ்ரீ சுப்பரத்னம் அய்யருக்கு அவகாசம் அதிகமாக கிடைக்காதபோதிலும் இந்நூலை அவர் தமிழாக்கியிருப்பது அவருக்கு சாஸ்திரங்களில் மிகுந்த நம்பிக்கை இருப்பதைக் காட்டுகிறது. இந்தத் தமிழாக்கம் மூலத்தை ஒட்டியே நன்கு தெளிவு படுத்துகிறது.

எங்கள் பிரிய சிஷ்யரான ஸ்ரீ வைத்யஸுப்ரஹ்மண்ய அய்யரின் ஷஷ்டி அப்தபூர்த்தி ஸமயத்தில் நடைபெறும் உத்ஸவத்தின் அங்கமாக இந்நூல் வெளியிடப்படுவது எங்களுக்கு மிகவும் ஸந்தோஷத்தைத் தருகிறது.

இந்நூல் வேதாந்த விஷயங்களை அறிய விரும்புபவர்களின் கைகளில் வெகுகாலம் நன்கு விளங்கவும் தமிழாக்கம் செய்தவர்கள் சிரேயஸ்ஸையடையவும் ஆசீர்வதிக்கிறோம்.

சிருங்ககிரி,
22-8-69.

ஸ்ரீ
நாராயணஸ்மரணம்

# FOREWORD

*Laghuvāsudevamananam* ("Brief Meditations of Vāsudeva") has long been considered and followed as a standard manual and compendium on Advaita philosophy. Pandits and lay followers of advaita alike have found immense inspiration and guidance from the work for their personal spiritual growth and vedantic maturity. Its age is uncertain and the author's life, like many other Vedantin writers in India is lost in obscurity. The work has been more well known in South India, and the author, Vāsudeva yati, and his disciple who gives a brief exposition of the larger work (see the stanzas in the beginning) "for the edification of the ignorant" and for his own personal upliftment, are not only of South Indian *smārta* background but also belong to that great continuous tradition and group of devotees of Lord Krishṇa who were nourished on the wisdom of works like the *Bhāgavatapurāṇa*. In this tradition, devotion to Lord Krishṇa, devotion to Śrī Śaṅkarabhagavatpāda and life-time pursuit of advaita philosophy have always flourished together. This group has always exhibited great qualities of clear and wonderful exposition of profound truths found in difficult works of philosophy. The questions that are boldly raised and the lucid answers that are so appropriately given in the work bear testimony to the fact that this knowledge and experience is based on the spiritual development of the personal life of the author which he has shared with his disciples and reminds us of the very unique and helpful gloss on *Vivekachūḍāmaṇi* by Śrī Chandraśekhara Bhārati Swāmi of Śringeri, the 34th Jagadguru, incorporating the great flashes of his advaitic development and experiences in his commentary.

The present work in twelve *varṇakas* discusses in detail the nature of *Ātman* or the Self and tries to remove the confusions and the mistaken identities. The charateristics of the three bodies, the three *avasthas* and the five *kośas* are described and Ātman is shown as being different from these. One has to understand and experience the nature of these bodies and *kośas* in order to realise the nature of Ātman illuminating these and existing aloof from these. The value of the work lies in the elucidation of the psychology of these sheaths or layers of personality and showing how they point to the greater psychology of Ātman-realisation. Many of the ancient Hindu insights in the area of mind and psychology of experience are now being re-discovered and corroborated by modern psychology in the west. For every psychological term in English, there are four in Greek and forty in Sanskrit. The ancient Hindu idea that the human being is a psycho-physical whole with interaction between the various layers of personality, and that in addition to the obvious gross body, there is a sheath of vital force, which, while still physical, is much more subtle and is invisible, these and many others find their approval in the startling mind-body connections which have come to light in the modern use of hypnosis in psychoanalysis and psychosomatic medicine and also studies about the electrical field of the body and brain waves.

As Swāmi Vivekānanda says: "when you think you are a body, you are apart from the universe: when you think you are a soul, you are a spark from the Eternal Fire; when you think you are the Āṭman, you are All". The *Upanishads* insist: "All would forsake him who recognizes anything as existing elsewhere than in the self". Man can walk to the ends of space and solve the outward quest. But he has also to take a walk, a journey into his own Self", a walk that can be as deep and long and profound as the outer walk and then alone he will solve the *whole* problem and his Own Problem by becomming a *jivanmukta*. Works like *Laghuvāsudevamananam* help him to realize this great goal, and their need, relevance and scientific quality will be more realized in the years to come.

The translation into Tamil, done by Mr. K. V. Subbaratnam, General and Organising Secretary, Akhila Bhārata Śaṅkara Seva Samiti is excellent and he has placed the readers under a deep debt of gratitude for this service. We are also deeply beholden to Sri V. Vaidyasubramanya Iyer for his great munificence in publishing this work, and we cannot adequately felicitate him and wish and pray for many many more years of such exemplary service to the causes of Śaṅkara, Advaita and Śriṅgeri Pīṭha.

Prof. T. K. VENKATESWARAN,
DIRECTOR & PROFESSOR OF ASIAN STUDIES,
*Denver, Colorado, U. S. A.*
(on leave in Madras, India)

August 15, 1969

# முகவுரை.

அத்வைத வேதாந்த ஸம்க்ஷேப கிரந்தமாக 'லகுவாஸுதேவ மனனம்' வெகுகாலமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. பண்டிதர்களும் இதரர்களும் ஆத்ம வளர்ச்சிக்கும், அறிவுவளர்ச்சிக்கும் இந்த நூலை ப்ரபோத மளிக்கும் வழிகாட்டியாகப் பயின்று வருகின்றார்கள். எக்காலத்தில் இது எழுதப்பட்டது என்பது தெரியவில்லை. இந்தியாவின் பற்பல வேதாந்த நூலாசிரியர்களுடையது போலவே இந்நூலாசிரியரின் வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்ள முடியவில்லை. தென் இந்தியாவில் தான் இந்த கிரந்தம் பெரும் பிரசித்தி பெற்று வந்திருக்கிறது. விரிவான நூலை இயற்றிய வாஸுதேவமுனியும், "அறிவற்றவருக்கும் அறிவைப் புகட்டவேண்டும், ஸ்வயம் மேன்மை யடைய வேண்டும்" என்ற நோக்கமுடன் பிருஹத் கிரந்தத்தைச் சுருக்கி இந்நூலை இயற்றிய (நூல் ஆரம்பத்திலுள்ள சுலோகங்களைப் பார்க்கவும்) அவர் சிஷ்யரும் தென்நாட்டு ஸ்மார்த்த ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள், பாரம்பர்ய மான கிருஷ்ண பக்தர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். பாகவத புராணம் போன்ற ஞான நூல்களால் போஷிக்கப் பட்டவர்கள். கிருஷ்ணனிடம் பக்தி, ஸ்ரீ சங்கரபகவத் பாதரிடம் பக்தி, ஸதா ஆயுள் முழுவதும் அத்வைத விசாரம் கூடிய சம்பிரதாயம் இவர்களது. வேதாந்தத்தின் பிரௌட கிரந்தங்களை எளிய வழியில் விசதமாக விளக்கும் தன்மை வாய்ந்தவர்கள். இங்கு காணப்படும் ஆழ்ந்த பூர்வபக்ஷங் களும், உசிதமான தெளிவுள்ள சித்தாந்தங்களும் கிரந்த கர்த்தாவின் நுண்ணிய அறிவும், அனுபவமும், ஸ்வாநு பூதியின் மூலமே விளக்கப்பட்டிருப்பது நன்கு விளங்கும் சிஷ்யர்களும் இந்தத்தன்மைகளைப் பெற்றிருந்தார்கள். இந்த சந்தர்ப்பத்தில் நம் நினைவுக்கு வருவது சிருங்கேரியின் 34-வது ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளின் அதி ஆச்சர்யமானதும் தெளிவானதும் அவர்களின் ஆத்மானு பூதியின் ஒளியுடன் கூடியதுமான 'விவேக சூடாமணியின்' வியாக்கியானம்,

பன்னிரண்டு வர்ணகங்கள் கொண்ட இந்த கிரந்தம் அளிப்பது ஆத்மதத்வ விளக்கமும் பிரமையால் ஏற்படும் விபரீதக் கொள்கைகளின் நிராகரணமும். சரீரத்ரயம், அவஸ்தாத்ரயம், பஞ்சகோசம் முதலியவைகளை விளக்கு வதுடன் இவைகளிலிருந்து மாறுபட்டது ஆத்மா என்று போதிக்கிறது. இந்த சரீரங்கள், கோசங்கள் இவைகளின் தன்மையை அறிவதன் மூலம் இவைகளுக்கு வேறுபட்டு இவைகளுக்குப் பிரகாசத்தை அளிக்கும் ஆத்மாவானது அறியப்படும். இந்த வழியில், அதாவது சரீரகோசங்களின் தன்மை மூலம் ஆத்ம ஸாக்ஷாத்கார தத்வத்தை இந்த நூல் நிருபணம் செய்கிறது. மனதின் வியாபகம், அநுபூதி யடைந்த மனோதத்வம் இவைகளைப்போன்ற பிராசீன ஹிந்துக்களின் நுண்ணறிவு ஈன்ற முடிவுகளை தற்போது மேல் நாட்டாரின் மனோதத்வ சாஸ்திரம் புதிதாகக் கண்டுபிடித்து, ஏற்றுக்கொள்ளுகிறது. மனோதத்வ சாஸ்திர ஸம்பந்தமான ஆங்கிலச்சொல் ஒவ்வொன்றுக் கும் கிரேக பாஷையில் நான்கும் ஸம்ஸ்கிருதத்தில் நாற்பதும் இருக்கின்றன. மனதும், தேகமும் கூடினவன் மனிதன். இவைகளின் கோசங்கள் பரஸ்பரம் இணைந்து செயல் படுகின்றன. வெளியில் தோன்றும் ஸ்தூல தேகத் துடன் சூக்ஷ்மமான, கண்ணுக்குப் புலப்படாத பௌதிக மான பிராணகோசம் இணைந்திருக்கிறது. இது ஹிந்துக் களின் பிராசீனமான கொள்கை. இதுவும், மற்றும் பல கொள்கைகளும், இப்போது கையாண்டு வரும் மனோதத்வ பரிசீலனை (psychoanalysis)யில் சுஷுப்தி போன்ற தூக்க நிலையை (hypnosis) ஏற்படுத்துவது மூலமும், மனோதேக ஒன்றுதலை (psychosomatic) ச்சார்நத வைத்ய வழிகள் மூலமும், தேகத்தினுடையதும், மனோ அலைகளுடையது மான மின் மண்டலத்தின் ஆராய்ச்சி மூலமும் மனோதேஹ ஸம்பந்தத்தின் அதிசயிக்கத்தக்கதான புது அறிவு அநுமோதனம் செய்யப்படுகின்றன.

ஸ்வாமி விவேகாநந்தர் அருளுகிறார்கள். "தேகம் நான் என்று உன்னைப் பாவிப்பாயானால் நீ பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவன்; ஜீவன் என்று கருதுவாயானால் அநாதியான ஜோதியின் பொறி ஒன்றுவாய்; ஆத்மாவே நீ என்றறிந்தால் நீ எல்லாமே". உபநிஷதங்களும் கோஷிக்கின்றன. "ஆத்மாவுக்கு அன்னியமாக ஏதாவது உண்டு என்ற கொள்கையுள்ளவன் எங்கும், எல்லாவற்றாலும் நிராகரிக்கப்படுகிறான்".

அந்தரிக்ஷத்தின் பல மூலைகளில் மனிதன் சஞ்சரிக்கலாம். வெளிநோக்கங்களை சாதிக்கலாம், ஆனால் அவன் உள்நோக்கி அகத்திலும் சஞ்சரிக்கவேண்டும். வெளியில் சஞ்சாரம்போலவே இந்த உள் சஞ்சாரமும் ஆழ்ந்தது. மாண்புடையது. இதுதான் பூர்ண பிரச்னையான தன் சொந்த பிரச்னையை ஜீவன்முக்தி நிலையில் சாதிக்கவல்லது. 'வாஸுதேவமனனம்' போன்ற கிரந்தங்களே இந்த முயற்சியில் தேவையானவை, விஞ்ஞானத்துக்குப் பொருந்தியவை என்பதெல்லாம் வருங்காலத்தில் உணரப்படும்.

அகிலபாரத சங்கரஸேவாசமிதியின் பொதுகாரியதரிசி ஸ்ரீ K. V. சுப்பரத்னம் அவர்களின் தமிழாக்கம் மிகவும் மேன்மை வாய்ந்திருக்கிறது. இந்த பெரும் பணியாற்றிய இவர்களுக்கு வாசகர்களின் நன்றி உரியதாகும். இந்த நூலின் பதிப்பாளர் ஸ்ரீ V. வைத்தியஸுப்ரமணியய்யர் அவர்களுக்கும் நம் ஆழ்ந்த நன்றி உரியது. அவர்களின் பெருங்கொடையைப் போற்றுவது கடினமானதே. சங்கரர், அத்வைதம், சிருங்கேரிபீடம் இவைகள் சம்பந்தமாக மாபெரும் பணிகளில் மேல்மேலும் ஈடுபட்டு அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழவேண்டும்.

15—8—69

பேராசிரியர் T. K. வெங்கடேச்வரன்,
டென்வர்; கொலராடோ—அமெரிக்கா,
(தற்போது சென்னைக்கு விடுமுறையில் வந்துள்ளார்)

# முன்னுரை

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் மூலமாக பிரசுரிக்கப்படும் 'ஸ்ரீசங்கரக்ருபா' 'ஸ்ரீஜகத்குரு கிரந்தமாலா' மற்றும் உள்ள பிரசுரங்களையும் படித்த என் நண்பர்களில் பலர் அவைகளில் காணப்படும் வேதாந்த பதங்களுக்கு விளக்கம் தெரிவிக்கக்கூடிய புத்தகம் சமிதியின் மூலம் பிரசுரித்தால் சௌகர்யமாக இருக்கும் என்று சொன்னார்கள். இதற்கு தகுந்த வழி 'வாஸுதேவ மனன'த்தை அவர்களுக்குத் தெரிவிப்பதுதான் என்று எண்ணினேன். ஸம்ஸ்கிருதத்தில் இருக்கும் மூலத்தைப் படித்துத் தெரிந்து கொள்ளமுடியாத நண்பர்களின் உபயோகத்துக்காக, இந்த தமிழ் புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது.

வாசுதேவமனனத்துக்கு ஏற்கனவே சில தமிழாக்கம் உள்ளது என்பது தெரியும். ஆனால் அவைகளில் பெரும்பான்மையாக ஸம்ஸ்கிருத வார்த்தைகளையே உபயோகித்தும் சில இடங்களில் கடினமான தமிழ் பதங்களையே உபயோகித்துமிருப்பதால் சாமான்ய ஜனங்களுக்கு தெரிந்துகொள்ள சிரமம் ஏற்படுகிறது. மூலத்தின் அர்த்தத்தை மனதில் கொண்டு எல்லோரும் அறியும்படியாக பேசும்நடையில் இதை எழுதி இருக்கிறேன்.

மூல கிரந்தத்தின் போக்கு குரு சிஷ்ய ஸம்வாத ரூபமாகவும் அவ்வப்போது படிப்படியாகத் தோன்றும் சந்தேகங்களையும் அதன் நிவாரணங்களையும் தெளிவாக்கும் வழியில் அமைந்துள்ளது. இதையே அனுசரித்து இப் புத்தகத்திலும் விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதைப்படிப்பதால் ஸம்ஸ்கிருத மூல நூலைப் படிக்க உத்ஸாகம் வரும் என்பது தான் என் தாழ்மையான நோக்கம்.

தக்ஷிணாம்னாய பீடமான சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடத்தில் இப்போது அமர்ந்திருக்கும் ஸ்ரீஜகத்குரு மகா

ஸன்னிதானத்தின் அனுகிரகத்தால் இதை எழுதவேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டாகி அவருடைய கிருபா கடாக்ஷத்தால் இதை இந்த மட்டில் என்னுல் எழுத முடிந்தது. அப்படிப்பட்ட கருணமூர்த்தியின் திவ்ய பாதாரவிந்தங்களில் இதை என் சிறிய குருகாணிக்கையாக சமர்ப்பிக்கிறேன். என்னை அநுகிரகித்து இதற்கு ஸ்ரீ முகம் அருளியிருக்கும் ஜகத்குருவுக்கு என் ஸாஷ்டாங்க நமஸ்காரங்களை இதன் மூலம் தெரிவித்துக்கொள்கிறேன்.

இச்சிறு மொழி பெயர்ப்பை செய்யும் போது ஏற்பட்ட பல சந்தேகங்களை நிவர்த்தி செய்து உதவியவர் என் ஆப்த நண்பர் சிருங்கேரி மடம் ஆஸ்தான வித்வான் காருகுரிச்சி பிரும்மஸ்ரீ ராமனுத சாஸ்திரிகளவர்கள் இப்புத்தகம் அச்சாகும்போது தேவையாயிருந்த திருத்தங்களைச் செய்து கொடுத்த ஸ்ரீரங்கம் வேதாந்த வித்வான், வ்யாகரண சிரோமணி பிரம்மஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் அவர்களுக்கு என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்புத்தகத்தைப் பிரசுரிக்கும் சிருங்கேரி ஜகத்குரு ஸநாதன தர்மவித்யாஸமிதி காரியதரிசி குருபக்தசிரோமணி ஸ்ரீ V. வைத்யசுப்ரமண்யய்யர் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

சிந்தனையை வளர்க்கும் கருத்துகள் அடங்கிய சிறப்புரை (Foreword) எழுதிக்கொடுத்த டென்வர் ஸர்வகலாசாலை பேராசிரியரும், ஆசிய நாட்டுக் கலைகளின் பரிசீலன அதிபருமான, பிரசித்தி வாய்ந்த பேராசிரியர் T. K. வெங்கடேச்வரன் அவர்களுக்கும் என் நன்றி.

அழகிய முறையில் வெகு சீக்கிரமாக அச்சடித்துக் கவர்ச்சிகரமான தோற்றத்துடன் புத்தகத்தை தயாரித்து கொடுத்தஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ அச்சகத்தாரை நான் என்றும் மறக்கமுடியாது.

செப்டம்பர்–1969.

*K. V. சுப்பரத்னம்*

## பொருளடக்கம்

பதினொன்றாவது வர்ணகம்



பன்னிரண்டாவது வர்ணகம்

## GLOSSORY INDEX

—:O:—

|| श्रीः ||

# ॥ लघुवासुदेवमननम् ॥

## ॥ प्रथमवर्णकम् ॥

सर्वतन्त्रस्वतन्त्राय सदात्माद्वैतवेदिने ।
श्रीमते शंकरार्याय वेदान्तगुरवे नमः ॥ १ ॥

योऽवतीर्ण इहाचार्यरूपेण यतिनां मुदे ।
श्रीमन्नारायणं वन्दे तं हरिं करुणानिधिम् ॥ २ ॥

मननाख्यं प्रकरणं वासुदेवयतीश्वरैः ।
रचितं विस्तरेणाद्य संग्रहेण प्रकाश्यते ॥ ३ ॥

बालानामुपकाराय मम विज्ञानसिद्धये ।
तत्र श्रीबालगोपालकृष्णः संनिहितो भवेत् ॥ ४ ॥

इह खलु धर्मार्थकाममोक्षाणां चतुर्णां पुरुषार्थानां मध्ये मोक्ष एव परमपुरुषार्थः, नित्यत्वात् 'न च पुनरावर्तते न च पुनरावर्तते' (छा० ८. १५. १.) इति श्रुतेः। इतरेषां त्रयाणां न तथात्वम्, अनित्यत्वात् 'तद्यथेह कर्मचितो लोकः क्षीयत एवमेवामुत्र पुण्यचितो लोकः क्षीयते' (छा. ८. १. ६.) इति श्रुतेः। स च मोक्षो ब्रह्मज्ञानादेव सिध्यति, 'तमेव विदित्वाति मृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय' (श्वे० ६. ५.), 'ब्रह्मविदाप्नोति परम्' (तै. २-१) इत्यादिश्रुतिभ्यः॥

तच्च ब्रह्म अध्यारोपापवादाभ्यां ज्ञातव्यम्, आरोपितनिवृत्त्यैवाधिष्ठानज्ञानोदयात्, 'अध्यारोपापवादाभ्यां ज्ञातव्यस्तत्त्वनिर्णयः' 'न कर्मणा न प्रजया धनेन त्यागेनैकेऽमृतत्वमानशुः' (कै० २.) इति वचनात्। तस्मान्मुमुक्षुणा अध्यारोपापवादाववश्यं ज्ञातव्यौ॥

तत्राध्यारोपो नाम शुक्तिकायां रजतवत्, रज्जौ सर्पवत्, स्थाणौ पुरुषवच्च निष्प्रपञ्चात्मवस्तुनि प्रपञ्चारोपः। अयमध्यारोपो वस्त्वज्ञानादागतः। तदज्ञानमेवाविद्या तमो मोहो मूलप्रकृतिः प्रधानं गुणसाम्यमव्यक्तं मायेति चोच्यते। मूलप्रकृतिर्नाम शुक्लरक्तकृष्णतन्तुसमुदायरूपरज्जुवत्सत्त्वरजस्तमोगुणसमुदायरूपा। अस्याः प्रलयो महासुषुप्तिरिति च नाम। अस्यां मूलप्रकृतावनन्तकोटिजीवाः स्वस्वकर्मवासनाभिः सह जतुपिण्डे सुवर्णरेणव इव सृष्टेः पूर्वं लीना वर्तन्ते। अयमनुभवः सकलजनानां सुषुप्त्यवस्थायामस्ति। सा मूलप्रकृतिः सृष्टिकाले परिपक्वजीवकर्मवशान्मायाऽविद्या तामसीति त्रिविधा जाता। तत्र माया विशुद्धसत्त्वप्रधाना। तत्र प्रतिबिम्बितं सत्सृष्टेः पूर्वं विद्यमानं ब्रह्मचैतन्यमीश्वर इत्युच्यते। तस्याव्याकृतोऽन्तर्यामीति च नाम। स एव जगत्स्रष्टा। स एव परिपूर्णब्रह्मचैतन्यरूपेण तामस्यवच्छिन्नं सज्जगदुपादानमपि भवति। तन्तोरूर्णनाभवत्स्वोपाधिप्राधान्येनोपादानकारणं स्वप्राधान्येन निमित्तकारणम्॥

अयमीश्वरः केन प्रकारेण जगत्सृष्टवानिति चेत्, उच्यते — पूर्वोक्ताऽविद्या रजःप्रधाना बहुप्रकाराऽनन्ता। तदविद्याप्रतिबिम्बितचैतन्यरूपा जीवा अप्यनन्ताः। अनयोर्जीवेश्वरयोर्व्यष्टिरूपाऽविद्या समष्टिरूपा मूलप्रकृतिश्च क्रमेण कारणशरीरे। तयोः कारणशरीरयोर्जीवस्येश्वरस्य चावस्थानं सुषुप्त्यवस्था। तयोः स्वस्वकारणशरीरमेवानन्दमयकोशः। एवं कारणप्रपञ्चसृष्टिः॥

अथ सूक्ष्मप्रपञ्चसृष्टिरुच्यते— ईश्वरस्येक्षणवशात्तमोगुणरूपा प्रकृतिरावरणशक्तिर्विक्षेपशक्तिरिति द्विविधा जाता। तत्र विक्षेपशक्तिरेव सूक्ष्म आकाशोऽभवत्। आकाशाद्वायुः। वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी। एतेषां पञ्चभूतानां सूक्ष्मभूतान्यपञ्चीकृतानि तन्मात्राणि चेति नाम। एतेषामपि सत्त्वरजस्तमोगुणाः कारणादज्ञानादागताः सन्ति। एतेषामाकाशादीनां पृथक्पृथक्सत्त्वगुणांशाच्छ्रोत्रं त्वक्चक्षुर्जिह्वा घ्राणमिति पञ्च ज्ञानेन्द्रियाणि क्रमेण जातानि। आकाशादिसत्त्वसमष्ट्याऽन्तःकरणं जातम्। तच्च मनोबुद्ध्यहङ्कारचित्तभेदेन चतुर्विधम्। तत्र बुद्धावहङ्कारस्य मनसि चित्तस्य चान्तर्भावः। एवमाकाशादिरजोगुणाद्वाक्पाणिपादपायूपस्था इति पञ्च कर्मेन्द्रियाणि जातानि। आकाशादिरजोगुणसमष्ट्या प्राणो जातः। स च प्राणापानव्यानोदानसमानभेदेन पञ्चविधः। एतज्ज्ञानेन्द्रियपञ्चकं कर्मेन्द्रियपञ्चकं प्राणपञ्चकं मनो बुद्धिश्चैकीभूय सप्तदशात्मकं सूक्ष्मशरीरं लिङ्गाख्यमुच्यते। इदमेव भोगसाधनम्। अस्मिन्सूक्ष्मशरीरे जीवेश्वरयोरवस्थितिः स्वप्नावस्था। अस्मिन्विज्ञानमयकोशो मनोमयकोशः प्राणमयकोशश्च सन्ति। एवं सूक्ष्मसृष्टिप्रकारः॥

अथ स्थूलसृष्टिप्रकार उच्यते—अथ तमोगुणप्रधानान्यपञ्चीकृतान्याकाशादीनि पञ्चापि भूतानि प्रत्येकं द्वेधा विभज्य तत्रैकैकमर्धं चतुर्धा विभज्य स्वार्धभागं विहायेतरभूतार्धभागेषु संयोजनं पञ्चीकरणम्। एवं कृते पञ्चापि पञ्चीकृतानि भवन्ति। एतेभ्यः पञ्चीकृतेभ्यो भूतेभ्यो ब्रह्माण्डं तदन्तश्चतुर्दश भुवनानि तेषु चाण्डजजरायुजस्वेदजोद्भिज्जरूपचतुर्विधस्थूलशरीराण्यन्नादि भोग्यवस्तूनि च जातानि। अस्मिन्स्थूलशरीरे जीवेश्वरयोरवस्थानं जाग्रदवस्था। इदं स्थूलमेवान्नमयकोशः एवं स्थूलसृष्टिप्रकारः॥

इदं कारणशरीरं सूक्ष्मशरीरं स्थूलशरीरं च प्रत्येकं व्यष्टिसमष्टिभेदेन द्विविधम्। 'वनम्' 'ग्रामः' इत्यादि समष्टिः, 'वृक्षः' 'गृहम्' इत्यादि व्यष्टिः। एवं सर्वशरीरं समष्टिः, एकशरीरं व्यष्टिः। तत्र समष्ट्युपाधिक ईश्वरः, व्यष्ट्युपाधिको जीवः। तत्रापि कारणसमष्ट्येश्वरः, कारणव्यष्ट्या प्राज्ञः। सूक्ष्मसमष्ट्या हिरण्यगर्भः, सूक्ष्मव्यष्ट्या तैजसः। स्थूलसमष्ट्या वैश्वानरः, स्थूलव्यष्ट्या विश्वः। इति जीवेश्वरयोरवान्तरभेदः ॥

अयमेवेश्वरः सत्त्वरजस्तमोगुणैरुपाधिभिः ब्रह्मविष्णुरुद्ररूपेण सृष्टिस्थितिसंहारान्करोति। ब्रह्मणो विराट्पुरुषेऽन्तर्भावः। विष्णोर्हिरण्यगर्भेऽन्तर्भावः। रुद्रस्य चेश्वरेऽन्तर्भावः। एवं प्रपञ्चोत्पत्तिः। अयमेवाध्यारोपः। इदं विक्षेपशक्तिकार्यम् ॥

अथावरणशक्तिकार्यमुच्यते– ईश्वरमात्मज्ञानिनं च विहायान्येषां सर्वेषां जीवानां पञ्चकोशानामात्मनश्च भेदमावरणशक्तिरन्धकार इवावृणोति। आवरणं च द्विविधमसत्त्वावरणमभानावरणं चेति। 'वस्तु नास्ति' इति व्यवहारकारणमसत्त्वावरणम्। 'वस्तु न भाति' इति व्यवहारकारणमभानावरणम्। आवरणशक्तिकार्यमेव संसारवृक्षस्य मूलम्, न विक्षेपशक्तिकार्यम्। एतन्मोक्षसिद्धेरपि हेतुः। द्विविधमप्यावरणं तत्त्वज्ञानेन विनाश्यम्। तत्त्वज्ञानं च परोक्षज्ञानमपरोक्षज्ञानं चेति द्विविधम्। तत्र गुरुमुखाद्वेदान्तजन्यं ज्ञानं परोक्षज्ञानम्। इदमेव श्रवणम्। अनेन 'वस्तु नास्ति' इत्येवंरूपमसत्त्वावरणं नश्यति। तदा 'वस्त्वस्ति' इति व्यवह्रियते। श्रवणेन संशयं मननेनासंभावनां निदिध्यासनेन विपरीतभावनां च निवर्त्य देहात्मज्ञानवद्ब्रह्मात्मज्ञानं जायमानमपरोक्षज्ञानम्। अनेन 'वस्तु न भाति' इति व्यवहारहेतुरभानावरणं नश्यति। एवं परोक्षज्ञानेनापरोक्षज्ञानेन

च 'ब्रह्म नास्ति, न भाति' इति व्यवहारहेतुरावरणद्वयमपि नश्यति। तदाऽनर्थनिवृत्तिरानन्दावाप्तिश्च भवतः। इति सप्तावस्थाः सिध्यन्ति सप्तावस्था नाम — 'अज्ञानमावृतिस्तद्वद्विक्षेपश्च परोक्षधीः। अपरोक्षमतिः शोकशतिस्तृप्तिर्निरंकुशा ॥' इति। एवमाकाशवन्निर्मले चैतन्यवस्तुनि मिथ्याभूतप्रपञ्चकल्पनमध्यारोपः ॥

अथापवाद उच्यते — 'कारणव्यतिरेकेण कार्यं नास्ति' इति बोधेन शुक्तिकायां रजतवद्रज्जौ सर्पवच्च 'ब्रह्मणि प्रपञ्चो नास्ति' इति निषेधोऽपवादः। 'या मा सा माया' 'या न विद्यते साऽविद्या' इति व्युत्पत्त्या मायायाः कल्पितत्वं सिद्धम्। एवं यः 'ब्रह्मव्यतिरेकेण किमपि नास्ति, तद्ब्रह्माहमेव' इति विचार्य जानाति स एव जीवन्मुक्त इति वेदान्तसिद्धान्तः ॥

इति प्रथमवर्णकम् ॥

ஓம்

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ வாஸுதேவ மனனம்

தமிழ் சுருக்கம்

— * —

## முதல் வர்ணகம்

தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களில் மோக்ஷம் ஒன்றே முக்கியமான புருஷார்த்தம் ஏனென்றால் அதுதான் சாசுவதமானது. சாந்தோக்ய உபநிஷத்தில் 'மோக்ஷம் அடைந்தால் மறுபடி பிறப்பதில்லை' என்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற மூன்று புருஷார்த்தங்களும் முக்யமானவை அல்ல. ஏனென்றால்

அவை சாசுவதமானவை அல்ல. அதே உபநிஷத்தில் 'இவ்வுலகில் எவ்வாறு கர்மாவினுல் (செய்கையால்) சம்பாதிக்கப்பட்ட போகம் அழிந்து போகிறதோ அவ்வாறே புண்யங்களால் சம்பாதிக்கப்பட்ட மேலுலக போகமும் அழிந்துவிடுகிறது' என்று கூறப்பட்டுள்ளது.

அந்த மோக்ஷம் என்பது ப்ரம்மஞானத்தினுல்தான் அடையப்பெறுவது சுவேதாசுவதரோபநிஷத்தில் 'அதை அறிந்தவன் மரணத்தைத்தாண்டிவிடுகிருன் மோக்ஷத்துக்கு வேறுவழி இல்லை' என்றும், தைத்திரீய உபநிஷத்தில் 'பிரம்மத்தை அறிந்தவன் மோக்ஷமடைகிருன்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ப்ரம்மம் அத்யாரோபம் (இல்லாதது இருப்பதுபோன்ற தோற்றம்), அபவாதம் (மறுப்பு) என்ற இரண்டினுல் அறியப்படவேண்டும்.

அத்யாரோபம் (பொய்தோற்றம்) என்பது கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவதாம், கயிற்றில் பாம்புதோன்றுவதேயாம். தூணில் மனுஷியன் என்ற எண்ணம் தோன்றுவதேயாம். இதுபோல நிஷ்பிரபஞ்சமான ஆத்மவஸ்துவில் பிரபஞ்சம் உண்டு என்று கற்பனை தோன்றுவது ஆரோபம். இந்த அத்யாரோபம் என்பது வஸ்துவின் உண்மையான ஸ்வரூபம் தெரியாமல் இருப்பதால் ஏற்படுகிறது. இந்த அஞானத்தையே அவித்யை, மோஹம், மாயை, மூலப்ரக்ருதி, அவ்யக்தம், முதலான பல பெயர்களால் கூறுகிருர்கள். இந்த அக்ஞானத்திற்கு எது காரணம் என்று கேட்பதற்கில்லை. ஏனெனில் இது அநாதி, ஆரம்பம் இல்லாதது.

மூலப்ருக்ருதி என்பதாவது, வெள்ளை, சிகப்பு, கருப்பு என்ற மூன்று நிறங்கள் கொண்ட மூன்றுவித நூல்களால் இணைக்கப்பட்டு உருவான ஒரு கயிறு போல் ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களின் ஒன்றுபட்ட சேர்க்கை இதற்கு பிரளயம் என்றும் மஹாஸுஷுப்தி என்றும் பெயர். ஸுஷுப்தி என்பது ஸ்வப்னமில்லாத தூக்கம். கோடிக்கணக்கான ஜீவர்கள் யாவரும் அவரவர்களின் பூர்வஜன்ம கர்மாக்களால் ஏற்பட்ட வாசனைகளுடன் தட்டான் வைத்திருக்கும் மெழுகில் தங்கத்தூள்கள் எப்படி ஒட்டியிருக்கின்றனவோ அதுபோல் ஜகத் ஸ்ருஷ்டிக்கு முன் மூலப்ரக்ருதியில் மறைந்து

கிடக்கின்றனர். இந்த அனுபவம் எல்லா ஜந்துக்களுக்கும் ஸுஷுப்தி என்ற நிலையில் காணப்படுகிறது.

இந்த மூலப்ரக்ருதி ஸ்ருஷ்டி காலத்தில் ஜீவனின் பக்குவமான அதாவது பலனைக்கொடுக்கத்தயாராக உள்ள கர்மாவின் காரணமாக மாயை, அவித்யை, தமஸ் என்று மூன்று விதமாக ஆகிறது. மாயை என்பது ஸத்வகுணத்தைப்பிரதானமாக உடையது. சிருஷ்டிக்கு முன்பு பிரம்ம சைதன்யம் இந்த மாயையில் பிரதிபிம்பிக்கும்போது ஏற்படும் ரூபம் ஈசுவரன் எனப்படும். இவருக்கு அவ்யாக்ருதர், அந்தர்யாமி என்றும் பெயர்கள் உண்டு. இதுதான் ஜகத்தை உற்பத்தி செய்வது. இதுவே பரிபூர்ணப்ரஹ்ம சைதன்யரூபமாகவே தமோகுண ப்ரதானமான தாமஸீசக்தியுடன் சேர்ந்து, குடத்துக்கு மண் போல் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகவுமாகிறது. இந்த ஜகத்துக்கு இரண்டு காரணங்களும் ஆத்மாவேதான் குடத்தை உண்டுபண்ண குயவன் நிமித்தகாரணம், மண் உபாதான காரணம். அதுபோல் ஜகத்சிருஷ்டிக்கு தனி இரண்டு காரணங்கள் இல்லை பிரம்மம் ஒன்றேதான் இரண்டு காரணமுமாகிறது. உதாரணம் சிலந்திக்கூடுக்கு சிலந்தியே உபாதானகாரணமாகவும் நிமித்தகாரணமாகவும் ஆகிறது அது தன்னிடமிருந்தே தன்வாயிலிருந்தே நூலை சிருஷ்டித்து கூடுகட்டுகிறது. இதுபோல் மாயையும் சைதன்யமும் கலந்த ஈசுவரன் ஒருவனே தன்னிடமுள்ள மாயையைக்கொண்டு உபாதான காரணமாகவும் சைதன்யாம்சத்தைக்கொண்டு நிமித்தகாரணமாகவும் ஆகிறான் என அறியவும்.

இந்த ஈசுவரன் ஜகத்தை எப்படி சிருஷ்டித்தார்?

ரஜோகுணம் மிகுந்த அவித்யையானது பலவிதமாயும் எண்ணற்றதாயுமுள்ளது அந்த அவித்யையில் தோன்றும் சைதன்யத்தின் பிரதிபிம்பங்களான ஜீவர்களும் கணக்கற்றவை இந்த ஜீவனுக்கு வியஷ்டியாக (தனித்தனியாக) உள்ள அவித்யை காரண சரீரம் இந்தக் காரண சரீரமான அவித்யையில் இருக்கும் நிலைதான் ஜீவனுக்கு ஸுஷுப்தி அவஸ்தை. இந்தக்காரண சரீரம்தான் ஆநந்தமயகோசம். இதுபோல் ஸமஷ்டியாக (மொத்தமாக) உள்ள மூலப்ரக்ருதி ஈசுவரனுடைய காரணசரீரம் அதில் இருக்கும் நிலை அவருக்கு

ஸுஷுப்தியவஸ்தை. அதுவே அவருடைய ஆநந்தமய கோசம் இவ்வாறு காரணப்பிரபஞ்ச ஸிருஷ்டி ஏற்படுகிறது.

இனி சூக்ஷ்மபிரபஞ்சத்தின் சிருஷ்டியைப் பார்ப்போம். ஈசுவரனுடைய ஸங்கல்பத்தால் தமோகுணரூபமான பிரக்ருதி ஆவரணசக்தி, விக்ஷேபசக்தி என்று இரண்டு விதமாகப் பிரிகிறது இதில் விக்ஷேபசக்தி ஸூக்ஷ்ம ஆகாசமாக ஆயிற்று. ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து நெருப்பு, நெருப்பிலிருந்து ஜலம் ஜலத்திலிருந்து மண் உண்டானது இவை ஐந்தும் ஸூக்ஷ்ம பூதங்களென்றும், அபஞ்சீக்ருதங்கள் என்றும் பிருதிவிதன்மாத்திரை அப்புதன்மாத்திரை, தேஜஸ் தன்மாத்திரை, வாயுதன்மாத்திரை, ஆகாசதன்மாத்திரை என்றும் கூறப்படுகின்றன[1].

இவைகளுக்கு ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களும் காரணமான அஞானத்திலிருந்து வந்துள்ளன.

ஆகாசத்தின் ஸத்வகுணாம்சத்திலிருந்து காது என்ற ஞானேந்திரியமும் வாயுவின் ஸத்வாம்சத்திலிருந்துத்வகிந்திரியமும் தேஜஸ்ஸின் ஸத்வாம்சத்திலிருந்து கண்ணும் ஜலத்தின் ஸத்வாம்சத்திலிருந்து நாக்கும் பிருதிவியின் ஸத்வாம்சத்திலிருந்து மூக்கும் உண்டாயின இவ்வாறு ஐந்து ஞானேந்திரியங்கள் உண்டாயின ஆகாசம் முதலான ஐந்து பூதங்களின் ஸத்வாம்சங்களும் ஒன்றுசேர்ந்து அதிலிருந்து அந்தக்கரணம் உண்டாயிற்று. இது நான்குவகைப்பட்டது. மனது, புத்தி, சித்தம் அகங்காரம் என. புத்தியில் அகங்காரமும், மனதில் சித்தமும் உள் அடங்கியவை.

இப்படியே ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களின் ரஜோகுணாம்சங்களிலிருந்து தனித்தனியாக முறையே வாக்கு, கை, பாதம், பாயு உபஸ்தம் என்ற ஐந்துகர்மேந்திரியங்கள் உண்டாயின ஆகாசம் முதலியவைகளின் ரஜோகுண அம்சங்கள் எல்லாம் சேர்ந்து உண்டானது பிராணன். இது பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், என்று ஐவகைப்படும். இப்படிப்பட்ட 5 ஞானேந்திரியங்கள்,

1 இந்திரியங்களுக்குப் புலப்படாததால் ஸூக்ஷ்ம பூதங்களென்றும். மற்ற பூதங்களின் கலப்பில்லாததால் தன்மாத்ரைகளென்றும் பஞ்சீகரணமாகாததால் அபஞ்சீக்ருதமென்றும் பெயர். பஞ்சீகரணம்பற்றி பின்னால் கூறப்படும்

5 கர்மேந்திரியங்கள், 5 பிராணன்கள், மனது, புத்தி இவைகள் ஒன்று சேர்ந்து 17 அவயவங்கள் அடங்கிய சூக்ஷ்ம சரீரம், லிங்க சரீரம் என்றும் சொல்லப்படும். இதுதான் விஷய போகத்துக்கு ஸாதனமானது. இந்த சூக்ஷ்ம சரீரத்தில் இருக்கும் நிலை ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் ஸ்வப்னவஸ்தை யாகும். இதில் விஞ்ஞானமயகோசம், மனோமயகோசம், பிராணமயகோசம் ஆகிய மூன்றும் உள்ளது இதுவே சூக்ஷ்மத்தின் சிருஷ்டியாகும்.

இனி ஸ்தூலத்தின் சிருஷ்டியைப் பார்ப்போம். தமோ குணத்தை ப்ரதானமாகக் கொண்ட ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் இரண்டு பாதியாகப்பிரித்து ஒரு பாதியை மட்டும் மறுபடியும் நான்கு பாகமாகப் பிரித்து இந்த நான்கு பாகங்களையும் மற்ற நான்குபூதங்களுடன் சேர்த்துவிடுவதற்கு பஞ்சீகரணம் என்று பெயர். இந்த முறையால் ஒவ்வொரு பூதத்திலும் ஐந்து பூதங்களின் அம்சங்களும் உள்ளன. இவற்றிற்கு பஞ்சீக்ருத பூதங்கள் என்று பெயர். பஞ்சீகரணத் திற்கு முன் ஸூக்ஷ்மமாக இருந்த பூதங்கள் பஞ்சீகரணத் திற்குப்பின் ஸ்தூலமாகிவிடுகின்றன.

இதன் விளக்கமாவது :—

பிருதிவி என்ற பூதத்தில் பிருதிவி $\frac{1}{2}$, ஜலம் $\frac{1}{8}$, தேஜஸ் $\frac{1}{8}$, வாயு $\frac{1}{8}$, ஆகாசம் $\frac{1}{8}$ பிருதிவி ஒன்று.

அப்பு என்பதில் அப்பு (ஜலம்) $\frac{1}{2}$, பிருதிவி $\frac{1}{8}$, தேஜஸ் $\frac{1}{8}$, வாயு $\frac{1}{8}$, ஆகாசம் $\frac{1}{8}$ அப்பு ஒன்று.

இப்படியே, தேஜஸ் வாயு, ஆகாசம் இவற்றிலும் பார்த்துக்கொள்ளவேண்டும். இந்த ஐந்து பூதங்களிலும் ஒவ்வொன்றிலும் மற்ற பூதங்களின் அம்சம் $\frac{1}{8}$ பாகம் இருந் தாலும் எந்த பாகம் அதிகமாக ($\frac{1}{2}$யாக) இருக்கிறதோ அது தான் அதற்குப் பெயர். இப்படி ஐந்தாக்கப்பட்ட பூதங்களால் பிரம்மாண்டம், அதில் உள்ள 14 உலகங்கள், அவைகளில் உள்ள அண்டஜம் (முட்டையிலிருந்து உற்பத்தியாகும் பக்ஷிகள் முதலியவை) ஜராயுஜம் (கர்ப்பாசயத்திலிருந்து உண்டாகும் மனிதன், மிருகம் முதலியவை, ஸ்வேதஜம் (புழுக்கத்தினுல் உண்டாகும் புழு பூச்சி முதலியவை) உத்பிஜ்ஜம் (பூமியைப் பிளந்து மேலே வரும் தாவரம்) என்ற

நான்கு வகை ஸ்தூல சரீரங்கள், அன்னம் முதலிய போகப் பொருள்கள் உண்டாயின. இந்த ஸ்தூல சரீரத்தில் ஜீவன், ஈசுவரன் இவர்களின் இருத்தலே விழிப்பு எனப்படும் இந்த ஸ்தூலசரீரம் அன்னமயகோசம் என்பது. இப்படி ஸ்தூலத்தின் சிருஷ்டி ஏற்பட்டது.

இந்த ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்கள் ஒவ்வொன்றும் வ்யஷ்டி (தனிப்பட்டது) ஸமஷ்டி (சேர்ந்தது) என்று இரு வகையானது. உதாஹரணம் : வனம், கிராமம் என்ருல் ஸமஷ்டி. மரம், வீடு என்ருல் வியஷ்டி, இப்படியே ஒவ்வொரு சரீரமும் வியஷ்டி. எல்லா சரீரங்களும் சேர்ந்து ஸமஷ்டி. வியஷ்டியில் தோன்றுவது ஜீவன் ஸமஷ்டியில் உள்ளது ஈசுவரன். அதிலும் காரண சரீரத்தின் ஸமஷ்டியால் ஈசுவரன். காரண சரீரத்தின் வியஷ்டியால் பிராஜ்ஞன். சூக்ஷ்ம சரீரத்தின் ஸமஷ்டியால் ஹிரண்யகர்ப்பன். சூக்ஷ்ம சரீரத்தின் வியஷ்டியால் தைஜஸன். ஸ்தூல சரீரத்தின் ஸமஷ்டியால் வைசுவாநரன் (விராட்புருஷன்). ஸ்தூல சரீரத்தின் வியஷ்டியால் விசுவன். இப்படி ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் ஒன்றுக்கொன்று பேதம் ஏற்படுகிறது.

இதே ஈசுவரன், ஸத்வம், ரஜஸ் தமஸ் என்ற குணங்களின் சம்பந்தத்தால், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூன்று ரூபங்கள் கொண்டு முறையே ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளை செய்கிருர். முன் சொல்லப்பட்ட விராட் புருஷன்தான் ப்ரஹ்மா என்பது. ஹிரண்யகர்ப்பர்தான் விஷ்ணு. ஈசுவரர்தான் ருத்ரர். இப்படி பிரபஞ்சத்தின் உத்பத்தி கூறப்பட்டது. இதுதான் அத்யாரோபம் என்பது. இது விக்ஷேப சக்தியினுல் ஏற்பட்ட கார்யம்.

ஆவரண சக்தியினுல் ஏற்பட்டது என்ன என்று பார்ப்போம். பஞ்சகோசங்களும் ஆத்மாவும் வெவ்வேருக இருந்த போதிலும், இந்த வேற்றுமையைத் தெரியவொட்டாதபடி இருள்போல் இந்த ஆவரண சக்தியானது மறைத்து விடுகிறது. ஆனுல் ஈசுவரனுக்கும் ஆத்ம ஞானிகளுக்கும் மட்டும் மறைப்பதில்லை. இந்த ஆவரண சக்தி அஸத்வாவரணம் அபானுவரணம் என்று இரு விதமாகும். "வஸ்துவே இல்லை" என்று சொல்வதற்குக்காரணமாக இருப்பது, அஸத்வாவரணம். 'வஸ்துதெரியவில்லை' என்ற சொல்லுக்குகாரணமாக உள்ளது

அபானுவரணம். ஆவரண சக்தியின் கார்யமே ஸம்ஸார விருக்ஷத்துக்கு மூலகாரணம். இது விக்ஷேப சக்தியால் உண்டானது அல்ல இது மோக்ஷத்தை அடைவதற்கும் காரணமாகும். இந்த இரண்டு விதமான ஆவரணமும் தத்துவ ஞானத்தால் நீங்கும்

தத்துவஞானம் என்பது இருவகைப்படும் பரோக்ஷ ஞானம், அபரோக்ஷ ஞானம் என. குருமுகமாக உபநிஷத் மூலம் உண்டாகும் ஞானம் பரோக்ஷஞானமாகும். இதுவே சிரவணமாகும். இதனுல் "வஸ்து கிடையாது" என்று முன் சொன்ன அஸத்வாவரணம் நீங்கும். அப்போது "வஸ்து இருக்கிறது" என்று சொல்லப்படும். குருவினிடம் சிரவணம் செய்வதால் சந்தேகங்கள் தெளிந்து மனனத்தால் ஒவ்வாது என்ற அஸம்பாவனையும் நிதித்யாஸனத்தால் (துடர்ந்து சிந்தனையால்) விபரீத பாவனையும் (மாறுதலான எண்ணம்) நீங்கி, தேஹமே ஆத்மா என்று முன் எண்ணியது மாதிரி, பிரம்மமே ஆத்மா என்று ஏற்படும் அறிவு அபரோக்ஷ ஞானம் எனப்படும் இதனுல் "வஸ்து தெரியவில்லையே", என்ற சொல்லுக்குக் காரணமான அபானுவரணம் நாசமடைகிறது. இவ்வாறு பரோக்ஷ அபரோக்ஷ ஞானங்களால் "பிரம்மம் இல்லை" "பிரம்மம் தெரியவில்லை" என்ற இருவகை எண்ணங்களுக்குக் காரணமான இருவகை ஆவரணங்களும் நாசமடைகின்றன. அப்போது துன்பங்கள் நீங்கி ஆனந்தம் உண்டாகிறது. இவ்வாறு ஒரு ஜீவன் மோக்ஷமடைவதற்கு ஏழு அவஸ்தைகளுள்ளன. அவைகளாவன :—

1. மூல அக்ஞானம் (முக்குணங்களுள்ளது)
2. ஆவரணம் (உண்மையின் மறைவு)
3. விக்ஷேபம் (பொய்த்தோற்றம்)
4. பரோக்ஷஞானம் (கேள்வி ஞானம்)
5. அபரோக்ஷஞானம் (ஸாக்ஷாத்காரம்)
6. சோகநிவ்ருத்தி (துக்கம் விலகல்)
7. எல்லையற்ற ஆனந்தமடைதல்

இனி "அபவாதம்" என்பது பற்றி அறிவோம். காரணத்தைக்காட்டிலும் வேருக காரியம் இல்லை" என்ற அறிவினுல் கிளிஞ்சலில் வெள்ளி இல்லாதது போலும் பழுதையில் பாம்பு இல்லாததுபோலும் "பிரம்மத்தில் பிரபஞ்சம் என்பதும் இல்லை" என்று விலக்குவது அபவாதம் எனப்படும். எது இல்லையோ அது "மாயை" எது இருப்பதில்லையோ அது "அவித்யை" என்று மாயா, அவித்யா பதங்களின் பொருள் கிடைப்பதால் மாயை கல்பிதம் (பொய் உண்மையல்ல) என்பது தீர்மானமாகிறது. இவ்வாறு நன்கு விசாரித்து எவனொருவன் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேருக ஒரு பொருளும் இல்லை. அந்த ப்ரஹ்மம் நான்தான் என்று தெரிந்துகொள்கிருனே அவன்தான் ஜீவன்முக்தன்.

---

## ॥ द्वितीयवर्णकम् ॥

—×—

अथ द्वितीयवर्णकेऽनुबन्धचतुष्टयमुच्यते। विषयः प्रयोजनं संबन्धोऽधिकारी चेत्यनुबन्धचतुष्टयम्। अस्य वेदान्तशास्त्रस्य ब्रह्मैव विषयः। मोक्ष एव प्रयोजनम्। प्रतिपाद्यप्रतिपादकभावो बोध्यबोधकभावो वा संबन्धः। साधनचतुष्टयसंपन्नोऽधिकारी। यथा बृहस्पतिसवने ब्राह्मण एव, राजसूये क्षत्रिय एव, तथा वेदान्तशास्त्रे साधनचतुष्टयसंपन्न एवाधिकारी। नित्यानित्यवस्तुविवेक इहामुत्रार्थफलभोगविरागः शमादिषट्कं मुमुक्षुत्वं चेति साधनचतुष्टयम्। 'ब्रह्मैव नित्यम्, जगदनित्यम्' इति श्रुतिस्मृतिपुराणादिना स्वयमेव जायमानं ज्ञानं नित्यानित्यवस्तुविवेकः। 'इह स्रक्चन्दनादिविषयभोगः अमुत्राप्सरःस्त्रीविषयादिभोगश्चेत्युभयमप्यनित्यम्' इति श्ववान्ताशनमूत्रपुरीषादिवत्तत्र वैरस्यमिहामुत्रार्थफलभोगविरागः। शमदमोपरतितितिक्षासमाधानश्रद्धा इति शमादिषट्कम्। शमो नाम श्रवणादि-

व्यतिरिक्तेभ्यो निवर्त्यात्मन्येव श्रवणादिविषये मनसः स्थापनम्। दमो नाम ज्ञानकर्मेन्द्रियनिग्रहः। उपरतिर्नाम संन्यासो निष्कामकर्मानुष्ठानं व्यवहारलोपो वा। तितिक्षा नाम प्रारब्धागतशीतोष्णादिसहनम्। समाधानं नाम श्रवणाद्यनुकूलविषये मनसः समाधिः। श्रद्धा नाम गुरुवेदान्तवाक्यविश्वासः। इति शमादिषट्कम्। गृहे दह्यमाने तत्रस्थो दह्यमानः पुरुषो यथा कलत्रपुत्रादिकं परित्यज्य स्वतापोपशमनार्थमेव बहिर्निर्गत्य तापोपशमनं कर्तुमिच्छति, एवं सांसारिकतापोपशमनं संपादयितुं त्यक्तसर्वैषणस्य ब्रह्मतादात्म्यभावे मोक्षे तीव्रेच्छा मुमुक्षा। लोके केषांचिन्नित्यानित्यवस्तुविवेके सत्यपि वैराग्यस्यादर्शनादिहामुत्रार्थफलभोगविरागेणापि भवितव्यमित्युक्तम्। तदुभयसत्त्वेऽपि केषांचिदपीश्वराणां कोपतापादिदर्शनाच्छमादिनापि भवितव्यमित्युक्तम्। एतत्त्रितये सत्यपि केषांचिद्भक्त्येश्वरोपासकानां ज्ञानाधिकारादर्शनान्मुमुक्षयापि भवितव्यम्॥

एवंरूपोऽधिकार्युपहारसमित्पाणिः सन्सद्गुरुमुपगम्य नमस्कृत्य विश्वासविनयाभ्यां सह 'हे स्वामिन्, हे भगवन्, गुरो' इति संबोध्य 'जीवः कः? ईश्वरः कः? जगत्कीदृशम्? एतत्त्रितयं कस्मादागतम्? कस्माद्गमिष्यति?' इति प्रश्नं कुर्यात्, 'परीक्ष्य लोकान् कर्मचितान्ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन। तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्॥' (मु०. १. २-१२.) इत्यादिश्रुतेः, 'तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया। उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः॥' (गी० ४. ३४.) इति गीतावचनाच्च॥

एवं शिष्येण प्रार्थितः सद्गुरुर्दयया सत्त्वरजस्तमोगुणैर्जीवेश्वरजगतामागमनप्रकारं बोधयित्वा आत्मस्वरूपमपि करतलामलकवत्

बोधयति । अस्याधिकारिणः साधनचतुष्टयं च बहुजन्मार्जितपुण्यपुञ्ज-परिपाकवशादीश्वरानुग्रहेण लब्धमिति वेदितव्यम् । एतत्तत्त्वज्ञान-प्रदायकं गुरुमीश्वरमेव विद्यात् । एवं यो गुरुमुखाज्जीवात्मपरमात्मनो-रभेदं विचार्य जानाति स एव मुक्तिं गमिष्यतीति सिद्धम् ॥

इति द्वितीयवर्णकम् ॥

---

## இரண்டாவது வர்ணகம்

— ❊—

இப்போது நான்கு அனுபந்தங்கள் எவை என்பதுபற்றி விசாரிப்போம்.

ஒருவன் ஒரு புஸ்தகத்தை வாசிக்கவேண்டுமானுல் அது பற்றிய நான்கு விஷயங்கள் அவனுக்கு முன்னதாகத் தெரிய வேண்டும். அவை தெரிந்தால்தான் அதை வாசிக்க அவன் முனேவான். இல்லாவிடில் அதை வாசிக்கமுற்படமாட்டான். ஆகவே ஒவ்வொரு நூலிலும் முதலில் இந்நான்கையும் கூற வேண்டும். அவையாவன :—

1. இதில் சொல்லப்படும் விஷயம்.
2. இதைப் படிப்பதால் ஏற்படும் பிரயோஜனம்.
3. இந்த கிரந்தத்துக்கும் இதில் குறிக்கப்படும் விஷயத்துக்கும் உள்ள ஸம்பந்தம்.
4. இதைப் படிப்பதற்கு யார் தகுதி உள்ளவர் என்பது.

இதற்குத்தான் நான்கு அனுபந்தங்கள் (துடர்ச்சிகள்) எனப்பெயர். வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்படும் விஷயம் "பிரம்மம்" | இதைப் படிப்பதனுல் அடையக்கூடிய பிரயோஜனம் மோக்ஷம்.| இதைத் தெளிவுபடுத்துவது ஸம்பந்தம்|ஸாதன சதுஷ்டயம் உள்ளவர்கள் இதைப்படிக்க யோக்கியதை உடையவர்கள்.|

பிருஹஸ்பதிஸவம் என்ற யக்ஞம் செய்வதற்கு பிராம்மணர் தான் யோக்கியதை (அதிகாரம்) உடையவர். ராஜஸூய யாகம்

செய்வதற்கு க்ஷத்திரியனுக்குத்தான் யோக்கியதை உண்டு. அதுபோல் வேதாந்த சாஸ்திரத்தை படித்து அறிவதற்கு நான்கு ஸாதனங்களை உடையவனே யோக்கியதை உள்ளவனுவான்.

நித்யாநித்ய வஸ்துவிவேகம் இஹாமுத்ரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்கம், முமுக்ஷுத்வம் இவைகளே இந்த நான்கு ஸாதனங்களாகும்,

1. நித்யா நித்ய வஸ்து விவேகம்: இது அழிவற்றது, இது அழிவுள்ளது என்ற அறிவு அதாவது பிரம்மம் ஒன்றே அழிவற்றது, ஸத்யம், ஜகத் (உலகம், சிருஷ்டியில் அடங்கியது எல்லாம்) அழிவுள்ளது பொய் என்று சுருதி (வேதம்) ஸ்ம்ருதி (தர்ம சாஸ்திரம்), புராணங்கள் இவைகள் மூலம் ஏற்படும் அறிவு.

2. இஹ அமுத்ர பல போக விராகம்: இந்த உலகத்திலும் பரலோகத்திலும் கிடைக்கக்கூடிய விஷயபோகங்களில் பற்றற்ற நிலைமை. அதாவது இந்த உலகத்தில் கிடைக்கும் ஸ்திரீ, சந்தனம், பூமாலை முதலிய விஷயங்களின் அனுபவம், மேலுலகங்களில் கிடைக்கும் அப்ஸரஸ் ஸ்திரீ முதலிய விஷய சுகானுபவம் இவை இரண்டும் அழிவுள்ளவை என்று தெரிந்து கொண்டு இவைகளில் வெறுப்பு அடைதல். இந்த வெறுப்பு எப்படி இருக்கவேண்டுமென்றால், நாய் கக்கிய அன்னம், மூத்திரம், மலம் இவைகளைக்கண்டால் ஒருவன் மனதில் எவ்வளவு அருவருப்புக் கொள்வானே அதுபோல் மேலே சொன்ன இருவகை சுகங்களையும் பற்றி மனதில் வெறுப்புக் கொண்டிருத்தல் வேண்டும்.

3. சமம், தமம், உபரதி, திதிக்ஷா, ஸமாதானம், சிரத்தை ஆகிய ஆறு குணங்கள்:—

(i) சமம் என்பது மனதை வெளிவிஷயங்களில் செல்லவொட்டாமல் தடுப்பது

(ii) தமம் என்பது ஞானேந்திரியங்கள் (கண், காது, மூக்கு, நாக்கு, தோல்) கர்மேந்திரியங்கள் (கை, கால், வாக்கு பாயு, உபஸ்த்தம்) இவைகளை அடக்குதல்.

(iii) உபரதி என்பதுஸந்யாஸம் (ஸர்வகர்மபரித்யாகம்) அல்லது எவ்விதபலனையும் விரும்பாமல் கர்மாக்களை அனுஷ்டிப்பது, உலகவியவஹாரமொன்றிலும் ஈடுபடாமலிருப்பது,

(iv) திதிக்ஷா என்பது தனது பிராரப்தகர்மாவின் பலனுக ஏற்படும் சீதம், உஷ்ணம் முதலிய வேறுபாடுகளை ஸஹித்துக் கொள்ளுதல்.

(v) ஸமாதானம் என்பது பிரம்மத்தைப்பற்றித் தெரிந்து கொள்ளும் விஷயங்களைக் கேட்பதில் மட்டும் மனதை ஈடுபடுத்தல்.

(vi) சிரத்தை என்பது குரு சொல்லும் வார்த்தையிலும் உபநிஷத் வாக்கியத்திலும் நம்பிக்கை வைத்தல்

இந்த ஆறும்தான் சமாதிஷட்கம் என்பது

4. முமுக்ஷா (மோக்ஷத்தில் ஆசை) என்பது எப்படி இருக்கவேண்டும் என்ருல் ஒரு வீடு தீயினுல் எரிந்துகொண் டிருக்கும்போது அந்த வீட்டிற்குள் உள்ளமனிதன் எப்படி தன் ஸம்ஸாரம், குழந்தைகள் சொத்து முதலியவைகளை உதறித் தள்ளிவிட்டு தனக்கு ஏற்பட்டிருக்கும் தீயின் வேகத்தை தணித்துக்கொள்வதிலே மட்டும் நோக்கம் கொண்டு வெளியில் ஓடிப்போய் தீயின் வேகத்தைக் குறைத்துக் கொள்ள ஆவல் கொள்வாளுே அதுபோல் ஸம்ஸாரத்தில் ஏற்பட்டிருக்கும் கஷ்டங்களினுல் உண்டாகும் தாபத்தைத் தணித்துக்கொள்ள எல்லா ஆசைகளையும் அடியோடு உதறி விட்டு பிரம்மத்துடன் ஒன்று சேர்வது என்னும் மோக்ஷம் அடைவதில் தீவிரமான ஆவல் முமுக்ஷை.

மேலேசொல்லப்பட்ட நான்கு ஸாதனங்கள் எல்லாம் ஒரு வனுக்கு சேர்ந்து இருக்கவேண்டும். ஒன்றுமட்டில் இருந்தால் போதாது. ஏனெனில் உலகில் சிலருக்கு "இது அழிவுள்ளது இது அழிவற்றது" என்ற அறிவு இருந்தாலும், வைராக்கியம் ஏற்படாததால் இவ்வுலகத்தில் உள்ள சுகானுபவத்திலும், பரலோகசுகங்களிலும் பற்றில்லா நிலைமை இருப்பதில்லை ஆகையால் இவ்விரண்டும் தேவை. இந்த இரண்டும் இருந்த போதிலும் சில ரிஷிகளுக்கு கோபம் தாபம் முதலியவை காணப்படுவதால் சமம் முதலிய மேலே சொன்ன 6 குணங் களும் இருக்கவேண்டும். இந்த மூன்று அம்சங்கள் மட்டும் இருந்தாலும், பக்தியினுல் ஈசுவரஉபாசனையில் ஈடுபட்டுள்ள சிலருக்கு ஞானத்தைப்பெறுவதற்கு யோக்கியதை இருப்ப தில்லை. ஆகவே நான்காவதான முமுக்ஷையும் (மோக்ஷம் அடைய தீவிர ஆவலும்) இருக்கவேண்டும்.

அவெ் பதி     போலயூா



மேலே சொன்ன நான்கு ஸாதனங்களில் முதலாவது ஸாதனம் இருப்பவனுக்கு இரண்டாவது ஸாதனம் தானுக அடைய முடியும். அதுபோல் இரண்டாவது ஸாதனமுடையவனுக்கு மூன்ருவதும், மூன்ருவது ஸாதனம் உடையவனுக்கு நான்காவதும் கிடைப்பது சுலபமாகும். ஆனுல் நான்காவது சாதனம் அடைந்தவனுக்கு முதல்மூன்று ஸாதனங்கள் தேவை இல்லை என்று அலக்ஷியம் செய்து அவைகளை விட்டுவிடக் கூடாது. முந்திய ஸாதனம் நழுவிவிட்டால் பிந்திய ஸாதனம் சாசுவதமாக நிலைக்காது. ஆகவே இந்த நான்கு ஸாதனங்களும் எப்போதும் ஒருவனிடத்தில் இருக்கவேணும். அவனே தகுந்த அதிகாரியாவான்.

இப்படிப்பட்ட யோக்கியதையை உடையவன் மரியாதையுடன் மங்கள திரவியங்களுடன் ஸத்குருவைத்தேடி, அவரை வணங்கி அவரிடம் அடக்கத்தையும் நம்பிக்கையையும் காட்டி "ஹே ஸ்வாமி! குருவே" என்று சொல்லி "ஜீவன் என்பது யாது? ஈசுவரன் என்பது யாது? ஜகத் என்பது எப்பேற்பட்டது? இம்மூன்றும் எங்கிருந்து வந்தவை? இவை எப்படி முடிவாகும்" என்ற கேள்விகளைக் கேட்கவேண்டும். இதைத்தான் கீதையும் உபநிஷத்துக்களும் கூறுகின்றன.

இப்படி சிஷ்யன் பிரார்த்திக்க, குரு பரம கருணையுடன் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் குணபேதங்களினுல் ஜீவன் ஈசுவரன் ஜகத் முதலியவை தோன்றுவதை விளக்கி ஆத்மஸ்வருபத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் போதிப்பார் மேலே சொல்லப்பட்ட நான்கு சாதனங்களையும் உடைய அதிகாரியின் பெருமை யாதெனில் இவை பல ஜன்மாக்களில் செய்யப்பட்ட ஏராளமான புண்யங்களாலும் ஈசுவரனுடைய அனுக்கிரகத்தாலும் அடையப்பட்டதாகும் என்பதேயாம். இந்த பிரம்மதத்துவத்தை விளக்கும் குருவை ஈசுவரன் என்றே அறியவேணும். இப்படி எவன் குருவினிடமிருந்து உபதேசம் பெற்று ஜீவாத்மா பரமாத்மா இவ்விரண்டும் ஒன்றே என்று அறிகின்ருனே அவனே மோக்ஷம் அடைவான் என்பது தீர்மானமாகும்.

---

## ॥ तृतीयवर्णकम् ॥

—※—

अयं प्रपञ्चः कतिविध इति चेदात्माऽनात्मा चेति द्विप्रकारः। प्रपञ्चातीतस्यात्मनः कथं प्रपञ्चान्तर्भूतत्वमिति न शङ्कितव्यम्। कथमिति चेत्, अस्य प्रपञ्चस्य चेतनाचेतनात्मकत्वादात्मनश्चेतनरूपत्वादात्मानं विना प्रपञ्चस्याभावादात्मनः प्रपञ्चान्तर्भावो वक्तव्य एव। तर्हि चेतनं किम्, अचेतनं किमिति चेत्, जङ्गमं सर्वं चेतनं स्थावरं सर्वमचेतनम्। तर्हि चेतनानामचेतनानां च प्रत्येकं बहुप्रकारत्वात्कथं द्विप्रकार एव प्रपञ्च इति चेच्छृणु। अनात्मैक एव। स कार्यरूपेणानेकरूपोऽभूत्। आत्मा चैकरूप एव। सोऽप्यनात्मकार्योपाधिभिरनेकजीवा इति, अनेकेश्वरा इति च भाति। एकस्येश्वरस्य जीववत्कथमनेकत्वमिति चेत्, पुण्यक्षेत्रेषु ग्रामेषु गृहेषु च शिवविष्ण्वादिमूर्तिभेदेन स्थितत्वादिति ब्रूमः। मृच्छिलादिरूपाणां तासां मूर्तीनां कथमीश्वरत्वमिति चेत्; ईश्वरत्वमस्ति, सर्वैरपि तासु मूर्तिषु बहुद्रव्यव्ययं कृत्वा अभिषेकनैवेद्यादेः क्रियमाणत्वात्। येषां शास्त्रे विश्वासो नास्ति ते म्लेच्छादयो मूर्तीनां पूजने नोदाहरणीयाः, सर्वतः श्रद्धावतामेवोदाहरणीयत्वात्। किं च हेये मलमूत्राद्यात्मकेऽस्मिञ्शरीर आत्मबुद्धिं कुर्वतां जीवानामत्यन्तशुद्धासु मूर्तिष्वीश्वरबुद्धिकरणे को वा दोषः ?

एवमेकस्यानात्मनः कार्यरूपेणानेकत्वे एकस्यात्मनोऽनात्मकार्योपाधिभिरनेकत्वे च दृष्टान्तः क इति चेत्, शृणु। यथैकैव पृथिवी कार्यरूपेण परिणता सती पर्वतो वृक्षो गोपुरं कुड्यं कुसूलं गृहं मठो घटः शराव इत्यादिभेदं गच्छति, तथा मूलप्रकृतिरनात्मैक एव कार्यशरीररूपेणानेको जातः; यथा आकाश एक एव पृथिवी-

कार्योपाधिषु प्रविष्ट इव प्रतीयमानः 'अयं घटाकाशः' 'अयं मठाकाशः' इत्यादिरूपेणानेकधा भाति, तथा आत्मा स्वयमेकोऽपि तत्तच्छरीरोपाधिभिस्तत्र प्रविष्ट इव सन् देवो मनुष्यो रामः कृष्णो ब्राह्मणः क्षत्रियो वैश्यः शूद्रः पशुः पक्षी क्रिमिः कीट इति बहुधा भाति। अयमवच्छिन्नपक्षे दृष्टान्तः। प्रतिबिम्बपक्षे तु, समुद्रो नदी तटाकः कूपो घटजलमित्येकमेव जलं यथा बहुधा जातम्, तथाऽनात्मापि बहुधा जातः; तेषु समुद्रादिष्वादित्य एक एव प्रतिबिम्बितः सन्यथा बहुधा जातः, तथैक एवात्माऽन्तःकरणसहितेषु सर्वेष्वपि शरीरेषु प्रतिबिम्बितः सन्ननेको जातः, इत्युभयत्रापि दृष्टान्तो ज्ञातव्यः। यथा जलधर्माः शैत्यचलनादयस्तज्जलनिष्ठप्रतिबिम्ब एव भान्ति बिम्बभूतमादित्यं न स्पृशन्ति, तथाऽन्तःकरणधर्माः कर्तृत्वभोक्तृत्वविकारा अपि तदन्तःकरणनिष्ठचिदाभास एव भान्ति बिम्बभूतमात्मानं न स्पृशन्ति। तस्माज्जीवात्मैव परमात्मा परमात्मैव जीवात्मा। कथमिति चेत्, यथा घटाकाश एव महाकाशो महाकाश एव घटाकाश एवमिति जानीहि॥

ननु जीवात्मनः कल्पितत्वात्कल्पितस्य चासत्यत्वात्कथं तस्य सत्यपरमात्माभेद इति चेत्। पारमार्थिको व्यावहारिकः प्रातिभासिक इति जीवस्त्रिविधः। एते जीवाः क्रमेण सुषुप्तिजाग्रत्स्वप्नाभिमानिनः। यथा जले तरङ्गः कल्पितस्तरङ्गे च फेनः कल्पितः, तथा पारमार्थिके व्यावहारिकः कल्पितो व्यावहारिके च प्रातिभासिकः कल्पितः। यथा माधुर्यद्रवत्वशैत्यादीनि पारमार्थिकजलनिष्ठान्येव सन्ति तरङ्गे भान्ति तद्द्वारा फेनेऽपि भान्ति, तद्वत्सच्चिदानन्दाः पारमार्थिककूटस्थनिष्ठा एव सन्तो व्यावहारिके भान्ति तद्द्वारा प्रातिभासिकेऽपि भान्ति। यथा फेनस्तरङ्गं विना नास्ति तरङ्गोऽपि जलं विना नास्ति जलं तु परमार्थभूतम्, एवं प्रातिभासिकोऽपि व्यावहारिकं विना

नास्ति व्यावहारिकोऽपि पारमार्थिकं विना नास्ति। तस्माद्यथा परमार्थत्वेन घटाकाशो महाकाश एव, एवं पारमार्थिकः कूटस्थः परमात्मैवेति सिद्धान्तः। एवम् यः 'नेति नेति' (बृ० २. ३.६.) इति वाक्येन देहादिपञ्चकोशेभ्यः पारमार्थिकं कूटस्थं पृथक्कृत्य तं पारमार्थिकं कूटस्थम् 'अहम्' इति जानन्सन् तम् 'अहं ब्रह्मास्मि' इति श्रुतिविचारेण युक्तिभिर्दृढनिश्चयेन च साक्षात्कृत्य तिष्ठति, स एष परिपूर्णब्रह्मस्वरूपः। तमेव पुण्यपापकर्माणि न स्पृशन्तीति सर्वा अप्युपनिषद एकतात्पर्येण घुष्यन्ति॥

इति तृतीयवर्णकम्॥

---

## மூன்றுவது வர்ணகம்

—x—

இந்த பிரபஞ்சம் எத்தனைவிதம்?

ஆத்மா, அநாத்மா என்று பிரபஞ்சம் இரண்டுவிதம்.

பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டதான ஆத்மாவை பிரபஞ்சத்திற்குள் அடங்கினதாக எப்படிக்கூறமுடியும்?

சேதனம் அசேதனம் (ஜடம்) இரண்டும் சேர்ந்ததுதான் பிரபஞ்சம் என்பது. சேதனம் என்பது ஆத்மா. ஆத்மா இல்லாமல் பிரபஞ்சமில்லாததால் ஆத்மாவும் பிரபஞ்சத்தில் சேர்ந்ததுதான்.

சேதனம் எது? அசேதனம் எது?

உயிருள்ளது சேதனம். உயிரில்லாதது அசேதனம் ஜடம்

இவை ஒவ்வொன்றும் பலவிதமாகக் காணப்படுகிறதே இதை இரண்டேவிதம் என்று எப்படிச் சொல்வது என்றல் சொல்லுவோம். ஆத்மஸ்வரூபம் அல்லாதது ஒன்றே. அது கார்யத்தின் வசமாகவே பல ரூபங்களாயிற்று. அதேபோல் ஆத்மாவும் ஒன்றேதான். இதுவே பல ரூபங்களான ஆத்ம

கார்யங்களென்ற [1] உபாதிகளால் அநேக ஜீவர்களாகவும் அநேக ஈசுவரர்களாகவும் தோன்றுகிறது.

ஜீவர்களைப்போல் ஒரே ஈசுவரன் எப்படிப் பலவாக ஆகிருன் ?

புண்ய க்ஷேத்திரங்களிலும் கிராமங்களிலும், வீடுகளிலும் சிவன் விஷ்ணு முதலான பலமூர்த்திகளாக இருப்பதினுல்தான்.

மண், கல் முதலியவைகளால் செய்யப்பட்ட இந்த விக்கிரகங்களில் எவ்விதம் ஈசுவரத்தன்மை ஏற்படுகிறது ?

பலர் ஏராளமான பணத்தை செலவு செய்து இந்த மூர்த்திகளுக்கு அபிஷேகம் நைவேத்தியம் முதலியவைகளைச் செய்வதால் அவைகளில் ஈசுவரத்தன்மை உளது என்போம் எவர்களுக்கு சாஸ்திரங்களில் நம்பிக்கை கிடையாதோ அவர்கள் மிலேச்சர்களாவார்கள். அவர்களை இந்த மூர்த்தி பூஜைக்கு உதாஹரணமாக எடுத்துக்கொள்ளக்கூடாது. சிரத்தை உள்ளவர்கள்தான் எல்லாவிஷயங்களிலும் உதாஹரணமாவார்கள். மேலும் மலம், மூத்திரம் முதலிய அசுத்தத்துடன் கூடிய இந்த சரீரத்தையே ஆத்மா என்று எண்ணும்பொழுது முற்றிலும் சுத்தமான மூர்த்திகளை ஈசுவரனுக எண்ணுவதில் என்ன தோஷம் ?

ஒரே அநாத்ம வஸ்து பல காரியங்கள் ரூபமாக அநேகமாக ஆவதற்கும், ஓரே ஆத்ம வஸ்து அந்த அநாத்ம கார்யங்கள் என்னும் பல உபாதிகளால் அநேகமாக ஆவதற்கும் திருஷ்டாந்தம் உண்டா ? ஆம் இருக்கிறது அதை காட்டுகிருேம். பிருதிவீ ஒன்றுதான். ஆனுலும் அது பலகாரியங்களாக மாறும்பொழுது ஒரே பிருதிவி, மலை, மரம், கோபுரம், சுவர், நெற்குதிர், வீடு, மடம், குடம், சட்டி இது முதலான பல ரூபங்களாக ஆகிவிடுகிறது. இதுபோலவே

---

1. ஒரு வஸ்து பலவாகத் தோன்றுவதற்குக் காரணமாக இருக்கும் வஸ்துவிற்கு உபாதி என்று பெயர். ஒரே சந்திரன் பல பாத்திரங்களிலுள்ள ஜலங்களில் பிரதிபிம்பிக்கும்பொழுது பலவாகக் காணப்படுகிருன். சந்திரனுக்கு ஜலம் உபாதியாகும் ஒரே ஆகாசம் கடாகாசம், மடாகாசம், கிருஹாகாசம் என்று பலவாக தோன்றுவதற்கு கடம் முதலியவை உபாதிகளாகும். இதுபோல் ஆத்மா ஒன்ருக இருந்தாலும் அநாத்ம காரியங்கள் என்ற உபாதி பலவாக இருப்பதால் ஆத்மாவும் பலவாகத் தோன்கிறது. உண்மையில் வஸ்து ஒன்றுதான். உபாதிகள்தான் அநேகம்,

மூலப்ரக்ருதி என்ற அநாத்ம வஸ்து ஒன்ருக இருந்தபோதிலும் அது பிரபஞ்சமாக மாறும்பொழுது மூலப்ரக்ருதியின் கார்ய மான பிரபஞ்சம் பலவாக இருப்பதால் மூலப்ரக்ருதியும் பலவாக ஆகிவிடுகிறது என்று சொல்கிருேம்.

இனி ஒரே ஆத்ம வஸ்து உபாதிகளால் அநேகமாக ஆவதற்கு திருஷ்டாந்தம் கூறுகிருேம். எங்கும் பரவியுள்ள ஆகாசம் ஒன்ருக இருந்தபோதிலும் பிருதிவியின் காரியங் களுடன் அது சேரும்பொழுது குடத்திற்குள் உள்ள ஆகாசம், மடத்திற்குள் உள்ள ஆகாசம், என்று பலவாகத் தோன்று கிறது அதேபோல் ஆத்மா ஒன்ருகவே இருக்கிறது. ஆனுலும் இது பல சரீரங்களுள் புகுந்துகொண்டதுபோல் தோன்றும்பொழுது தேவன், மனுஷியன், ராமன், கிருஷ்ணன், பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், பசு, பக்ஷி, பூச்சி, புழு என்று பல வகையான தோற்றத்தை அளிக்கிறது. இது அவச்சின்ன பக்ஷத்திற்கு அதாவது ஆத்மா தொடர்ந்து எல்லா இடத்திலும் உள்ளது என்று சொல்லும் கக்ஷிக்கு உதாஹரணமாகும். ஜீவன் பிரதிபிம்பம் என்று சொல்லும் மற்ருெரு கக்ஷி உள்ளது. இதற்கும் ஒரு உதாஹரணம் சொல்லலாம் ஒரே ஜலம் ஸமுத்ரம், தடாகம், கிணறு, குடத்து ஜலம் என்று பல இடங்களில் பலவாக ஆகிவிடுகிறது. அது போல் ஒரே அநாத்மாவும் பலவாக ஆகியிருக்கிறது. சூரியன் ஒருவனுக இருந்த போதிலும் எவ்விதம் ஸமுத்ரம் முதலியவைகளில் பலவாக பிரதிபிம்பம் காணப்படுகிறதோ அதுபோல் ஆத்மா ஒன்ருக இருந்தாலும் ஒவ்வொரு சரீரத் திலும் அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கும் பொழுது அநேக மாகத்தோன்றுகிறது எனக்கூறலாம் ஆனுலும் ஜலத்தின் தன்மையான உஷ்ணம் குளிர்ச்சி, ஓட்டம் இவைகள் அந்த ஜலத்தில் தோன்றும் சூரியனுடைய பிரதிபிம்பத்திற்குச் சேருமே தவிற பிம்பமான சூரியனுக்கு எவ்வித மாறுதலேயும் உண்டு பண்ணுது. அதுபோலவே, மனிதனுடைய அந்தக் காரணத்துக்கு ஸம்பந்தப்பட்ட சுக துக்கானுபவம் முதலிய மாறுதல்கள் அந்த அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த ஜீவனேச் சேருமே தவிற பிம்பரூபமான ஆத்மாவுக்கு இவை எவ்வித மாறுதலேயும் உண்டு பண்ணுது ஆகையால் ஜீவாத்மாவே பரமாத்மா, பரமாத்மாவே ஜீவாத்மா என்போம். அது எப்படியெனில், குடத்தில் உள் அடங்கி இருக்கும் ஆகாசமே

அக்குடத்துக்கு வெளியில் உள்ள ஆகாசம் வெளியில் உள்ள ஆகாசமே குடத்துக்குள்ளேயும் உள்ளது. என்பதுபோல் அறியவும்.

கேள்வி:—ஜீவாத்மா உண்டாக்கப்பட்டது (கல்பிதம்). எது உண்டாக்கப்பட்டதோ அது உண்மைப்பொருளல்ல பொய்யானது. அப்படி இருக்க உண்மையான பரமாத்மாவும் கல்பிதமான ஜீவாத்மாவும் ஒன்றுதான் என்று எப்படிச் சொல்லலாம்?

பதில்:— ஜீ வ ன் மூவகைப்படும்.

(1) பாரமார்த்திகன் (முற்றிலும் உண்மையானது)

(2) வ்யாவஹாரிகன் (காரியகாலத்தில் இருப்பது)

(3) பிராதிபாஸிகன் (தோன்றும் காலத்தில் மட்டும் இருப்பது.)

இவை ஸுஷுப்தி (ஸ்வப்னமில்லாத நித்ரை) விழித்திருக்கும் காலம், ஸ்வப்னகாலம் இம்மூன்றிலும் முறையே சேர்ந்தவை. உதாஹரணமாக ஜலத்தில் அலை உண்டாகிறது அப்படி உண்டான அலையில் நுரை தோன்றுகிறது. இதுபோல் பாரமார்த்திக ஜீவனிடத்தில் வியாவஹாரிக ஜீவனும் வியாவஹாரிக ஜீவனிடத்தில் ப்ராதிபாஸிக ஜீவனும் கல்பிதம் வாஸ்தவத்தில் ஜலமேதான் அலையாகவும் நுரையாகவும் தோன்றுகிறதே தவிற ஜலத்தைக்காட்டிலும் வேருக அலை கிடையாது. அலையைக்காட்டிலும் வேருக நுரை கிடையாது இதுபோல பாரமார்த்திக ஜீவனைக்காட்டிலும் வேருக வியாவஹாரிக ஜீவனும் வியாவஹாரிக ஜீவனைக்காட்டிலும் வேருக ப்ராதிபாஸிக ஜீவனும் கிடையாது. பாரமார்த்திக ஜீவன்தான் மற்ற இரு ஜீவர்களாகவும் தோன்றுகிறது. மேலும் இனிப்பு, குளிர்ச்சி, முதலியவை ஜலத்தைச்சேர்ந்தவைதான். அவை அலையிலும் அதன் மூலம் நுரையிலும் தோன்றுகிறது.

அதுபோலவே சுத்த ஜீவனைச்சேர்ந்த இருப்பு, ஞானம், ஆனந்தம் இவை விழிப்பு நிலையிலுள்ள ஜீவனிடமும் அதன் மூலம் ஸ்வப்னத்தில் உள்ள ஜீவனிடமும் தோன்றுகிறது. ஆகையால் எப்படி குடத்திற்குள் உள்ள ஆகாசம் குடத்திற்கு வெளியில் உள்ள ஆகாசமேதான் என்கிருேமோ

அதுபோல் ஜீவபேதங்களில் தோற்றமளிக்கும் ஆத்மாவும் பரமாத்மாவேதான் என்று தீர்மானம் ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் பிரும்மம் என்பது எது என்ற கேள்விக்கு பதில் சொல்லுகையில் नेति नेति "இதுவல்ல இதுவல்ல" என்ற விலக்கிசொல்லும் வழியே கூறப்பட்டது அந்தவிதமாக அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களிலிருந்தும் உண்மைப் பொருளான ஆத்மவஸ்துவைப்பிரித்து, அதையே "நான்" என்று அறிந்துகொண்டு பிறகு வேதாந்த விசாரங்களாலும் யுக்திகளைக்கொண்டு மனனம் செய்வதாலும் "சுத்தாத்மாவே ப்ரஹ்மம் அதுவே நான்" என்று உறுதியாகத்தெரிந்து கொண்டு நேரில் காண்கிறவன் பூர்ணப்ரஹ்மமாக ஆகி விடுகிறான். புண்யமோ, பாபமோ ஒன்றும் அவனைபாதிக்காது என்று எல்லா உபநிஷத்துக்களும் ஒரே அபிப்ராயமாக முறையிடுகின்றன.

---

## ॥ चतुर्थवर्णकम् ॥

—*—

इदानीमस्य जीवस्य दुःखं च जन्म च कर्म च रागद्वेषादि चाभिमानश्चाविवेकश्चाज्ञानं चेत्येतेषु पूर्वपूर्वं प्रति उत्तरोत्तरं हेतुः; तत्र दुःखादिचतुष्टयं चतुर्थपञ्चमवर्णकयोर्विचार्यते ॥

जीवात्मनो दुःखं स्वाभाविकं वा आगन्तुकं वेति चेत्, आगन्तुकमिति ज्ञेयम्। स्वाभाविकमिति चेदनेकदोषाः सन्ति। तत्कथमिति चेत्। अस्य जीवात्मनो दुःखं स्वाभाविकं चेद्दुःखनिवृत्तिः कदाचिदपि न स्यात्; सुखमपि कस्यापि न स्यात्। दुःखनिवृत्त्यै सुखप्राप्त्यै च कस्यापि कर्म न स्यात्; सत्कर्मयोगध्यानोपासनेषु कस्यापि प्रयत्नो न स्यात्; वेदशास्त्रपुराणानि च व्यर्थानि स्युरिति जानीहि। ननु दुःखं स्वाभाविकमस्तु तन्निवृत्त्यै च प्रयत्नं

கேள்வி :— "நான் கோவிலைக் கட்டுவிக்கிறேன்" "நான் குளத்தை வெட்டுவிக்கிறேன்" என்று வியவஹாரங்கள் செய்வதனுல் ஆத்மா கர்த்தாவாக (செய்பவனுக) இல்லாவிட்டாலும் காரியத்தை செய்விப்பவனுக இருக்கட்டுமே.

பதில் :— இல்லை. ஆத்மா செய்கையற்றதாலும் மாறுதல் இல்லாததாலும் செய்விக்கும் தன்மையும் அதற்குக் கிடையாது. ஆத்மாவிடத்தில் செய்விக்கும் தன்மை தோன்றுகிறதே எனில், ஜபாகுஸும நியாயம்போல்தான் உள்ளது. ஜபாகுஸும நியாயம் என்பது :— ஒரு வெண்மையான ஸ்படிக லிங்கத்தை வைத்து அதற்கு அருகில் சிவப்பு வர்ணத்தையுடைய செம்பரத்த புஷ்பத்தை வைத்துப்பார்த்தால் புஷ்பத்தின் சிவப்பு வர்ணம் ஸ்படிகத்தில்பட்டு, ஸ்படிகமும் சிவப்பு நிறமாகத் தோன்றும். ஆனுல் ஸ்படிகம் சிவப்பு வர்ணமற்றது என்பது நமக்குத் தெரியும். இதுபோல், ராகத்வேஷங்களில் உள்ள செய்விக்கும் தன்மை அறிவின்மை மயக்கத்தால் ஆத்மாவில் உள்ளதுபோல் அதன்பேரில் சுமத்தப்பட்டதேயாகும். அது ஆத்மாவுக்கு இயற்கையானது எனில் அதை நாசம் செய்வதற்கு யாரும் யத்தனம் செய்யமாட்டான். இயற்கை என்பது அதன் ஸ்வருபமானதால் ஸ்வபாவம் அழிந்தால் ஸ்வருபமே அழிந்துவிடும். மேலும் ஆத்மாவுக்கு செய்விக்கும் தன்மை உண்டு என்று சொல்லுவோமானுல், "ஆத்மா பற்றற்றது, செய்கையற்றது, செய்விக்கும் தன்மையுமற்றது" என்ற கருத்தைக்காட்டும் வேதவாக்யங்கள் பொய்யாகிவிடும். செய்விக்கும் தன்மை என்பது ஆத்மாவில் முன்னுல் இல்லாமல் புதிதாக உண்டானதாகச் சொன்னுல் அதனுல் ஏற்படும் முக்தியும் புதிதாக ஏற்பட்டதாக ஆகிவிடும். உண்டாகும் வஸ்து அழியக்கூடியபடியால் முக்தியும் ஒருகாலத்தில் போய்விடும். ஆத்மாவில் செய்விக்கும் தன்மை இருந்தால் அது ஸுஷுப்தியில் ஏன் தெரியவில்லை? ஆகையால் செய்விக்கும் தன்மை ஆத்மாவுக்கு இயற்கையாக உள்ளதல்ல. ராகத்வேஷங்களில் உள்ளதை ப்ராந்தியால் ஆத்மாவில் இருப்பதாக எண்ணுகிருர்கள்.

கேள்வி :— ஸுஷுப்தியில் ஆத்மாவுக்கு செய்விக்கும் தன்மை தெரிவதில்லை ஆகையால் ஆத்மாவுக்கு செய்விக்கும் தன்மை கிடையாது என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் ஒரு உதாரணம் பார்க்கலாம். உபாத்தியாயருக்கு சொல்

விக்கொடுக்கும் சக்தி இருந்தும் படிக்கும் சிஷ்யர்கள் எதிரில் இல்லாமலிருக்கும்போது அந்த சக்தி வெளியில் தெரிவதில்லை. அதுபோல் ஸுஷுப்தியிலும் மனது, வாக்கு, காயம் இவைகளின் சேர்க்கையில்லாததால் ஆத்மாவில் செய்விக்கும் தன்மை இருந்தும் அது காணப்படுவதில்லை. விழிப்பு, ஸ்வப்னவஸ்தை இவைகளில் இக்கரணங்களின் சேர்க்கை இருப்பதால் இந்த சக்தி வெளிப்படத் தெரிகின்றது. இப்படி சொல்லலாமல்லவா!

பதில்:— அப்படியானால் விழிப்பிலேயே ஒரு வேலையும் செய்யாமல் சும்மாயிருக்கும் ஸந்தர்ப்பத்தில் கரணங்களின் ஸம்பந்தமிருப்பதால் அப்போதும் ஆத்மாவிலுள்ள செய்விக்கும் தன்மை தெரியவேணுமே. அப்படிக் காணப்படுவதில்லையே. ஆகையால் செய்விக்கும் தன்மை என்பதும் ஆத்மாவுக்கு இயற்கையானதல்ல. ஒரு உதாஹரணம் சொல்லலாம். கொல்லன் உலையில் நெருப்பில் இரும்பை போட்டு பழுக்கக்காய்ச்சுகிறான். அங்கு நெருப்பும் இரும்பும் நெருங்கி இருப்பதால் இரும்பில் உள்ள நீளத்தன்மை குட்டைதன்மை நெருப்பிலும், நெருப்பில் உள்ள உஷ்ணத்தன்மை, பிரகாசிக்கும் தன்மை, முதலியவை இரும்பிலும் இருப்பது போல் தோன்றுகிறது அதுபோல் அக்ஞானத்தால் ராகம் துவேஷம் இவைகளில் உள்ள செய்விக்கும் தன்மை ஆத்மாவில் உள்ளதுபோலும், ஆத்மாவில் உள்ள செய்கையற்ற நிலை ராகதுவேஷங்களில் உள்ளது போலும் தோன்றுகிறது.

கேள்வி:— ராகத்வேஷங்கள் அசேதனங்கள் ஜடமானவை அசேதனத்துக்கு எப்படி செய்விக்கும் தன்மை வரும்? ஒரு குடம் மற்றொரு குடத்தை செய்விக்காதல்லவா?

பதில்:— ஆம் அதற்கு வேண்டிய யோக்கியதை சில இடங்களில் இருப்பதால் தூண்டுதல் செய்கிறது. சில இடங்களில் அந்த யோக்கியதை இல்லாததால் தூண்டுதல் செய்வதில்லை. எப்படி யெனில், அக்னி ஜடமானது தான். ஆனாலும் இது கந்தகத்துடன் கூடிய கரிப்பொடியுடன் (வெடி மருந்துடன்) சேர்ந்து ஜடமாயிருந்தபோதிலும் பெரிய இரும்புக்குழாயில் (பீரங்கியில்) இருக்கும் பெரியகற்களை (குண்டுகளை) ஏவி வெகுதூரத்தில் விழச்செய்து சதுரங்க ஸேனைகளையும் ஒழித்துவிடுகிறது. மேலும் மரணத்தை

அடைந்த ஒருவனுடைய ப்ரேத சரீரம் ஜடமாயிருந்தும் ஞாதிகளால் செய்யப்படும் உத்தரகிரியை விஷயத்தில் தான் காரயிதாவாக (செய்விக்கும் தன்மை கொண்டதாக) ஆகிறது இதுபோலவே ராகதுவேஷங்கள் அசேதனமாக இருந்த போதிலும் செய்விக்கும் தன்மை கொண்டவை. அப்படி யானால் 'ஆத்மா இந்திரியங்களை அடக்கியாள்பவன் எல்லா வற்றிலும் உள்புகுந்து நியமனம் செய்பவன்' என்ற வேத வாக்கியத்துக்கு என்ன அர்த்தம் எனில், சூரியனைப்போல் அருகில் இருப்பதனாலேயே எல்லா காரியங்களும் நடப்பதற்கு அனுகூலனாகிறான் என்று பொருள்.

கேள்வி:— ஆத்மா அருகில் இருப்பதால் எல்லா பிராணி களும் காரியங்களை செய்கிறார்கள் என்று ஒத்துக்கொண்டால் அப்படி நடத்தப்படும் புண்ணிய, பாபகர்மாக்களுக்கும் அதன் பலனுக்கும் ஆத்மா பாத்யப்பட்டதாகுமே.

பதில்:— அப்படி இல்லை.

சூரியன் தன் வெளிச்சத்தைக்கொடுத்து தனது ஸந்நிதி மாத்ரத்தால் எல்லா ஜனங்களும் புண்யத்தையோ, பாபத்தை யோ செய்வதற்குக்காரணமாகிறான். ஆனாலும் அவர்கள் செய்யும் புண்யமோ, பாபமோ அதன் பலன்களோ சூரியனிடம் ஒட்டுவதில்லை. இது போலவேதான் ஆத்மா விஷயத்திலும் பார்த்துக்கொள்ளவேண்டும். மற்றும் ஓர் உதாஹரணம். காந்தமானது தான் ஒரு செய்கையும் செய்யாமல் ஸந்நிதிமாத்ரத்தால் இரும்பைத்தன் அருகில் இழுக்கிறது. இரும்பு அசைந்து அருகில் வருவதற்கு காந்த ஸந்நிதி காரணமானாலும் காந்தத்தில் அசைவு ஒன்றும் ஏற்படுவதில்லை. இதுபோல் பிராணிகளின் கர்மா ஒன்றும் ஆத்மாவில் ஒட்டுவதில்லை ஆகையால் ஆத்மாவில் உள்ள குற்றமற்ற தன்மை மாறுபாடில்லாத்தன்மை ஆகியவை ராக துவேஷங்களினால் பாதிக்கப்படமாட்டாது.

இப்படி ப்ரஸித்தமான ஆத்மாவின் ஸ்வரூபம் குருவினால் உபதேசிக்கப்பட்டபோதிலும் பிரதிபந்தகங்களால் நிச்சயம் ஏற்படுவதில்லை. பிரதிபந்தகம் மூன்று வகைப்படும். 1) சந்தேகம் தோன்றுவது 2) இது எப்படி இருக்கமுடியும் என்ற அவநம்பிக்கை, (3) விபரீதமான எண்ணம் தோன்றுவது.

முதலாவது ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் ஆகியவைகளின் பற்பல சாகைகளில் சொல்லப்பட்ட உபநயனம் முதலிய கர்மாக்கள் அநேக ப்ரகாரங்களாக இருப்பது போல் அதே பற்பல சாகைகளில் உபதேசிக்கப்பட்ட ஆத்மதத்துவமும் பலவகைப்பட்டதா அல்லது ஒரே விதம் தானு என்று எண்ணுவது ஸம்சயபாவனை மேலே சொன்ன சந்தேகம் வேதாந்த சிரவணத்தால் விலகிவிடுகிறது. எல்லா உபநிஷத்துக்களுக்கும் அத்வைதமான ப்ரஹ்மத்தில் தான் தாத்பர்யம். அதாவது ஒரே கருத்துடன் அத்வைதத்தையே உபதேசிக்கின்றன என்ற நிச்சயம்தான் சிரவணமென்பது. இந்த சிரவணத்தால் ப்ரமாண விஷயமான ஸந்தேஹம் நீங்கியபோதிலும் ஒன்றுக்கொன்று வெவ்வேருன ஜீவன், ஈசுவரன், உலகம் இவை உண்மைப்பொருள் என்று தோன்றிக்கொண்டிருக்கும்பொழுது இந்த அத்வைதம் எவ்விதம் ஸம்பவிக்கும் என்று ஏற்படும் எண்ணம் அஸம்பாவனையாகும். இது மனனத்தால் தீரும் அதாவது ஸ்வப்ன த்ருஷ்டாந்தம் முதலான யுக்திகளால் சிந்தித்து அத்வைதம் பொருந்தும் என்று தீர்மானிப்பது மனனமாகும். இப்படி சிரவணம், மனனம் இவைகளால் சந்தேகம் நிவர்த்திக்கப்பட்டும் அனுதிகாலமாக வந்த அவித்யையால் ஏற்பட்ட வாஸனையால் ஜகத் வாஸ்தவமானது என்ற நம்பிக்கை கொண்டிருப்பது விபரீதபாவனை எனப்படும். இது நிதித்யாஸனத்தால்தான் தீரும் ஆத்மாவின் ஸ்வரூபத்தைப் பற்றி அறிந்ததை அடிக்கடி நினைத்து அதையே இடைவிடாமல், எண்ணெ நிறைந்த பாத்திரத்தை மெதுவாக சாய்த்து வந்தால் எப்படி எண்ணெ தொடர்ந்து விழுமோ அப்படி சிந்தனையில் வைப்பது நிதித்யாஸனம் எனப்படும்.

இப்படி நிதித்யாஸனம் செய்வதினுல் மேலே சொன்ன மூன்ருவதான விபரீத பாவனையும் நிவர்த்தியாகிறது. இவ்விதம் மூன்று பிரதிபந்தகங்களையும் (தடைகளையும்) ஒழிக்க முடியாவிடில், எல்லாவற்றையும் எரிக்கும் சக்தியையுடைய அக்னி எப்படி மணி, மந்திரம் இவைகளினுல் தடைசெய்யப்பட்டு ஒரு துரும்பையும் எரிக்க சக்தியற்றதாகுமோ அப்படி ஞானமாகிய அக்னியும் தடைகளால் தடுக்கப்பட்டு அக்ஞானத்தையும் அதன் விளைவுகளையும் கொஞ்சமும் நாசம் செய்ய முடியாததாகிறது. முன் சொல்லப்பட்ட வழியில்

மேலேசொன்ன மூன்று தடைகளும் நீக்கப்பட்டால், உடனடியாக துரும்பை தடைநீங்கிய அக்னி எரிப்பதுபோல் அஜ்ஞத்யையையும் அதன் விளைவுகளையும் ஞானம் நாசமடையச்செய்யும்.

மேலும் ஒரு அபிப்ராயத்தைத் தீர்மானம் செய்வதில் ஆறு லிங்கங்கள் (அடையாளங்கள்) உண்டு. அவைகளாவன:—

1. உபக்ரமம் — உபஸம்ஹாரம். ஆரம்பமும் முடிவும் ஒரே விஷயத்தை சொல்வது.
2. அப்யாஸம் — திருப்பித் திருப்பிச் சொல்வது.
3. அபூர்வதா — வேறு வழியில் தெரியமுடியாது என்பது.
4. பலம் — இதன் உபயோகம்.
5. உபபத்தி — காரணங்களால் நம்பும்படி செய்தல்.
6. அர்த்தவாதம் — உண்மையைப் புகழ்ந்து நம்பச்செய்தல்.

இந்த ஆறும் எந்த விஷயத்திற்கு ஒற்றுமையாக உள்ளதோ அதில்தான் அதற்குத் தாத்பர்யம் என்பதைத் தீர்மானம் செய்யலாம். சாந்தோக்ய உபநிஷத்தில் இதைப் பார்ப்போம்.

சாந்தோக்ய உபநிஷத்தில் 6-வது அத்யாயத்தில் "ஸத் ஒன்றுதான் முதலில் இருந்தது" என்று ஆரம்பித்து முடிவிலும் "எல்லாம் இந்த ஸத்ஸ்வரூபம்தான் இதுவே ஸத்யம்" என்று கூறப்பட்டிருக்கிறது. ஆரம்பத்திலும் முடிவிலும் ஒரே விஷயத்தைப்பற்றி பேசியிருப்பதால் இந்த உபநிஷத்துக்கே அகண்ட ப்ரஹ்மத்தில் தாத்பர்யம் என்று தெரியவருகிறது. இதுதான் முதலாவதான உபக்ரமோப ஸம்ஹாரங்கள்.

तत्त्वमसि என்ற உபதேசத்தை (சா - 6 - 8 - 7) ஒன்பது தடவை திருப்பித்திருப்பி விளக்கியிருப்பது அப்யாஸம் என்ற இரண்டாவது அடையாளம்.

பிரத்யக்ஷம், அனுமானம், முதலிய பிரமாணங்களைக் கொண்டு பிரம்மத்தை அறியமுடியாது. அனுபவத்தால்தான் அறியமுடியும் என்பது "அபூர்வதா" என்ற மூன்றாவது அடையாளம்.

அகண்டமான பிரம்மத்தை அறிந்தவன் பிராரப்தம் முடிந்தபின் விதேஹ கைவல்யம் அடைவதாகக் கூறியிருப்பது நால்காவது அடையாளம்.

அர்த்தவாதம் (புகழ்ந்துபேசுது) என்பது ஐந்தாவது.

எப்படி ஒரு மண்கட்டியின் ரூபத்தை அறிந்துகொண்டால் மண்ணால் செய்யப்பட்ட எல்லாக் காரியங்களும் அறிந்த தாகுமோ என்று உதாஹரணங்களினால் பிரம்மத்தை அறிய முடியும் என்று ருஜு செய்வது 'உபபத்தி' என்ற ஆருவது அடையாளம்.

மேலே ஐந்தாவதாகச் சொன்ன அர்த்தவாதம் என்ற ருஜு ஏழு வகைப்படும். ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம், பிரவேசம், ஸம்யமனம், சோதனம், பலன்.

1–3 ஸ்ருஷ்டி–ஸ்திதி–பிரளயம்:–தைத்திரீய உபநிஷத்தில் பிரபஞ்சம் பிரஹ்மத்திலிருந்தே உண்டானது அதிலேயே இருக்கிறது, அதிலேயே அழிகிறது என்று கூறப்பட்டிருக்கிறது மண்ணிலிருந்து உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே மறைந்து போகும் குடம் முதலிய கார்யங்கள் காரணமான மண்ணைக்காட்டிலும் வேருக இல்லை இதுபோலவே ப்ரஹ்மத்திலிருந்து உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே மறைந்து போகும் ஸகலபிரபஞ்சமும் பிரஹ்மஸ்வரூபம்தான் வேறு அல்ல என்று தீர்மானிக்கலாம். இதுதான் ஸிருஷ்டி, ஸ்திதி, பிரளயம் என்ற மூன்றுவித அர்த்த வாதங்கள்.

4. பிரவேசம் –'தலை உச்சியில் துவாரம் செய்துகொண்டு இந்த வழியாக உள்ளே பிரவேசித்தது' 'பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்து உள்ளே பிரவேசித்தது.' 'இந்த ஜீவாத்ம ரூபமாக உள்ளே நுழைந்து நாமரூபங்களை விளங்கச் செய்வேன்' இந்த வாக்யங்கள் பிரம்மமே ஜீவஸ்வரூபமாக உள்ளே நுழைந்திருப்பதாக கூறுகின்றன வெளியில் உள்ள மனிதன் வீட்டிற்குள் நுழைந்த போதிலும் அவன் எப்படி வேறு மனிதன் இல்லையோ இதுபோலவே ப்ரஹ்மமும் ஜீவனும் ஒன்றுதான் என்று தெரியவருகிறது.

5. ஸம்யமனம்:— "பூமியில் அதற்குள் இருந்துகொண்டு அதனுல் அறிந்து கொள்ளப்படாமல் அதையே சரீரமாகக்

கொண்டு நியமனம் செய்கிறான்" இது முதலான சுருதிகள் இருவரும் ஒன்று என்பதைக் காட்டுகின்றன.

6. பதார்த்த சோதனம் :— தத்பதார்த்தமான ஈசுவர ஸ்வரூபத்தையும் த்வம்பதார்த்தமான ஜீவஸ்வரூபத்தையும் சோதித்துக்காட்டும் சுருதி வாக்யங்கள் அவைகளில் உள்ள விருத்த தர்மங்களை நீக்குவதன்மூலம் இரண்டு ஸ்வரூபமும் ஒன்றுதான் என்பதைக் காட்டுகின்றன.

7. பலன் :—"ப்ரஹ்மத்தை அறிந்தவன் எல்லையற்ற நிரதிசய பலனையடைகிறான்". 'அவன் அமிருதனாக (அழிவற்றவனாக) ஆய்விட்டான்.' இம்மாதிரி வாக்யங்கள் ஜீவப்ரஹ்மைக்ய ஞானத்திற்கு மோக்ஷ பலனைக் கூறுவதன்மூலம் அதில் தாத்பர்யத்தைக் காட்டுகிறது.

இந்த ஏழுவிதமான அர்த்தவாத வாக்யங்களுடன் கூடி அவாந்தர வாக்யங்கள் அகண்டமான ஜீவப்ரஹ்மைக்யத்தை கருத்துடன் தெரிவிப்பதால் முன் சொல்லப்பட்ட ஆறுவித அடையாளங்களைக் கொண்டு மஹா வாக்யங்களுக்கும் ஜீவ ப்ரஹ்மைக்யத்தில்தான் தாத்பர்யம் என்பதை தீர்மானிக்க வேண்டும். இவ்விதமான தீர்மானம் ஏற்படுவதுதான் சிரவணமென்பது.

உலகில் ஸேநாதிபதியால் ஏவப்பட்டு ஸைன்யம் யுத்தம் செய்து ஜயத்தையடைகிறது. ஆனால் ராஜா தான் ஒரு காரியமும் செய்யாதபோதிலும் "நான் ஜயித்தேன்" என்று சொல்லிக்கொள்கிறான். இதுபோலவே ராகத்வேஷங்களால் தூண்டப்பட்டு மனம், வாக்கு, சரீரம் என்ற மூன்று கரணங்களும் புண்யம், பாபம், மிச்ரம் என்னும் மூன்றுவிதமான கர்மாக்களைச் செய்கின்றன. இதில் ஆத்மாவுக்கு ஒருவித ஸம்பந்தமும் இல்லை. ஆனாலும் அக்ஞானத்தால் ராகத்வேஷங்களிலுள்ள செய்விக்கும் தன்மையையும் கரணங்களிலுள்ள செய்யும் தன்மையையும் தன்னிடத்தில் ஏற்றிக்கொண்டு "நான் செய்கிறேன், நான் செய்விக்கிறேன்" என்று அபிமானம் கொள்கிறான். உண்மையில் ஆத்மாவுக்கு செய்யும் தன்மையோ, செய்விக்கும் தன்மையோ, கிடையாது என்று தீர்மானமாக அறிந்துகொள்பவன்தான் ஜீவன்முக்தன்.

இத்துடன் வர்ணகம் முற்றும்.

## ॥ षष्ठवर्णकम् ॥

पूर्वं प्रतिज्ञातदुःखादिसप्तके दुःखं शरीरं कर्म रागद्वेषादिश्चोत्तरोत्तरहेतुत्वेनोक्तानि । इदानीं षष्ठवर्णके रागद्वेषादिवृत्तिभेदा अभिमानोविवेकोऽज्ञानं च कथ्यन्ते । रागो द्वेषः कामः क्रोधो लोभो मोहो मदो मात्सर्यमीर्ष्याऽसूया दम्भो दर्पोऽहंकार इच्छा भक्तिः श्रद्धेति रागद्वेषादिवृत्तयः षोडश । स्त्रीविषयकचित्तवृत्ती रागः । अपकारकर्तुः प्रत्यपकारेच्छा द्वेषः । गृहक्षेत्रादिसंपादनेच्छा कामः । तत्र विघ्नकर्तरि वैरस्यं क्रोधः । स्वसंपादितेषु किंचिदपि सत्पात्रे न देयमिति बुद्धिर्लोभः । ऐश्वर्यमदेन कृत्याकृत्यमविचार्य तूष्णीं अवस्थानं मोहः । स्वस्य संपदस्ति, किं वा कर्तुमशक्यमिति बुद्धिर्मदः । स्वसमानसंपन्नजनदर्शनासहनं मात्सर्यम् । इदं दुःखं तं विहाय मम किमित्यागतमिति चित्तवृत्तिरीर्ष्या । इदं सुखं ममैव, तस्यापि किमित्यागतमिति बुद्धिरसूया । अनेन धर्मेण मम प्रसिद्धिर्भूयादिति चित्तवृत्तिर्दम्भः । मम न कोऽपि समान इति बुद्धिर्दर्पः । सर्वत्राग्रहोऽहंकारः । अवर्जनीयप्राशनविमोचनादिकर्मचिकीर्षा इच्छा । गुरौ सज्जनेषु देवतासु चातिप्रीतिर्भक्तिः । यागादिकर्मसु वेदान्तवाक्येषु गुरूपदेशे च विश्वासः श्रद्धा । इति षोडशविधो रागद्वेषादिः ॥

आत्मविचारप्रकरणे चित्तवृत्तिविचारस्य किं प्रयोजनमिति चेत्, शृणु । सकलजीवानां बन्धमोक्षौ मनसैव नान्येन । कथमिति चेत्— स्वभावनिर्मलस्य मनसोऽशुद्धेन योगो बन्धः । शुद्धरूपेणावस्थानं मोक्षः । रागादिचतुर्दशवृत्तयोऽप्यशुद्धाः । भक्तिश्रद्धे द्वे अपि शुद्धे । रागादित्रयोदशवृत्तयः सर्वेषां प्रयत्नं विनैव पुनः पुनरागच्छन्ति पापेष्वेव मनुष्यान् प्रवर्तयन्ति च । तद्वृत्तिशीलानामधोगतिरेव नोर्ध्वगतिः । रागादिवृत्तीर्निरुध्य भक्तिश्रद्धाभ्यामेव कर्म कुर्वतः क्रमेण

संसारनिवृत्तिर्भविष्यति । तस्मात्पुरुषः स्वचित्तं सम्यक्शोधयित्वा अशुद्धिहेतुरागादिवृत्तीर्वर्जयित्वा शुद्धिहेतुभक्तिश्रद्धयोरेव चित्तं स्थापयेत् । इच्छया क्रियमाणं क्षुत्पिपासानिवृत्तिमूत्रपुरीषविसर्जनादि कर्म च त्यक्तुमशक्यम् । तत्त्यागे सत्यपि दुःखमागच्छति । तेन कर्मणा स्वर्गोऽपि नास्ति नरकोऽपि नास्ति । तस्मादेतच्छिक्क्षं प्राशनमोचनादिकं कर्म कर्तव्यमेव ॥

एवं जाग्रत्स्वप्नयोः रागादौ सति कर्मास्ति, सुषुप्तिमूर्च्छासमाधितूष्णींभावावस्थासु रागादि नास्ति कर्मापि नास्ति, इत्यन्वयव्यतिरेकाभ्यां रागादेः कर्महेतुत्वं सिद्धम् । इतः परं स रागादिः केनागच्छतीति चेत्, अभिमानेनागच्छति । एवं व्याप्तिरस्ति वेति चेत्, अस्ति । स्त्रीजनस्य 'अहं स्त्रीजनः' इति यावानभिमानोऽस्ति तावती रागादिपूर्वकं भर्तृशुश्रूषागृहरक्षापाकक्रियादिकर्मसु प्रवृत्तिरागच्छति । पुरुषजनस्यापि 'अहं पुरुषः' इति यावानभिमान आगच्छति तावती रागादिपूर्वकं दारादिपरिग्रहे कृषिवाणिज्यादिकर्मसु च प्रवृत्तिरागच्छति । एवं सर्वेषां जीवानामपि वर्णाश्रमाद्यभिमानेन रागादिपूर्वकं स्वस्वव्यापारे प्रवृत्तिरागच्छति । तस्माद्रागादेरभिमान एव कारणम् ॥

अस्य विचारस्य किं फलमिति चेत्, मुमुक्षुः पुरुषो जातिवर्णाश्रमवयोवस्थाद्यभिमानं त्यजेत्, तस्मिंस्त्यक्ते बन्धस्त्यक्तो भवेदिति जानीहि । अभिमाने सति रागादिः, अभिमानाभावे रागाद्यभाव इत्यन्वयव्यतिरेकयुक्त्या च जानीहि । तत्कथमिति चेत्—जाग्रदाद्यवस्थासु वर्णाश्रमाद्यभिमानस्य विद्यमानत्वाद्रागद्वेषादिनिमित्ता प्रवृत्तिरागच्छति, सुषुप्तावुदासीनावस्थायां च वर्णाश्रमाद्यभिमानाभावाद्रागद्वेषादिनिमित्ता प्रवृत्तिर्नास्तीत्येतज्जानीहि ॥

तर्ह्ययमभिमानः केनागच्छतीति चेत्, अविवेकेनागच्छति। तत्कथमिति चेत्,—सर्वेषां जीवानां देहव्यतिरिक्तत्वे सत्यपि विवेकाभावादेव 'अहं ब्राह्मणः' 'अहं क्षत्रियः' 'अहं वैश्यः' 'अहं शूद्रः' 'अहं ब्रह्मचारी' 'अहं गृहस्थः' 'अहं वानप्रस्थः' 'अहं संन्यासी' 'अहं पुरुषः' 'अहं स्त्री' इत्याद्यभिमानो जायते। तं विना नान्यो हेतुः। अस्याभिमानस्याविवेकं विना अन्यच्छरीरमवलम्बनमस्ति चेत्, क्षत्रियस्य 'अहं ब्राह्मणः' इति, स्त्रियाः 'अहं पुरुषः' इति, ब्रह्मचारिणः 'अहं गृहस्थः' इत्यभिमानोऽस्तु। स न दृश्यते। तस्माच्छरीरमवलम्ब्याभिमानो नागच्छति। शिखायज्ञोपवीतादिकमवलम्ब्य 'अहं ब्राह्मणः' इति, काषायकमण्डल्वादिकमवलम्ब्य 'अहं संन्यासी' इति चाभिमान आगच्छत्विति चेत्। शिखायज्ञोपवीतादि वैश्यकुलालयोरप्यस्ति। काषायकमण्डल्वादि केषांचिच्छूद्राणां तपस्विनामप्यस्ति। तेषामेतेषां च 'अहं ब्राह्मणः' 'अहं संन्यासी' इत्यभिमानः स्यात्। तथा न दृश्यते। स्त्रीपुरुषाभिमानवदवयवविशेषमवलम्ब्य 'अहं ब्राह्मणः' इत्याद्यभिमान इति चेत्, सर्वेषामप्यवयवविशेषाभावादेकरूपत्वादवयवविशेषोऽप्यवलम्बनं न भवति। तर्हि विशिष्टमातृपितृजन्यावयवविशेषमवलम्ब्याभिमानविशेष इति चेत्, तज्जन्यरोमनखदन्तमूत्रपुरीषाद्यवयवानामपि ब्राह्मणत्वादिव्यवहारः स्यात्। स न दृश्यते। तस्मादविवेकं विना अन्यत्किमप्यवलम्ब्याभिमान आगच्छतीति ब्रह्मणापि वक्तुं न शक्यते॥

तर्हि ब्राह्मणत्वाद्यभिमानः केनागच्छतीति सम्यग्विचार्यमाणे लोके 'उत्सवः' इति 'कल्याणम्' इति 'सभा' इति 'सेना' इत्यनेकवस्तुसमूहस्य तत्तन्नाम्ना व्यवहारः प्रवर्तते। तथा मायामयस्यानिर्वचनीयस्य देहेन्द्रियादिसंघातरूपेण लोकव्यवहारेण केवलम्

'ब्राह्मणः' 'क्षत्रियः' 'वैश्यः' 'शूद्रः' 'स्त्री' 'पुरुषः' 'नपुंसकः' 'गुर्जरः' 'महाराष्ट्रकः' 'आन्ध्रः' 'कर्णाटकः' 'द्राविडः' 'शास्त्री' 'दीक्षितः' 'पौराणिकः' 'अवधानी' 'गङ्गास्नायी' 'शैवः' 'भागवतः' 'सेवकः' 'प्राधानिकः' 'राजा' 'मन्त्री' 'गुरुः' 'शिष्यः' इत्यादिसकलनामव्यवहारः। कालत्रयेऽप्यात्मनो नामरूपव्यवहारो नास्ति। इत्येवंरूपविचाराकरणमेवाविवेकः। अनेनैवाविवेकेन सर्वेषामात्मनि वर्णाश्रमाद्यभिमान आगच्छति ॥

अयमविवेकः केनागच्छतीति चेत्, स्वस्य निजस्य चिदात्मरूपस्यानादिकालमारभ्य आवारकमात्मज्ञानैकापनोद्यं यदनाद्यज्ञानं तदेव कारणम्। इदमेवाज्ञानम् 'मामहं न जानामि' इति व्यवह्रियते। ननु लोके भ्रान्तमेकं विना को वा आत्मानं न जानातीति चेत्, सर्वे भ्रान्ता एव। तत्कथमिति चेत्, 'अहं ब्राह्मणः' 'अहं क्षत्रियः' 'अहं वैश्यः' 'अहं शूद्रः' 'अहं ब्रह्मचारी' 'अहं गृहस्थः' इत्यादिरूपेण मिथ्याभूतमिमं देहमेव सर्वे जानन्ति। शरीरव्यतिरिक्तमात्मानं न कोऽपि जानाति। अतः सर्वे भ्रान्ता एव ॥

ननु लोके केचिच्छास्त्रज्ञाः पौराणिकाश्च देहमनात्मत्वेन मन्यमाना घटकुड्यसंनिभं देहं विहायान्यमेवात्मानं जानन्ति; हे स्वामिन्, भवद्भिः 'आत्मानं न कोऽपि जानाति' इति कथमुच्यत इति चेत्, हे पुत्र, तेऽपि परमार्थमात्मानं न जानन्ति। किं तु कर्तारं भोक्तारं परिच्छिन्नं लोकान्तरगामिनं चिदाभासरूपं व्यावहारिकं जीवात्मानमेवात्मत्वेन जानन्ति। तं विना अकर्तारमपरिच्छिन्नमचलं चिद्रूपं पारमार्थिकमात्मानं न जानन्ति ॥

इदमज्ञानं केनागतमिति चेत्, अस्यानादित्वेन वेदेषु शास्त्रेषु च प्रसिद्धत्वात्कारणं वक्तुं न शक्यते। तर्हि तस्याज्ञानस्यादिर्नास्ति चेदन्तोऽपि नास्तीति निश्चयः; तथा चेज्जीवस्य मुक्तिरपि न स्यादिति चेत्, शृणु। अज्ञानस्य आदेरभावेऽप्यन्तोऽस्त्येव। लोके केषांचित्पदार्थानामादेरभावेऽप्यन्तोऽस्ति। केषांचिदन्ताभावेऽप्यादिरस्ति। तत्कथमिति चेत्। प्रागभावस्यादिर्नास्ति, अन्तोऽस्ति। प्रध्वंसाभावस्यान्तो नास्ति, आदिरस्ति। किं च वातपित्तश्लेष्म-जन्यव्याधेर्मूलाज्ञानेऽपि वैद्यकशास्त्रोक्तौषधैर्यथा निवृत्तिर्दृश्यते, तथाऽज्ञानस्य मूलाज्ञानेऽपि वेदान्तशास्त्रोक्तवाक्यजन्यज्ञानेन नाशो भवतीति सिद्धान्तः। अस्याज्ञानस्य स्वरूपलक्षणं किमिति चेत्, तद्दुर्वचम्। तथा हि – तदज्ञानं न सत्, नासत्, नापि सदसत्; न सावयवम्, न निरवयवम्, नोभयात्मकम्; न भिन्नम्, नाभिन्नम्, न भिन्नाभिन्नम्; किं त्वनिर्वचनीयम्। तत्कथ-मिति चेत्। तत्त्वज्ञानेन बाधितत्वान्न सत्। शशविषाणनरविषाण-गगनारविन्दादिवन्नाप्यसत्, 'अहमज्ञः' इति सर्वैरनुभूयमानत्वात्। नापि सदसत्, परस्परविरोधात्। स्थूलाकाशः सूक्ष्मः; तस्मादपि सूक्ष्मोऽपञ्चीकृत आकाशः; तस्मादपि सूक्ष्मा गुणाः; तेभ्योऽपि सूक्ष्ममज्ञानम्; तस्मात्सूक्ष्मस्यापि मूलकारणत्वादज्ञानं न सावयवम्। स्थूलपदार्थजगदाकारेण परिणामान्न निरवयवम्। अन्योन्यविरोधा-न्नोभयात्मकम्। आत्मनो भिन्नमिति चेदद्वैतश्रुतिविरोधादात्मसत्ता-व्यतिरिक्तसत्ताऽभावाच्च न भिन्नम्। अभिन्नमिति चेदात्मशक्तित्वा-भावप्रसङ्गात्। 'पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते' इति श्रुतिविरोधाच्च तदपि न संभवति। किं च आत्मनो जडत्वं मायाया वा चेतनत्वं स्यात्, आत्मनोऽविद्यादिनाम्ना च भवितव्यम्, आत्मनः सच्चिदानन्द-स्वरूपस्यानृतजडदुःखत्वमपि स्यात्; तस्मान्नाभिन्नम्। भिन्नाभिन्नयोः विरोधान्नोभयात्मकम्। तस्मादज्ञानमनिर्वचनीयमेव ॥

एवंभूतादनादेरज्ञानादविवेकः, तस्मादभिमानः, तस्माद्राग-द्वेषादिः, तेन कर्म, कर्मणा शरीरम्, तस्माद्दुःख सांसारिकमात्मनोऽज्ञानात्परंपरया भवतीति ज्ञातव्यम्। तर्ह्येतद्दुःखं कदा गमिष्यतीति चेत्, शरीरे गते सति दुःखं गमिष्यति। शरीरं च कर्मणि नष्टे सति नश्यति। कर्म च रागद्वेषादौ नष्टे सति नश्यति रागद्वेषादिश्चाभिमाने नष्टे सति नश्यति। अभिमानश्चाविवेके नश्यति सति नश्यति। अविवेकश्चाज्ञाने नश्यति सति नश्यति। अज्ञानं चाद्वैतब्रह्मस्वरूप-स्यात्मनः स्वस्य दृढनिश्चयरूपेण 'ब्रह्मैवाहं', 'अहं ब्रह्मास्मि' इति महावाक्यजन्यज्ञानेन विनश्यति नान्येनेति ज्ञातव्यम्॥

ननु ब्रह्महत्यादिमहापातकान्यपि प्रायश्चित्तरूपसत्कर्मभिर्निःशेषं नश्यन्ति; तादृशकर्मशक्त्याऽल्पं मिथ्याभूतमिदमज्ञानं किमिति न गच्छेदिति चेत्। कर्मणोऽज्ञानस्य च विरोधो नास्ति। कर्म अज्ञानं वर्धयति। यथा अमावास्यान्धकारं मेघावरणं वर्धयति, तथा कर्म अज्ञानं वर्धयति, न निवर्तयति। तमन्धकारं यथा सूर्यो निवर्तयति तथा अज्ञानं ज्ञानमेव निवर्तयेत्, न कर्म॥

ननु त्रिविधकरणजन्यं कर्म हि; ज्ञानस्याप्यन्तःकरणजन्यवृत्ति-त्वेन कर्मत्वात्तत्कथमज्ञानं नाशयेदिति चेत, शृणु। सत्य वृत्तिर्मानसं कर्मैव। सा वृत्तिर्ज्ञानस्याज्ञाननिवर्तने रूपग्रहणे नेत्रवदुपाधिभूतैव; न स्वयं निवर्तिका। ज्ञानं तु निवर्तकं नित्यम्। तज्ज्ञानं स्वरूप-ज्ञानं वृत्तिज्ञानमिति द्विविधम्। तत्र सुषुप्तावज्ञानप्रकाशकं ज्ञानं स्वरूपज्ञानम्। जाग्रत्स्वप्नयोर्विषयप्रकाशकं वृत्तिज्ञानम्। यथा आदित्येन प्रकाश्यमाने कुड्येऽनेकदर्पणादित्यदीप्तयश्च तासां मध्ये मध्ये स्वादित्यदीप्तिश्च, तथा जाग्रत्स्वप्नयोर्वृत्तिज्ञानप्रकाशाः सुषुप्तौ स्वरूप-ज्ञानप्रकाशश्चेति ज्ञेयम्॥

तर्हि जाग्रत्स्वप्नयोः स्वरूपज्ञानं नास्ति किमिति चेत्। स्वरूपज्ञानं सर्वदा सर्वास्ववस्थास्वप्यस्ति वृत्तयः सुषुप्तौ न सन्ति। वृत्तयः सर्वा अप्यन्तःकरणधर्माः। ज्ञानात्मस्वरूपम्। तत्स्वरूपभूतं ज्ञानं वृत्तिषु प्रविश्याज्ञानं नाशयति। केवला बुद्धिवृत्तिरज्ञानं नाशयितुं नेष्टे। तस्मादात्मनोऽज्ञानमप्यात्माकारवृत्तिप्रविष्टेन स्वरूपज्ञानेनैव विनाश्य न बुद्धिवृत्त्या। न कर्मकोटिसहस्रेणापि विनाश्यम्। यथा सत्कर्मैव पापकर्म नाशयति, एवं वृत्तिज्ञानमेवाज्ञानं नाशयति। यथा माणिक्यं शिलारूपमपि प्रकाशयुक्तत्वेन रत्नदीपमिति व्यवह्रियते, एवं वृत्तिज्ञानस्यापि मनोवृत्तिरूपत्वेऽपि स्वप्रविष्टस्वरूपज्ञानयुक्तत्वाज्ज्ञानमिति व्यवहारो गौणः, न कर्मेति व्यवहारः ॥

ननु सुषुप्तौ स्वरूपज्ञानस्याज्ञानप्रकाशकत्वेन विरोधाभावात्कथं ज्ञानमज्ञानं नाशयेदिति चेत्, स्वरूपज्ञानस्याज्ञानेन विरोधाभावेऽपि वृत्तिज्ञानस्याज्ञानेन विरोधोऽस्ति। वृत्तौ प्रविष्टस्यापि ज्ञानस्य स्वरूपज्ञानत्वात्कथमज्ञानेन विरोध इति चेत, लोके तृणादेः प्रकाशकत्वेनादित्यकिरणस्य तेन विरोधाभावेऽपि सूर्यकान्तप्रविष्टस्य तस्यैव यथा तृणादिदाहकत्वेन तेन विरोधः, तथा स्वरूपज्ञानस्य केवलस्याज्ञानेन विरोधाभावेऽपि वृत्तिप्रविष्टस्य तस्याज्ञानेन विरोधोऽस्ति ॥

ननु वृत्तिज्ञानेनाज्ञानतत्कार्यनाशेऽपि वृत्तेस्तत्प्रविष्टज्ञानस्यापि विद्यमानत्वात्कथमद्वैतं सिध्येदिति चेत्, कतकरजोन्यायेन वृत्तिज्ञानमप्यज्ञानं तत्कार्यं च निवर्त्य स्वमपि स्वयमेव निवर्तयेत्। वृत्तिनाशे सति वृत्तौ प्रतिबिम्बितं ज्ञानमपि बिम्बभूतं स्वरूपज्ञानमेवाधिगच्छति। ततोऽद्वैतमात्मस्वरूपमेवावशिष्यते। एवं ज्ञानेनैवाज्ञानस्य विनाशः ॥

एवंभूतं ज्ञानमात्मविचारेणैवागच्छति न तु कर्मभिर्न योगेन नोपासनया वा। ज्ञानं वस्तुतन्त्रम्, अत एव कर्तुमकर्तुमन्यथा

कर्तुमशक्यम्। उपासना योगश्च पुरुषतन्त्रत्वात्कर्तुमकर्तुमन्यथा कर्तुं शक्यौ। ताभ्यां चित्तैकाग्रयमणिमाद्यष्टैश्वर्यं च साध्यते, न तु ज्ञानम्। उपासनायोगौ मनोव्यापाररूपत्वात्क्रियात्मकौ न वस्तुतन्त्रौ। तस्माद्वस्तुतन्त्रं ज्ञानं कर्मणा नायाति, किं तु विचारेणैव साध्यम्। सालिग्रामो रत्नं सुवर्णमित्यादिवस्तुनिर्णयो लक्षणपरीक्षाभ्यां निघर्षणेन च कर्तव्यः, न तु स्नानसंध्यावन्दनप्राणायामादिना कस्यापि साध्य इति निर्णयः। एवमात्मज्ञानमप्यात्मानात्मविचारं विनोपासनादिभिः साधयितुं न शक्यते। तस्मान्मुमुक्षुरितरव्यापारं विहाय श्रवणमननाभ्यां सदा आत्मानात्मविचारमेव कुर्यात्। य एवं तदेकपरः सोऽस्मिन्नेव जन्मनि संसारबन्धाद्विमुक्तः सन् जीवन्मुक्तिं विदेहमुक्तिं च प्राप्नोतीति सकलवेदान्ता घोषयन्ति। एवं मयोक्तं हे पुत्र, त्वं विश्वासेन गृहीत्वा चिन्मात्रेण तिष्ठ, न तु कदाचिदपि कर्तृत्वादिरूपेण तिष्ठ॥

इति षष्ठवर्णकम्॥

---

## ஆறுவது வர்ணகம்

நான்காவது வர்ணகத்தின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட துக்கம் முதலான ஏழுபதார்த்தங்களில் துக்கம், சரீரம், கர்ம, ராகத்வேஷங்கள் இந்நான்கும் ஒன்றுக்கொன்று காரணமாகிறது. அதாவது துக்கத்திற்குக் காரணம் சரீரம், சரீரத்திற்குக் காரணம் கர்மா, கர்மாவுக்குக் காரணம் ராகத்வேஷங்கள் இந்நான்கும் 4வது 5வது வர்ணகங்களில் விவரிக்கப்பட்டன. இந்த 6-வது வர்ணகத்தில் ராகம் துவேஷம் முதலிய அந்தக்கரணத்தினுடைய விருத்தி பேதங்களும் அபிமானம் (பற்றுதல்), அவிவேகம், அஞானம் இவைகளும் விளக்கப்படும். ராகதுவேஷாதி விருத்திகள் 16 அவையாவன:—

1. ராகம், 2. துவேஷம், 3. காமம், 4. கோபம், 5. லோபம்; (ஜயாத்தனம்) 6. மோஹம், 7. மதம்,

8. மாத்ஸர்யம் 9. ஈர்ஷ்யை, 10. அசூயை, 11. டம்பம், 12. தர்ப்பம், 13. அஹங்காரம், 14. இச்சை, 15. பக்தி 16 சிரத்தை.

இவைகளின் விளக்கமாவது:—

1. ஸ்திரீ விஷயமாக விஷயசுகத்தில் உண்டாகும் எண்ணம் ராகம் என்பது.

2. தனக்குக் கெடுதல் செய்தவனுக்கு மறு கெடுதல் செய்யும் எண்ணம் துவேஷம்.

3. வீடு, வயல் முதலியவைகளை சம்பாதிக்கும் எண்ணம் காமம்.

4. மேலே சொன்ன சொத்தை அடைவதில் தடை செய்பவர்களிடம் காட்டும் வெறுப்புணர்ச்சி கோபம்.

5. தான் சம்பாதித்த சொத்தில் கொஞ்சமும் நல்லவர் களுக்குக்கொடுக்கக்கூடாது என்ற எண்ணம் லோபம்.

6. தனக்கு ஐசுவரியம் இருக்கிறது என்ற கர்வத்தால் எதை செய்யவேணும் எதைச்செய்யக்கூடாது என்று யோசிக்காமல் சும்மா இருப்பது மோஹம்.

7. எனக்கு சொத்து இருக்கிறது. எதுதான் என்னுல் செய்யமுடியாது என்ற எண்ணம் மதம்.

8. தனக்கு ஸமானமான சொத்துள்ள இதரர்களைக் கண்டால் ஸகிக்காமல் இருப்பது மாத்ஸர்யம்.

9. இந்தக்கஷ்டம் அவனைப்பீடிக்காமல் என்னை ஏன் பீடிக்கிறது என்று ஏண்ணுவது ஈர்ஷ்யை.

10. இந்த சுகம் எனக்குத்தான் உரிமையானது. இது எப்படி அவனுக்கும் கிடைத்தது என்று எண்ணுவது அசூயை.

11. இந்த தர்மத்தை நான் செய்வதினுல் எனக்குக் கீர்த்தி ஏற்படும் என்று எண்ணுவது டம்பம்.

12. எனக்கு ஸமானமானவன் உலகில் யாரும் இல்லை என்ற எண்ணம் தர்ப்பம்.

13. எல்லாவற்றிலும் பிடிவாதம் அஹங்காரமாகும்.

14. யாராலும் விலக்கமுடியாததான உண்பது மலஜலம் விடுவது முதலிய காரியங்களை செய்யும் எண்ணம் இச்சையாகும்.

15. குருவிடமும், நல்லவர்களிடமும், தேவதையிடத்திலும் அதிகப்ரீதிவைப்பது பக்தி.

16. வேதாந்த வாக்கியத்திலும், யாகம் முதலிய காரியங்களிலும், குருவின் உபதேசத்திலும் நம்பிக்கை கொள்வது சிரத்தை.

கேள்வி:—ஆத்மாவைப்பற்றி விசாரிக்கும் போது மனதின் எண்ணங்களைப்பற்றி ஏன் விசாரிக்கவேண்டும்?

பதில்:— எல்லா ஜீவர்களுக்கும் பந்தம், மோக்ஷம் என்பது மனதின் மூலமாகத்தான் ஏற்படுகிறது. எப்படியெனில் ஸ்வபாவமாகவே நிர்மலமாக உள்ள மனதுக்கு அசுத்தமான எண்ணத்துடன் சேர்க்கையே பந்தமாகும் இதுவே அசுத்தம் நீங்கி இருக்கும் தன்மை மோக்ஷமாகும். மேலே சொன்ன ராகம் துவேஷம் முதலான 16 வகைகளில் முதல் 14 வகைகள் அசுத்தமான எண்ணங்கள் பக்தி, சிரத்தை இரண்டும் சுத்தமான எண்ணங்கள். முதல் 13 வகைகளும் எல்லோருக்கும் பிரயத்னமில்லாமலேயே மறுபடியும் மறுபடியும் வந்துகொண்டிருக்கும் இவை மனிதர்களை பாபம் செய்வதிலேயே தூண்டும். இந்த எண்ணங்கள் உடையவர்களுக்கு முற்றிலும் கேடான நிலைமைதான் கிடைக்குமே தவிற மேலே போகும் நிலைமையே ஏற்படாது. ராகதுவேஷங்களை நீக்கி, பக்தி, சிரத்தை இவைகளுடன் கர்மாக்களை செய்வதனால் காலக்கிரமத்தில் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறும் நிலைமை ஏற்படும். ஆகையால் மனிதன் தன்னுடைய மனதை நன்கு தூய்மை உள்ளதாகச்செய்து அசுத்தத்தைக்கொடுக்கும் ராகம் முதலானவைகளை விலக்கி சுத்தியைக்கொடுக்கும் பக்தி சிரத்தைகளிலேயே மனதை நிலை நிறுத்தவேண்டும். பசி தாகங்களைப்போக்குவதும், மூத்ரபுரீஷங்களை விடுவதும் தன் இச்சையினால் செய்யக்கூடியது. இவைகளை நிறுத்தமுடியாது நிறுத்தினாலும் கிலேசம்தான் உண்டாகும். சாப்பிடுவதாலும் மலஜல விஸர்ஜனம் செய்வதாலும் நன்மையான ஸ்வர்க்கமோ தீமையான நரகமோ இரண்டும் ஏற்படுவதில்லை.

ஆகையால் தன் இச்சையாக சாப்பாட்டையும் மலமூத்ர விஸர்ஜனத்தையும் செய்யத்தான் வேண்டும்.

இவ்விதம் விழிப்பு, ஸ்வப்னம் இரண்டிலும் ராகதுவேஷங்கள் இருக்கும்போது கர்மா ஏற்படுகிறது. ஸுஷுப்தி, மூர்ச்சை, ஸமாதி, சும்மா இருத்தல் ஆகிய நிலைகளில் ராகதுவேஷாதிகள் இல்லை. ஆகையால் கர்மாவும் அப்போது இல்லை. அதனுல் ராகதுவேஷங்கள்தான் கர்மாவுக்குக் காரணம் என்று தீர்மானமாகத்தெரிகிறது.

இந்த ராகதுவேஷங்கள், எதனுல் உண்டாகிறது என்று கேட்டால், அபிமானம் (பற்றுதல்) என்பதால் என்று பதில். உதாஹரணமாக, ஒரு ஸ்திரீக்கு தான் 'ஸ்திரீ' என்ற அபிமானம் எதுவரையில் இருக்குமோ அதுவரையில், அனுராகத்துடன் புருஷனுக்கு பணிவிடை செய்தல், வீட்டை கவனிப்பது, சமையல் செய்வது, இவைகளில் ஈடுபாடு உண்டாகிறது. புருஷனுக்கும் "நான் புருஷன்" என்ற அபிமானம் எதுவரையில் இருக்கிறதோ அதுவரையில் ஆசையுடன் மனைவி குழந்தைகள் ஆகியவர்களை ரக்ஷிக்கிருன், வியாபாரம், விவசாயம் முதலிய காரியங்களை நடத்துகிருன். இப்படியே எல்லா ஜனங்களும் வர்ணம் ஆசிரமம் முதலிய பற்றுதலால் அவரவர்களின் காரியங்களை ஆசையுடன் செய்வதில் முயல்கிருர்கள். ஆகையால் ராகதுவேஷங்களுக்கு அபிமானம் (பற்றுதல்)தான் காரணமாகிறது.

இதைப் பரிசீலனை செய்வதினுல் என்ன பிரயோஜனம்? மோக்ஷத்தை அடைய விரும்பும் மனிதன், ஜாதி, வர்ணம், ஆசிரமம், வயது, அவஸ்தை முதலியவைகளில் பற்றுதலை விட்டுவிடவேண்டும். அப்படி விட்டால் பந்தம் விட்டுப் போகும். பற்றுதல் இருக்கும் வரையில் ராக துவேஷங்கள் இருக்கும். பற்றுதல் இல்லாவிடில் ராக துவேஷங்களும் இல்லை. மற்ருெரு வழியில் இதைப் பார்ப்போம். விழிப்பு, ஸ்வப்னம் முதலிய நிலைகளில் வர்ணம், ஆசிரமம் முதலியவைகளில் பற்றுதல் இருப்பதால் ராக துவேஷங்கள் மூலமாக காரியத்தில் பிரவிருத்தி ஏற்படுகிறது. ஸுஷுப்தியிலும், சும்மா இருக்கும் நிலையிலும் வர்ணுசிரம பேத பற்றுதல் இல்லாததால் ராகத்வேஷாதி மூலமாக கர்மாவில் பிரவிருத்தி ஏற்படுகிறதில்லை.

அப்படியானால் இந்தப் பற்றுதல் எதனால் ஏற்படுகிறது? அவிவேகத்தால் ஏற்படுகிறது. எப்படியெனில், ஜீவன் தேகத்தை விட வேறாக இருந்தும் விவேகமின்மையால் "நான் பிராம்மணன்" "நான் க்ஷத்திரியன்" "நான் வைசியன்" "நான் சூத்திரன்" "நான் பிரம்மசாரி" "நான் கிருஹஸ்தன்" "நான் வான பிரஸ்தன்" "நான் ஸந்நியாஸி" "நான் புருஷன்" "நான் ஸ்திரீ" என்ற அபிமானம் ஏற்படுகிறது. ஆகையால் அபிமானத்திற்கு அவிவேகம்தான் காரணம். வேறு காரணமில்லை. அபிமானத்திற்கு சரீரம் காரணமாக இருக்கமுடியாது. எல்லோருக்கும் சரீரம் இருப்பதால் க்ஷத்திரியனுக்கு "நான் பிராஹ்மணன்" என்றும், பெண்ணுக்கு "நான் புருஷன்" என்றும், ப்ரஹ்ம சாரிக்கு "நான் கிருஹஸ்தன்" என்றும் அபிமானம் ஏற்படட்டுமே! இவ்விதம் ஏற்படுகிறதில்லையே! அதனால் சரீரத்தை மட்டும் காரணமாகக் கொண்டு அபிமானம் ஏற்படுகிறதில்லை. அவிவேகத்தால்தான் ஏற்படுகிறது

குடுமி, பூணூல் இதைக்கொண்டு பிராஹ்மணன் என்றும், காஷாயம், கமண்டலு இவைகளைக் கொண்டு சந்நியாசி என்றும் பற்றுதல் வரலாமே என்றால் அது சரியல்ல, குடுமி, பூணூல் வைசியர்களுக்கும் குயவர்களுக்கும் கூட உண்டு. அவர்களுக்கு "நான் பிராஹ்மணன்" என்ற அபிமானம் ஏற்படுகிறதில்லை. காஷாயம், கமண்டலு இவை சில தபஸ்விகளான சூத்திரர்களுக்கும் உண்டு. இப்பேற்பட்டவர்களுக்கு "நான் ஸந்நியாஸி" என்ற எண்ணம் வருவதில்லை.

ஸ்திரீ புருஷன் என்ற வித்யாஸமும் பற்றும் அவயவங்களை ஒட்டி ஏற்படுவதுபோல் இங்கும் அவயவங்களினால் "நான் பிராஹ்மணன்" என்பது முதலான பற்றுதல் வரட்டுமே என்றால் அதுவும் சரியல்ல. எல்லோருக்கும் அவயவங்கள் ஒன்றுபோல் இருப்பதால் இதனாலே பற்றுதல் உண்டாகிறது என்று சொல்லமுடியாது. குறிப்பிட்ட தாய் தகப்பன் இவர்களிடமிருந்துண்டான அவயவ விசேஷம் பற்றுதலுக்குக் காரணம் என்றால் அதுவும் சரியல்ல. பிராஹ்மணனுடைய மயிர், நகம், பல், மலஜலம், முதலியவைகளிடத்திலும் "பிராஹ்மணன்" முதலான வியவஹாரம் ஏற்படும். அப்படி ஏற்படுவதில்லை. ஆகையால் பற்றுதலுக்கு அவிவேகம்தான்

காரணம் வேறு ஏதாவது காரணமாகும் என்று யாரும் சொல்ல முடியாது.

ஆகவே " நான் பிராமணன் " இது முதலான பற்றுதல் எதனுல் ஏற்படுகிறது ? என்று நன்கு விசாரித்துப்பார்த்தால் உலகத்தில் " உத்ஸவம் " " கல்யாணம் " " ஸபா " " சேனை என்று அநேக வஸ்துக்களின் கூட்டத்துக்கு ஒவ்வொரு பெயரைக்கொடுத்து அந்தந்தப் பெயரைக்கொண்டு வியவஹாரம் நடக்கிறது. அதேபோல மாயாமயமானதும், வாக்கினுல் 'இது என்று விவரிக்க முடியாததுமான தேகம், இந்திரியம் முதலியவைகளின் கூட்டத்தையே உலகில் 'பிராமணன்' 'க்ஷத்திரியன்' 'வைசியன்' 'சூத்ரன்' 'ஸ்திரீ' 'புருஷன்' 'அலி' 'குஜராத்தியர்' 'மகாராஷ்டிரர்' 'ஆந்திரர், 'கர்னுடகர்' 'திராவிடர்' 'சாஸ்திரிகள்' 'தீக்ஷிதர்' 'பௌராணிகர்' அவதானிகள்' 'கங்கையில் ஸ்நானம் செய்பவன்' 'சைவன்' 'பாகவதர்' 'சேவகன்' 'யுத்ததலைவர்' 'ராஜா' 'மந்திரி' 'குரு' 'சிஷ்யன்' என்ற பதங்களால் பலவகைப் பட்டனவாகப்பேசுகிருேம். இறந்த காலம், நிகழ்காலம் வருங்காலம் இம்மூன்றிலும் ஆத்மாவுக்கு பெயர் உருவம் என்பது கிடையாது மேலே சொன்னமாதிரி சிந்தனை செய்யாததுதான் அவிவேகம் இந்த அவிவேகத்தினுல் தான் எல்லாருக்கும் ஆத்மாவிடத்தில் வர்ணம், ஆசிரமம் முதலிய தோற்றமும் பற்றுதலும் வருகிறது. 6

இந்த அவிவேகம் எதனுல் வருகிறது ? அநாதிகாலமாக தன்னுடைய வாஸ்தவமான ஞான ஸ்வரூபமான ஆத்மவஸ்துவை மறைத்துக்கொண்டிருப்பதும் ஆத்மஞானத்தினுல் மட்டும் போக்கடிக்கக்கூடியதுமான, ஆதிஇல்லாத அஞானம் என்பதுதான் காரணம். " என்னை நான் அறிந்துகொள்ள வில்லை " என்பதால் இந்த அக்ஞானம்தான் குறிப்பிடப் படுகிறது உலகில் பயித்தியம் ஒருவனைத்தவிர தன்னை அறியாதவர் வேறுயார் இருக்கிருர் எனில் உலகில் உள்ளவர் கள் எல்லாரும் பயித்தியக்காரர்கள்தான் ஏனெனில், " நான் பிராமணன் " " நான் க்ஷத்திரியன் " " நான் வைசியன் " " நான் பிரம்மசாரி " " நான் கிருஹஸ்தன் " என்றெல்லாம் பொய்யான இந்த உடலையேதான் எல்லாரும் அறிகிருர்கள். சரீரத்தைக்காட்டிலும் வேருன ஆத்மாவை யாரும் உணர்வதில்லை. ஆகையால் எல்லாருமே பயித்தியக்காரர்கள்தான்.

உலகத்தில் சில சாஸ்திரம் படித்தவர்களும், புராணம் சொல்பவர்களும், தேகம் ஆத்மா அல்ல, இது குடம் சுவர் போன்றது என்று எண்ணிக்கொண்டு இந்த தேகத்தைவிட வேருனஆத்மாவை அறிந்திருக்கிருர்களே! ஆதலால் ஒருவரும் ஆத்மாவை அறியவில்லை என்று நீங்கள் சொல்லியிருப்பது சரியல்ல எனில், அவர்களும் உண்மையான ஆத்மாவை உணரவில்லை. ஆனுல் அவர்கள் காரியத்தை செய்கிறதும் பலத்தை அனுபவிக்கிறதும் ஒரு கட்டுப்பாட்டுக்குட்பட்டதும் புண்யலோகங்களுக்கு செல்லக்கூடியதும் சைதன்யத்தின் ஆபாஸரூபமுமான வியாவஹாரிக ஜீவாத்மாவையே ஆத்மா என்று எண்ணுகிருர்கள். இவரைக்காட்டிலும் வேருனதும் காரியங்கள் செய்யாததும், கட்டுப்பாட்டுக்கு உட்படாததும், அசைவற்றதும், சுத்தஞானரூபமானதுமான உண்மையான ஆத்மஸ்வருபத்தை இவர்களும் அறிவதில்லை.

கேள்வி: இந்த அக்ஞானம் எதனுல் ஏற்பட்டது?

பதில்:— இதற்கு உத்பத்தி இல்லை என்று வேதத்திலும், சாஸ்திரத்திலும் பிரசித்தமாக சொல்லப்பட்டிருப்பதால் இதற்குக்காரணம் சொல்லமுடியாது.

கேள்வி: — அப்படியானுல் இந்த அஞானத்துக்கு ஆரம்பம் இல்லை எனில் முடிவும் இல்லை என்று நிச்சயமாகச்சொல்லலாம் ஆதி இல்லாத வஸ்துவுக்கு அந்தமும் கிடையாதல்லவா! ஆகவே அக்ஞானம் நசிக்காததால் ஜீவனுக்கு முக்தியும் ஏற்படாது?

பதில்:—இந்த அஞானத்துக்கு ஆரம்பம் கிடையாதெனினும் முடிவு உண்டு. உலகில் சில வஸ்துக்களுக்கு உத்பத்தி இல்லாவிட்டாலும் முடிவு ஏற்படுகிறது. சிலவற்றிற்கு முடிவு இல்லாமல் இருந்தும் உத்பத்தி இருக்கிறது. அதாவது ப்ராகபாவத்திற்கு உத்பத்தி இல்லை. ஆனுல் முடிவு உண்டு. ப்ரத்வம்ஸாபாவத்திற்கு முடிவு இல்லை ஆனுல் உத்பத்தி உண்டு.

(ஒரு குடம் உண்டாவதற்கு முன் அக்குடம் இல்லாமலிருந்தது. இதற்கு ப்ராகபாவம் என்று பெயர். இப்பொழுது இக்குடம் உண்டாகும் வரை இதன் ப்ராகபாவம் அநாதிகாலமாக இருந்துகொண்டிருக்கிறது. இக்குடம் இதற்குமுன் ஒரு

பொழுதும் இல்லாதபடியால் இந்த ப்ராகபாவம் ஒருகாலத்தில் ஏற்பட்டதல்ல. ப்ராகபாவம் ஒருகாலத்தில் உண்டாயிருக்கு மானுல் அதற்கு முன்னுல் இதே குடம் இருந்திருக்கவேண்டும். இப்பொழுது உண்டாகும் குடம் இதற்குமுன்னுல் ஒருக்காலும் இல்லை. ஆகையால் ப்ராகபாவம் அநாதி. இது அநாதி யானுலும் குடம் உண்டானவுடன் இந்த ப்ராகபாவம் மறைந்து விடுகிறது. ஆகவே அநாதிக்கும் நாசம் உண்டு என்று தெரிகிறது.

குடம் அழிந்தவுடன் குடம் இல்லாமல் போய்விடுகிறது. இதற்கு ப்ரத்வம்ஸாபாவம் என்று பெயர். குடம் இருக்கும் பொழுது ப்ரத்வம்ஸாபாவம் இல்லாதபடியாலும் குடம் அழிந்த பிறகே ப்ரத்வம்ஸாபாவம் ஏற்படுகிறபடியாலும் இந்த ப்ரத்வம்ஸாபாவத்திற்கு ஆதி உண்டு. ஆனுலும் இதே குடம் மறுபடியும் உண்டாகாதபடியால் ப்ரத்வம்ஸாபாவத்திற்கு முடிவு இல்லை.

மேலும் வாதம், பித்தம், சிலேஷ்மம் முதலியவைகளினுல் ஏற்பட்ட ஜ்வரம் முதலிய வியாதிகளுக்கு மூலம் எது என்று தெரியாவிட்டாலும் வைத்தியசாஸ்திரத்தில் கண்ட மருந்துகளால் நிவ்ருத்தி அடைவதாகத்தெரிகிறது. அதுபோல் அக்ஞானத்தின் மூல காரணம் தெரியாவிட்டாலும் வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட மஹாவாக்கியங்களினுல் ஏற்பட்ட ஞானத்தினுல் அதற்கு நாசம் உண்டு என்று தீர்மானம்.

இந்த அக்ஞானத்தினுடைய ஸ்வரூப லக்ஷணம் என்ன என்ருல் அது சொல்வதற்கு கடினமானது. இந்த அஞானத்தை இருப்பதாகச் சொல்லமுடியாது இல்லாததாகவும் சொல்ல முடியாது. இருந்தும் இல்லாதது என்றும் சொல்லமுடியாது. இதற்கு அவயவம் உண்டு என்று சொல்லமுடியாது இல்லை என்றும் சொல்ல முடியாது. இரண்டும் கலந்தது என்றும் சொல்லமுடியாது ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதாகவோ வேறுபடாததாகவோ இரண்டும் கலந்ததாகவோ சொல்லமுடியாது. ஆகவே அக்ஞானம் இன்னவிதம் என்று வாக்கினுல் சொல்லமுடியாது. இதைச்சற்று விளக்குவோம்.

தத்வஞானத்தால் இந்த அக்ஞானம் நசித்துப்போவதால் இது எப்போதும் இருக்கும் தன்மையை உடையதல்ல, நான்

அக்ஞன் (அக்ஞானமுள்ளவன் அறிவற்றவன்) என்று எல்லோராலும் அக்ஞானம் அனுபவிக்கப்படுவதால் முயல் கொம்பு, மனிதன் கொம்பு, ஆகாயத்தாமரைபோல் முற்றிலும் இல்லை என்றும் சொல்லமுடியாது. ஒன்றுக்கொன்று விரோதமுள்ளதால் இருப்பது இல்லாதது என்ற இரண்டும் கலந்தது என்றும் சொல்லமுடியாது.

ஸ்தூலமாயுள்ள (பஞ்சீக்ருத) ஆகாசம் மற்றப்பொருள்களைவிட ஸூக்ஷ்மமானது. இதைவிட ஸூக்ஷ்மமானது அபஞ்சீக்ருத ஆகாசம். அதைவிட சூக்ஷ்மமானது ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற குணங்கள். அவைகளைவிட சூக்ஷ்மமானது அஞானம். ஸூக்ஷ்மத்திற்கும் மூலகாரணமாயுள்ள அஞானம் அவயவங்களை உடையது என்று சொல்லமுடியாது. ஸ்தூலபதார்த்தங்களாகிய பிரபஞ்சமாக அஞானம் மாறுதல் அடைவதால் அவயவமில்லாதது என்றும் சொல்லமுடியாது ஒன்றுக்கொன்று விரோதமானதால் இரண்டும் கலந்தது என்றும் சொல்லமுடியாது.

அத்வைதத்தில் கருத்துள்ள சுருதிகளுடன் விரோதமேற்படுவதால் அக்ஞானம் ஆத்மாவைக்காட்டிலும் வேறு என்று சொல்லமுடியாது. மேலும் ஆத்மா ஒன்றில்தான் ஸத்தை உள்ளது. ஆத்மாவில் உள்ள ஸத்தையைக்காட்டிலும் வேருக ஒரு இடத்திலும் ஸத்தை கிடையாது. ஆகையால் ஆத்மாவைக்காட்டிலும் வேருக இருக்கும் பொருளாக அக்ஞானத்தைக் கூறமுடியாது. அக்ஞானம் ஆத்மாவைக் காட்டிலும் வேறு அல்ல. ஆத்மாவேதான் என்று கூறினுல் அக்ஞானத்தை ஆத்மாவின் சக்தியாகக் கூறமுடியாமல் போய்விடும். “இந்த ஆத்மாவின் மேலான சக்தி பலவாருகக் கேட்கப்படுகிறது” என்ற சுருதிக்கு விரோதம் வரும். மேலும் ஆத்மாவும் அக்ஞானமும் ஒன்ருனுல் ஆத்மா ஜடமாகவும் அக்ஞானம் சேதனமாகவும் ஆகிவிடும். அவித்யை முதலான பெயர்கள் ஆத்மாவுக்கும் ஏற்படும். ஸச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மாவுக்கு பொய், ஜாட்யம், துக்கம் இத்தன்மைகளும் ஏற்பட்டுவிடும். ஆகையால் அக்ஞானம் வேறு அல்ல என்று சொல்லமுடியாது. ஒன்றுக்கொன்று விரோதமானதால் ஒரே அக்ஞானம் ஆத்மாவைக்காட்டிலும் வேருகவும் வேறு அல்லாததாகவும் இருக்கமுடியாது. ஆகவே ஒருவிதத்திலும் அக்ஞானத்தை விவரித்துக்கூற முடியாததால் அது அநிர்வசனீயம்.

இப்பேற்பட்ட ஆதியில்லாத அஞானத்திஞல் அவிவேகம் அதஞல் பற்றுதல், அதஞல் ராகதுவேஷங்கள், அதஞல் கர்மா, கர்மாவிஞல் சரீரம், சரீரத்தால் துக்கம் ஆகவே ஆத்மாக்ஞானத்தால்தான் பரம்பரையாக ஸம்ஸாரதுக்கம் ஏற்படுகிறது என்று அறியவேணும். இந்த துக்கம் எப்போது நீங்கும் என்ருல், சரீரம் போஞல் துக்கம் போகும் சரீரம் இருக்கும்போது துக்கம் இருக்கிறது கர்மா ஒழிந்தால் சரீரம் போகும், ராகதுவேஷங்கள் போஞல் கர்மா போய் விடும் பற்றுதல்போஞல் ராகதுவேஷங்கள் நாசமாகும் அவி வேகம் போஞல் பற்றுதல் நீங்கும் அஞானம் போஞல் அவி வேகம் ஒழியும் அத்துவைதசாஸ்திர பயிற்சியால் "நானே பிரும்மம்" என்ற தீர்மானமான நிச்சயபுத்தி ஏற்பட்டால் அன்றி இந்த அஞானம் நீங்காது.

கேள்வி:— பிரும்மஹத்தி முதலிய பெரிய பாபகர்மாக்களும் பிராயச்சித்தருபமான நல்ல கர்மாக்களால் நிவர்த்திக்கப் படுகின்றன. அப்படி இருக்க, இந்த அல்பமான, பொய்யான அஞானத்தை அந்த ஸத்கர்மாக்களால் போக்கடிக்க முடியாதா ?

பதில்:— முடியாது கர்மாவுக்கும் அஞானத்துக்கும் விரோதம் இல்லே கர்மா அக்ஞானத்தை விருத்தி செய்கிறதே தவிற ஒழிப்பதில்லே. அமாவாஸையன்று இரவில் தோன்றும் இருட்டை மேகத்தின் மறைவு பெரிதாகக்காட்டுகிறது போல கர்மாவானது அக்ஞானத்தை விருத்தி செய்யுமே தவிற ஒழிக்காது. ஆஞல் அந்த இருளே ஸூர்யன் போக்கடித்து விடுகிருன். (அதுபோல ஞானம்தான் அக்ஞானத்தைப் போக்கடிக்கும், கர்மா போக்கடிக்காது.)

கேள்வி:—மனம், வாக்கு, காயம் இந்த மூன்று கரணங் களால் ஏற்படுவதுதான் கர்மா என்பது. அந்தக்கரணத்தில் உண்டாகும் விருத்திதான் ஞானமாகும். ஆகவே ஞானமும் மானஸ கர்மாவானபடியால் அது எப்படி அக்ஞானத்தை நிவர்த்திக்கமுடியும் ?

பதில்:—வாஸ்தவம் அந்தக்கரண விருத்தி என்பது மானஸக்ரியை தான். ஆஞல் இந்த விருத்தி நேரிடையாக அக்ஞானத்தைப் போக்குவதில்லே. நித்யமான ஞானம்தான் அக்ஞானத்தைப் போக்குகிறது. இதற்கு விருத்தியானது

உபாதியாக இருக்கிறது. (ஸூக்ஷ்மமான சக்ஷுரிந்திரியம் ரூபத்தை கிரஹித்த போதிலும் அதற்கு அநுகூலமாகவும் ஆச்ரயமாகவும் இருந்துகொண்டு ஸ்தூலமான நேத்ரம் உபாதியாகிறது.) இதுபோலவே நித்யஞானமும் விருத்தியுடன் சேர்ந்துகொண்டே அக்ஞானத்தை அழிப்பதால் விருத்தியும் உபாதியாகிறது. (தன்னிடம் கார்யம் நடைபெறும் சக்தி இருந்தும் அதை வெளிப்படுத்தி காரியம் நடைபெறுவதற்கு அனுகூலமாக அதனுடன் சேர்ந்துள்ள வஸ்துவிற்கு உபாதி என்று பெயர்)

இந்த ஞானம் இருவகைப்படும் (1) ஸ்வரூபஞானம் (2) விருத்திஞானம் ஸுஷுப்தியில் (ஸ்வப்னமற்ற நித்திரையில்) அக்ஞானத்தை பிரகாசப்படுத்தும் ஞானம் ஸ்வரூபஞானமாகும். விழிப்பிலும் ஸ்வப்னத்திலும் விஷயங்களை பிரகாசப்படுத்தும் ஞானம் விருத்தி ஞானம் எனப்படும். பகல் வேளையில் சூரியபிரகாசத்தால் சுவர் விளங்குகிறது. அச்சமயம் அநேகம் கண்ணுடிகளை சூரியனுக்கு நேராகக் காட்டினுல் சூரியப்ரகாசம் கண்ணுடி மூலம் சுவற்றில் விழும். ஒரு கண்ணுடிக்கும் மற்ருெரு கண்ணுடிக்கும் நடுவில் ஆகாசத்திலுள்ள சூரியனின் பிரகாசம் விழுவதுபோல்தான் ஸுஷுப்தியில் ஸ்வரூபஞானமென்பது. கண்ணுடி மூலமாக சுவற்றில் சூரியபிரகாசம் விழுவது போன்றது ஜாக்ரத் ஸ்வப்னங்களில் விருத்தி ஞானமென்பது

அப்படியானுல் விழிப்பு, ஸ்வப்னம் இந்த இரண்டு நிலைகளில் ஸ்வரூபஞானமே கிடையாதா என்ருல் ஸ்வரூபஞானம் என்பது எல்லா சமயத்திலும் எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கிறது. ஸுஷுப்தியில் மனம் இல்லாததால் மனத்தின் பரிணுமமான விருத்திகள் கிடையாது. ஞானம் என்பது ஆத்மஸ்வரூபமானது. இந்த ஞானம் விருத்திகளில் புகுந்துகொண்டு அஞானத்தைப் போக்குகிறது. விருத்திகள் தாங்களாகவே அக்ஞானத்தைப் போக்கடிக்க சக்தியற்றவை. ஆகையால் ஆத்மாவை ஒட்டிய அஞானமும் ஆத்மாகாரமான மனோவிருத்தியில் பிரவேசித்த ஸ்வரூபஞானத்தினுல் நாசமடையுமே தவிர புத்தியின் விருத்தியினுல் நாசம் அடையாது. கோடிக்கணக்கான கர்மாக்களைச் செய்தாலும் இந்த அஞானம் அழியாது. எப்படி ஸத்கர்மாதான் பாபகர்மாவைப் போக்கடிக்குமோ அப்படியே விருத்தியில்

ப்ரவேசித்த மேலே சொன்ன ஞானமே அஞானத்தை அழிக்கும். மாணிக்கம் கல்தான் ஆனுலும் பிரகாசிக்கும் தன்மை இதற்குள்ளதால் 'ரத்ன தீபம்' என்று இதைச் சொல்லுகிருர்கள். அதேமாதிரி விருத்தி என்பது மனதின் பரிணுமமாக இருந்தாலும் அதற்குள் ஸ்வரூபஞானமிருப்ப தால் விருத்திக்கும் ஞானம் என்ற பெயர் கௌணமாக ஏற்பட்டுள்ளது. இந்தக்காரணத்தால் விருத்தியைக் கர்மா என்று சொல்வதற்கில்லை.

ஸுஷுப்தியில் ஸ்வரூப ஞானத்தால் அக்ஞானம் பிரகாசிக்கப்படுமானுல் அவை இரண்டுக்கும் விரோத மில்லையே! அப்பொழுது ஞானம் அக்ஞானத்தை எப்படி அழிக்கும்? ஸ்வரூபஞானத்துக்கும் அக்ஞானத்துக்கும் விரோதம் இல்லாமல் போனுலும் விருத்தி ஞானத்துக்கும் அஞானத்துக்கும் விரோதம் இருக்கிறது எப்படியெனில் உலகில் சூரியனுடைய பிரகாசத்தால் துரும்பு புல் முதலியவை இருப்பதாக காட்டப்படுகின்றது. அதனுல், சூரியப்பிரகாசத் துக்கும் அவற்றிற்கும் விரோதமில்லை ஆனுல் அதே சூரிய வெளிச்சம் சூரியகாந்தக்கல்லின் மூலம் வந்தால் அந்த துரும்பு புல், முதலியவைகளை எரித்து விடுகிறது அதுபோல் ஸ்வரூப ஞானத்துக்கும் அஞானத்துக்கும் விரோதமில்லாமல் இருந்த போதிலும் விருத்தியுடன் அது கலக்கும்போது அதற்கும் அஞானத்துக்கும் விரோதம் ஏற்படுகிறது. மேலே சொன்னபடி விருத்தி ஞானத்தினுல் அஞானமும் அதன் காரியங்களும் நாசமடைந்தாலும் விருத்தியும் அதனுள் புகுந்த ஞானமும் மிஞ்சி இருப்பதால் இரண்டற்றது என்ற தன்மை எவ்விதம் ஏற்படும் என்ருல் தேத்தாங்கொட்டையை அழுக்குள்ள ஜலத்தில் தேய்த்தால், எப்படி அழுக்குப் போவதுடன் தேத்தாங்கொட்டையும் போய்விடுமோ அது போல் மேற்படி விருத்தி ஞானமும் அஞானத்தையும் அதன் காரியங்களையும் அழித்து தானும் நாசத்தையடையும். விருத்தி ஒழிந்தால் அதில் தோன்றிய பிரதிபிம்பமாகிய ஞானமும் பிம்பத்துடன் (ஸ்வரூபஞானத்துடன்) போய்சேர்ந்துவிடும். ஆகவே இரண்டற்ற ஆத்மஸ்வரூபமே மீதமாகும். இப்படித் தான் ஞானத்தினுல் அஞானம் அழியும் என அறியவும்.

இப்படிப்பட்ட ஞானம், ஆத்மாவைப்பற்றி விசாரணை செய்வதனுல் தான் ஏற்படுமே தவிர கர்மா, யோகம்,

உபாசனை இவைகளால் ஏற்படாது ஞானம் என்பது வஸ்துவை ஒட்டி ஏற்படக்கூடியது. அதாவது எப்படி வஸ்து உள்ளதோ அவ்விதமாக ஞானம் ஏற்படும் ஞானத்தைச் செய்யவோ, செய்யாமலிருக்கவோ வேறு விதமாகச் செய்யவோ முடியாது யோகமும் உபாஸனையும் புருஷனை யொட்டி ஏற்படக்கூடியது அவற்றைச் செய்யவோ செய்யா மலிருக்கவோ வேறு விதமாகச்செய்யவோ முடியும் மேலும் இந்த உபாசனை யோகம் முதலியவைகளினால் மனதின் ஒன்று பட்ட நிலை, அணிமா, மஹிமா முதலிய எட்டு சித்திகள் இவைகள் கிடைக்கும். ஆனால் ஞானம் கிடைக்காது உபாஸனை முதலியவை மனதின் வியாபாரமானதால் கிரியா ரூபமாக உள்ளது அது வஸ்துவை ஒட்டி ஏற்படக்கூடியதல்ல ஆகையால் வஸ்துவை ஒட்டின ஞானம் கர்மாவினால் வராது. விசாரணையினால்தான் ஏற்படும். உதாஹரணமாக, ஸாலி க்ராமம், ரத்னம். தங்கம் இவைகளின் மதிப்பை லக்ஷணத் தாலும் பரீக்ஷையாலும் மாத்து உரைத்துப்பார்ப்பதாலும் தீர்மானிக்கவேண்டுமே தவிற ஸ்நானம், ஸந்தியாவந்தனம், பிராணாயாமம் செய்தால் அதை தீர்மானம் செய்யமுடியாது. அதுபோல் ஆத்மஞானமும் ஆத்ம அனாத்மவிசாரம் செய்யாமல் உபாஸனை முதலியவைகளினால் ஏற்படாது ஆகவே மோக்ஷம் அடைய விரும்புபவன் இதர காரியங்களை விட்டு விட்டு சிரவணம் அதை சிந்தித்தல் முதலிய வழிகளில் ஈடுபட்டு எப்போதும் ஆத்மானாத்ம விசாரத்தையே செய்ய வேணும். (இது அடுத்த அத்தியாயத்தில் விவரிக்கப் படுகிறது) எவன் ஒருவன் இந்த வழியில் இருப்பானோ அவன் இதே ஜன்மாவில் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவனாகி ஜீவன் முக்தி நிலையையும் விதேஹ முக்தி நிலையையும் அடைவான் என்று எல்லா வேதாந்தங்களும் சொல்லுகின்றன)

ஆறுவது வர்ணகம் முற்றும்

—※—

151

# ॥ सप्तमवर्णकम् ॥

इतः परं सप्तमवर्णके आत्मानात्मविवेकस्तत्साध्यमात्मज्ञानं तत्साध्यं ब्रह्मकैवल्यं च कथ्यते। आत्मानात्मविवेकेनात्मज्ञानं जायत इति खलूक्तम्। स त्वात्मा क इति चेत्, शृणु। आत्मा शरीरत्रयविलक्षणोऽवस्थात्रयसाक्षी पञ्चकोशव्यतिरिक्तः सच्चिदानन्दलक्षणः। अनात्मा तु शरीरत्रयम्। तस्य किं लक्षणमित्युक्तेऽनृतजडदुःखरूपत्वम्। तच्च शरीरत्रयं व्यष्टिसमष्ट्यात्मकम्। व्यष्टिसमष्टिलक्षणं प्रथमवर्णके उक्तम्। अत्राप्युच्यते। वनमिव समष्टिः। वृक्ष इव व्यष्टिः। समस्तं समष्टिः। व्यस्तं व्यष्टिः। एवं शरीरत्रयमपि व्यष्टिसमष्ट्यात्मकम्। तत्कथमिति चेत्—समष्टिस्थूलशरीरं समष्टिसूक्ष्मशरीरं समष्टिकारणशरीरमिति च, व्यष्टिस्थूलशरीरं व्यष्टिसूक्ष्मशरीरं व्यष्टिकारणशरीरमिति च शरीरत्रयमपि समष्टिव्यष्टिरूपेण षट्प्रकारम्। आत्मनः समष्ट्युपाधिनेश्वरत्वं व्यष्ट्युपाधिना जीवत्वम्, न तु वास्तवम्, आत्मन एकत्वात्। आत्मनो मायोपाधिनेश्वरत्वमविद्योपाधिना जीवत्वम्, न तु वास्तवम्। वास्तवमिति यावज्जानाति तावद्बन्धनिवृत्तिश्च नायाति। 'जीवेशावाभासेन करोति, माया चाविद्या च स्वयमेव भवति' इति सकलजीवमाता श्रुतिश्चैवमेवोपदिशति॥

ईश्वरस्य समष्टिकारणशरीरेऽभिमानो नास्ति। कुत इति चेत्, तदा महासुषुप्तावहंकारस्य लीनत्वेनाभिमानकारणाभावात्। अयं समष्टिकारणोपाधिक ईश्वरोऽव्याकृतोऽन्तर्यामीति चोच्यते। अयमुत्तमभक्तैर्जीवैरुपास्यते। अस्योपासनायामशक्तानां श्रुतिः समष्टिसूक्ष्मशरीरोपाधिकमीश्वरमुपास्यत्वेनोपदिशति। तस्य हिरण्यगर्भः, सूत्रात्मा, महाप्राण इति नामानि सन्ति। अस्यापि हिरण्यगर्भस्य सूक्ष्मशरीरे-

ऽभिमानोऽस्ति वा न वेति चेत्, तदा अभिमानकर्तर्यहंकारे विद्यमानेऽपि स्वप्नावस्थानादभिमानाश्रयस्थूलशरीरप्रवेशाभावात्सूक्ष्मशरीरेऽप्यभिमान ईश्वरस्य नास्ति ॥

अस्य सूक्ष्मोपाधेरीश्वरस्योपासनायामशक्ताञ्जीवान्प्रति समष्टिस्थूलोपाधिकस्येश्वरस्योपासनां श्रुतिर्विधत्ते। तस्येश्वरस्य विराड्विराजो वैश्वानर इति नामानि सन्ति। अस्याप्यस्मिन्स्थूलसमष्टिशरीरेऽभिमानोऽस्ति वा न वेति विचार्यमाणे, नास्ति। कथमिति चेत्, सकलजीवशरीराणामप्येकीभूयास्य शरीरत्वेनावस्थानात्, 'अहम्' इति व्यावर्तनीयप्रतियोग्यभावात् ॥

एतत्समष्टिशरीरत्रयोपहितमीश्वरमुपासितुमशक्ताञ्जीवान्प्रति श्रुतिः राजससात्त्विकतामसमूर्तिसहितस्य सृष्टिस्थितिसंहारकर्तुर्ब्रह्मविष्णुरुद्रनामधेयस्य दुष्टनिग्रहशिष्टपरिपालनकृते मत्स्यकूर्माद्यवतारकर्तुरीश्वरस्योपासनां विधत्ते ॥

एवं ब्रह्मादिमूर्तिधरस्येश्वरस्य तत्तन्मूर्तावभिमानोऽस्ति वा न वेति चेत्, अभिमानोस्ति। अभिमानाभावे तत्तन्मूर्त्या सृष्ट्यादिकार्यं कर्तुं न शक्यते। अतोऽभिमानोऽस्ति। एवमीश्वरस्यापि जीववदभिमाने सति जीवादीश्वरस्य को विशेष इति चेत्, विशेषोऽस्ति। कथमिति चेत्, जीवानां स्वस्वदेहेष्वहंता च ममता च सततमस्ति। ईश्वरस्य तु स्वमूर्त्यभिमानः कृपया लोकरक्षणार्थं तत्तत्कार्यसमय एवेश्वरेण केवलं कल्प्यते, नटेन स्वभूमिकायामिवेति जीवाभिमानस्य ईश्वराभिमानस्य चास्ति महान्भेदः ॥

मूर्तिस्वरूपमीश्वरमप्युपासितुमशक्तानां शास्त्रं मूर्तिरूपेण कल्पितताम्रादिप्रतिमोपासनं विधत्ते। अत एव प्रतिमां केचिदीश्वरबुद्ध्योपासते। सर्वत्र ब्रह्मादिमूर्तिष्वपि तत्तत्प्रतिमास्वपि चान्तर्यामी

परमेश्वर एक एव स्थित्वा तेषां तेषामुपासकानां फलं ददाति। मूढा ईश्वरस्य सर्वात्मकत्वमविचार्य तत्र तत्रेश्वरा बहवो भिन्नभिन्नतया वर्तन्त इति मत्वा अन्योन्यं कलहायन्ते। तस्मादन्तर्यामीश्वर एक एवेति जानीहि। तर्हि सर्वत्रेश्वरस्यैकत्वे शास्त्रमपि तत्तन्मूर्तिभेद-मङ्गीकृत्य तत्तदुपासनाभेदं कथं विधत्त इति चेत्। बहिर्मुखानपि शनैः शनैरन्तर्मुखान्कृत्वा 'परमात्मैव जीवात्मा, नान्यः' इति बोधयित्वा तेषां मुक्तिं दातुमेवानादिकालमारभ्य प्रवृत्तं भेदमङ्गीकृत्य तेषां बुद्धिमनुसृत्य भेदेन शास्त्रमुपासनां विधत्ते न तु तात्पर्येण। एव-मीश्वरस्य परमात्मनः समष्टिशरीरत्रयोपाधिनेश्वरत्वसिद्धिप्रकार उक्तः॥

अथेदानीमेकस्यैव परमात्मनो व्यष्टिशरीरत्रयोपाधिना जीवत्व-सिद्धिप्रकार उच्यते। व्यष्टिकारणशरीरोपहितस्य परमात्मन एव-'प्राज्ञः' 'पारमार्थिकः' 'अविद्यावच्छिन्नः' इति नामानि सन्ति; व्यष्टिसूक्ष्मशरीरोपहितस्य परमात्मनः 'तैजसः' 'स्वप्नकल्पितः' 'प्रातिभासिकः' इति नामानि सन्ति; व्यष्टिस्थूलशरीरोपहितस्य परमात्मनः 'विश्वः' व्यावहारिकः' 'चिदाभासः' इति नामानि सन्तीति जानीहि ॥

अस्य जीवस्य शरीरत्रयमपि किमर्थमिति चेत्, प्रयोजन-मस्ति। अन्तःकरणप्रतिबिम्बो हि जीवः। अतो जीवस्य सूक्ष्मशरीरं प्रथममावश्यकम्। पश्चात्स्थूलशरीरं विना कर्मकर्तृत्वाभावात्स्थूल-शरीरमप्यावश्यकम्। इदं कार्यशरीरद्वयमपि कारणशरीरं विना अवस्थातुमशक्यम्। अतः कारणशरीरमप्यावश्यकम्। एवं जीवस्य व्यष्टिशरीरत्रयमप्यावश्यकम् ॥

अस्य जीवस्यास्मिन्व्यष्टिशरीरत्रयेऽभिमानोऽस्ति वा न वेति विचार्यमाणे अभिमानोऽस्ति। कथमिति चेत्, जीवस्य कर्म-

कर्तृत्वेन । शरीराभिमानाभावे जीवस्य तत्कर्मकर्तृत्वं नोपपद्यते। तदभावे शरीरमपि नोपपद्यते। शरीराभावे जीवत्वमेव न संभवति। तस्माज्जीवस्याभिमानोऽस्ति। एवं परमात्मैक एव व्यष्टिसमष्ट्युपाधिभ्यां जीवेश्वरभावं गतः। अस्य दृष्टान्तोऽस्ति वेति चेत्, अस्ति। यथैकस्यैव देवदत्तस्य पुत्रपौत्रोपाधिभ्यां पितेति पितामह इति च नामद्वयमस्ति, तथा अविद्यामायोपाधिभ्यामात्मन एकस्यैव जीवत्वमीश्वरत्वं चागतम् ॥

ननु पूर्वोक्तो दृष्टान्तो जीवेश्वरनामद्वये युज्यते, किंचिज्ज्ञत्वसर्वज्ञत्वादिविशिष्टभेदस्य को वा दृष्टान्त इति चेत्, दृष्टान्तोऽस्ति। एकमेव जलं बृहत्तटाकस्थं सदेकग्रामसंरक्षकं महाशक्तिमत्, घटस्थं सदेकगृहसंरक्षकमल्पशक्तिमद्यथा जातम्; अग्निरेक एव स्थूलमहावर्तिस्थः सन्बहुदूरप्रकाशको महाशक्तिमान्, अल्पवर्तिस्थः सन् गृहमात्रप्रकाशकोऽल्पशक्तिमान्यथा च जातः, तथा आत्मनोऽपि बृहता कारणभूतमायोपाधिना सर्वज्ञत्वं, अल्पेन कार्यभूताविद्योपाधिना किंचिज्ज्ञत्वं चागतम्। न तु सर्वज्ञः किंचिज्ज्ञ इत्यात्मद्वयमस्ति। अत एव वेदान्तशास्त्रं च तत्पदस्य त्वंपदस्य च संबन्धत्रयेणाखण्डं बोधयति ॥

संबन्धत्रयं किमिति चेत्–पदयोः सामानाधिकरण्यसंबन्धः, पदार्थयोर्विशेषणविशेष्यभावसंबन्धः, पदाभ्यां सह वा पदार्थाभ्यां सह वा प्रत्यगात्मनो लक्ष्यलक्षणभावसंबन्धः। एवं संबन्धत्रयम्। तस्य दृष्टान्तः– 'सोऽयं देवदत्तः' इत्यत्रेदं संबन्धत्रयमस्ति। सशब्दस्यायंशब्दस्य चैको देवदत्तपिण्ड एव समानमधिकरणमिति तयोः शब्दयोः सामानाधिकरण्यसंबन्धोऽस्ति। तथा तत्पदस्य त्वंपदस्य चैकमेव चैतन्यं समानमधिकरणम्। तस्मात्पदद्वयस्यापि सामानाधिकरण्य-

संबन्धोऽस्ति। तत्कालतद्देशविशिष्टदेवदत्तवाचकसशब्दार्थस्य एतत्कालैतद्देशविशिष्ट देवदत्तवाचकायशब्दार्थस्य चान्योन्यभेदव्यावर्तकत्वेनान्योन्यं विशेषणविशेष्यभावसंबन्धोऽस्ति। तथा सर्वज्ञत्वपरोक्षत्वादिविशिष्टचैतन्यवाचकतत्पदार्थस्य किंचिज्ज्ञत्वादिविशिष्टचैतन्यवाचकत्वंपदार्थस्य चान्योन्यभेदव्यावर्तकत्वेनान्योन्यं विशेषणविशेष्यभावसंबन्धोऽस्ति। सोऽयंपदयोस्तत्पदार्थयोर्वा अखण्डार्थदेवदत्तपिण्डमात्रग्रहणे विरुद्धांशं विहायाविरुद्धांशभूतदेवदत्तमात्रलक्षकत्वेन लक्ष्यलक्षणभावसंबन्धोऽस्ति। तथा तत्त्वंपदयोस्तत्पदार्थयोर्वा अखण्डसच्चिदानन्दमात्रग्रहणे विरुद्धांशं विहायाविरुद्धांशभूतचैतन्यमात्रलक्षकत्वेन लक्ष्यलक्षणभावसंबन्धोऽस्ति॥

इममेव लक्ष्यलक्षणभावसंबन्धं भागत्यागलक्षणेति जहदजहल्लक्षणेति च जानीहि। तत्कथमिति चेत्। शास्त्रेषु वाक्यार्थग्रहणे मुख्यवृत्तिर्गुणवृत्तिर्लक्षणावृत्तिश्चेति वृत्तित्रयमस्ति। 'राजा गच्छति' इति वाक्यार्थे मुख्यवृत्तिः। 'नीलमुत्पलम्' इति वाक्यार्थे 'अग्निर्माणवकः' इत्यादौ च गुणवृत्तिः। लक्षणावृत्तिश्च त्रिविधा जहल्लक्षणा अजहल्लक्षणा जहदजहल्लक्षणा चेति। 'गङ्गायां घोषः प्रतिवसति' 'शोणो धावति' 'सोऽयं देवदत्तः' इति च क्रमेण लक्षणावृत्तित्रयस्योदाहरणवाक्यानि। एतेषु मुख्यार्थग्रहणे विरोधाल्लक्षणावृत्तिरङ्गीकृतेति ज्ञेयम्॥

तत्त्वंपदयोर्वाच्यार्थः को लक्ष्यार्थश्च क इति चेत्, उच्यते। माया मायाप्रतिबिम्बो मायाधिष्ठानं ब्रह्म चैतत्त्रयमप्येकीभूय तत्पदवाच्यार्थः। ब्रह्ममात्रं तत्पदलक्ष्यार्थः। अविद्याऽविद्याप्रतिबिम्बोऽविद्याधिष्ठानं साक्षिचैतन्यं चैतत्त्रयमप्येकीभूय त्वंपदवाच्यार्थः। साक्षिकूटस्थचैतन्यमात्रं त्वंपदलक्ष्यार्थः। तस्मात्तत्त्वंपदवाक्यार्थग्रहणे वाच्यार्थजीवेश्वरयोर्विरोधात्तयोर्विरुद्धांशं विहायाविरुद्धांशस्य ब्रह्म-

चैतन्यस्य कूटस्थचैतन्यस्य चैकत्वाद्ब्रह्मकूटस्थौ लक्षयित्वाऽखण्डार्थस्तयो-रैक्यमेव महावाक्येन बोध्यते। यथा पुत्रपौत्रोपाधिद्वयपरित्यागे पितृपितामहत्वाभावेनैको देवदत्त एवावशिष्यते, महातटाकघटो-पाधिपरित्यागे शैत्यद्रवमधुरस्वभावं जलमेकमेवावशिष्यते, महा-वर्त्यल्पवर्तिपरित्यागे लोहितोष्णप्रकाशस्वभावो वह्निरेक एवावशिष्यते, तथा मायाऽविद्योपाधिपरित्यागे सच्चिदानन्दस्वभावमेकमात्मवस्त्वे-वावशिष्यते॥

एवं विचार्य 'परिपूर्णस्वभावः प्रत्यगात्मैव मम स्वरूपम्, अहं ब्रह्मास्मि, ब्रह्मैवाहमस्मि' इत्यनुभवो यस्य महानुभावस्यागच्छति स एव मुक्तः स एव कृतकृत्यः स एव ब्राह्मण इति सर्वे वेदान्ता भेरीवाद्यवदुद्घोषयन्ति॥

इति सप्तमवर्णकम्॥

---

## ஏழாவது வர்ணகம்

இந்த வர்ணகத்தில் ஆத்ம அநாத்ம விவேகம் என்ன வென்றும் அதனுல் அடையும் ஆத்ம ஞானமும் அதனுல் பெறும் பிரம்ம கைவல்யம் என்பது என்ன என்றும் உணர்த்தப் படும்.

முந்திய வர்ணகத்தில் ஆத்ம அநாத்ம விவேகத்தால் ஞானம் உண்டாகிறது என்று சொன்னேம். அந்த ஆத்மா என்பது எது? இது ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சரீரங்களைக் காட்டிலும் விலக்ஷணமானது. இது விழிப்பு, ஸ்வப்னம், நல்ல தூக்கம் (ஸுஷுப்தி) இம்மூன்று நிலைகளிலும் நடக்கும் வியவகாரங்களை ஸாக்ஷியாக சம்பந்தப் பட்டுக்கொள்ளாமல் பார்க்கிறது. அன்னமயம், பிராணமயம், மனேமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் ஆகிய ஐந்து கோசங்களுக்கும் வேருனது. இதன் லக்ஷணம், ஸத் சித்து ஆனந்தம்.

மூவகை சரீரங்களும் அநாத்மா அதன் லக்ஷணம் என்ன வெனில், பொய், ஜடம், துக்கம் இவையே. இம்மூன்று வகை சரீரமும் வியஷ்டி, ஸமஷ்டி என இருவகைப்படும். வியஷ்டி ஸமஷ்டி லக்ஷணம் முதலாவது வர்ணகத்தில் கூறப்பட்டிருக் கிறது. ஆனுலும் மறுபடியும் இங்கும் கூறுகிரேும். காடு ஸமஷ்டி, மரம் என்பது வ்யஷ்டி. எல்லாம் கூடியது ஸமஷ்டி என்பது. தனித்தனியாக உள்ளது வ்யஷ்டி. ஸ்தூலம் சூக்ஷ்மம் காரணம் என்ற மூவகை சரீரங்களிலும் இந்த ஸமஷ்டி வியஷ்டி பேதம் உள்ளது எப்படியெனில், ஸமஷ்டி ஸ்தூல சரீரம், ஸமஷ்டி சூக்ஷ்ம சரீரம், ஸமஷ்டி காரண சரீரம் அதேமாதிரி வியஷ்டி (தனியான) ஸ்தூல சரீரம், வியஷ்டி சூக்ஷ்ம சரீரம், வியஷ்டி காரண சரீரம் இப்படி ஆறு வகையாய்ப் பிரிக்கலாம்.

மாயையையும் ஸமஷ்டி ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங் களையும் உபாதியாகக்கொண்ட ஆத்ம சைதன்யம் ஈசுவரன். அவித்யையையும் வ்யஷ்டி ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீரங் களையும் உபாதியாகக்கொண்ட ஆத்மசைதன்யம் ஜீவன் வாஸ்தவத்தில் ஆத்மசைதன்யம் ஒன்றுதான். இதுதான் வாஸ்தவமானது உபாதிகள் வாஸ்தவமல்ல. ஆனுலும் பலவான இந்த உபாதிகள் ஆத்ம சைதன்யத்தையும் பலவாக காட்டுகின்றன. ஒரே வஸ்துவைப் பலவாகத் தோன்றும்படி செய்வதுதான் உபாதி என்பது. இவை வாஸ்தவமானவை என்று எதுவரையில் ஒருவன் எண்ணுவானே அதுவரை அவனுக்கு (உலக) பந்தத்திலிருந்து விடுதலை கிடையாது. "மாயையாகவும் அவித்யையாகவும் தானே ஆய்க்கொண்டு (அதில் ஆத்ம சைதன்யம் பிரதிபிம்பிப்பதால்) ஜீவனையும் ஈசுவரனையும் வெவ்வேருகக் காட்டுகிறது" என்று வேதமாதா உபதேசிக்கிருள்.

ஈசுவரனுக்கு மேலே சொன்ன காரண சரீரத்தின் ஸமஷ்டியில் பற்றுதல் கிடையாது. ஏனெனில் ஸுஷுப்தியில் அகங்காரம் என்பது மறைந்து போய்விடுவதால் பற்றுதலுக்கு காரணமே போய்விடுகிறது. இந்த காரண சரீர சமஷ்டியில் தோன்றும் ஈசுவரனை அவ்யாக்ருதன் என்றும் அந்தர்யாமி என்றும் சொல்வார்கள். இந்த ஈசுவர ஸ்வருபம் உத்தம பக்தர்களால் உபாசிக்கப்படுகிறது. இந்த உபாசனை செய்ய சக்தியில்லாதவர்களுக்கு வேதம் சூக்ஷ்ம சரீர சமஷ்டியில்

தோன்றும் ஈசுவரனை உபாசிக்கும்படி உபதேசிக்கிறது. அந்த நிலையில் அதற்கு ஹிரண்யகர்ப்பன், ஸூத்ராத்மா, மஹாப்ராணன் என்ற பெயர்கள் உண்டு. இந்த ஹிரண்ய கர்ப்பனுக்கும் ஸூக்ஷ்ம சரீரத்தில் பற்றுதல் கிடையாது. பற்றுதலுக்குக்காரணமான அஹங்காரம் இருந்தபோதிலும் அப்பொழுது ஸ்வப்னுவஸ்தையாகையாலும் அபிமானத்திற்கு ஆச்ரயமான ஸ்தூல சரீரத்தில் ப்ரவேசம் அப்பொழுது இல்லாததாலும் ஈசுவரனுக்கு ஸூக்ஷ்ம சரீரத்திலும் பற்றுதல் கிடையாது.

இந்த ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்தை உபாதியாகக் கொண்ட ஈசுவரனை உபாசிப்பதற்கு சக்தி இல்லாத ஜீவர் களைக்குறித்து சமஷ்டி ஸ்தூல சரீரத்தை உபாதியாகக் கொண்ட ஈசுவரனை உபாசிக்கும்படி வேதம் உபதேசிக்கிறது. அந்த ஈசுவரனுக்கு விராட், வைராஜன், வைசுவாநரன் என்ற பெயர்கள் உண்டு. இந்த ஈசுவரனுக்கும் ஸ்தூல சரீரத்தில் பற்றுதல் இருக்கிறதா எனில், இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் பற்றுதலும் மற்றவை களில் பற்றுதல் இல்லாமலும் இருந்தால்தான் அபிமானம் கொள்கிறுன் என்று கூறமுடியும். எல்லா ஜீவர்களுடைய சரீரங்களும் சேர்ந்துதான் (ஸமஷ்டி) ஈசுவரனுக்கு உபாதி யாகிறது. ஆகவே " நான் " என்ற அபிமானத்தால் விலக்கத் தக்க சரீரம் வேறு ஒன்றுமே இல்லாததால் அபிமானம் என்பதே பொருந்தாது.

இம்மூன்று வகையான ஈசுவரனையும் உபாசிக்க சக்தி யில்லாத ஜீவர்களுக்கும் வேதம் ஒரு வழி காட்டியிருக்கிறது. இதுதான் மும்மூர்த்திகளை உபாசிப்பது என்பது. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற காரியங்களைச் செய்பவரும் ராஜஸமூர்த்தி, ஸாத்விகமூர்த்தி, தாமஸமூர்த்தி இவைகளுடன் கூடியவரும் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற பெயர்கள் கொண்டவரும், துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலன காரியங் களுக்காக மத்ஸ்ய, கூர்ம, வராஹ, வாமனுதி அவதாரங்கள் எடுப்பவருமான ஈசுவரனை உபாஸித்தல்.

இப்படி மும்மூர்த்திகளில் தோன்றும் ஈசுவரனுக்கு அந்தந்த மூர்த்தியில் பற்றுதல் இருக்கிறதா இல்லையா என்றுல் இருக்கிறது என்றுதான் சொல்லவேணும். இல்லாவிடில்

அந்தந்த மூர்த்திகளால் சிருஷ்டி முதலிய காரியங்கள் செய்ய முடியாதல்லவா? ஆகையால் பற்றுதல் உண்டு. ஜீவனைப் போல் ஈசுவரனுக்கும் பற்றுதல் இருந்தால் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் என்ன வித்யாசம் எனில் வித்யாஸம் உண்டு. ஒவ்வொரு ஜீவனுக்கும் தன்னுடைய தனிப்பட்ட தேகத்தில் நான், என்னுடையது என்ற அஹங்கார மமகாரங்கள் எப்போதும் இருக்கிறது. ஈசுவரனுக்கோ எனில், கருணையால் உலகத்தைக் காப்பாற்றுவதற்காக அந்தந்த காரியங்களைச் செய்யும்போது மட்டும் அவையவைகளில் பற்றுதல் உண்டாக்கப்படுகிறது. எப்படி நாடக மேடையில் நடிப்பவன் தான் எடுத்துக்கொண்ட வேஷத்தில் எவ்வித அபிமானம் கொள்கிருனோ அதுபோலவேதான். ஆகையால் ஜீவனுக்குள்ள பற்றுதலுக்கும் ஈசுவரனுக்குள்ள பற்றுதலுக்கும் மிகுந்த வித்யாஸம் உண்டு.

இப்படிப்பட்ட மூர்த்திகளையும் உபாசிக்கமுடியாத ஜீவர்களுக்கும் வேதம் ஒரு வழி காட்டியிருக்கிறது. அதாவது தாம்ரம் முதலிய உலோகங்களால் செய்யப்பட்ட விக்ரஹங்களை ஆராதிப்பது. ஆகையால்தான் இந்தப்பிரதிமைகளை சிலர் ஈசுவரன் என்று உபாசிக்கிருர்கள் ப்ரஹ்மா முதலான மூர்த்திகளிலும் அவரவர்களின் பிரதிமைகளிலும் ஒரே பரமேச்வரனே அந்தர்யாமியாக இருந்துகொண்டு அந்தந்த உபாசகர்களுக்கு அனுக்கிரஹத்தைச் செய்கிருர் ஈசுவரன் ஸர்வ வியாபி. (எங்கும் உள்ளவன்) என்பதை விசாரித்துத் தெரிந்துகொள்ளாத மூடர்கள் ஆங்காங்கு வெவ்வேருக தனித்தனியான அநேகம் ஈசுவரர்கள் இருக்கிறதாக எண்ணிக் கொண்டு ஒருவருக்கொருவர் கலகம் செய்கிருர்கள். இவை எல்லாவற்றிற்குள்ளும் ஒரே ஈசுவரன்தான் இருக்கிருன் என்று அறியவேண்டும் எங்கும் ஒரே ஈசுவரனே இருக்கிறதானுல் சாஸ்திரங்கள் பற்பல மூர்த்திகளைக் குறித்து ஏன் பேசுகின்றன. ஏன் வித்தியாசமான உபாசனைகளையும் சொல்லுகின்றன? வெளியிலேயே மனதைச் செலுத்தும் பாமர ஜனங்களையும் மெள்ள மெள்ள உள்நோக்கு உடையவர்களாகச் செய்து "பரமாத்மா ஒருவர்தான். அவரேதான் ஜீவன். அவரைக் காட்டிலும் வேறு ஒன்றும் கிடையாது" என்ற ஞானத்தைக் கொடுத்து முக்தியடையச் செய்வதற்காகத்தான் அநாதி காலமாக வந்துள்ள வேற்றுமையை ஒப்புக்கொண்டு அவர்

களின் மனப்போக்கை யனுசரித்து வேற்றுமையுடன் உபாசனத்தை விதிக்கிறது. ஆனாலும் இதில் சுருதிக்கு தாத்பர்யமில்லை. இவ்வாறு ஒரே ஆத்மசைதன்யம் மூன்றுவித ஸமஷ்டி சரீரங்களை உபாதியாகக்கொண்டு ஈசுவரனாக ஆகும் விதம் கூறப்பட்டது.

இனி ஒரே பரமாத்ம சைதன்யத்துக்கு மூன்றுவித வ்யஷ்டி சரீரங்களாகிற உபாதிகளால் ஜீவத்வநிலை ஏற்பட்டவிதம் சொல்லப்படுகிறது.

வியஷ்டியில் காரணசரீரத்துடன் சேர்ந்த பரமாத்மாவுக்கு "ப்ராஜ்ஞன்" "பாரமார்த்திகன்" "அவித்யையுடன் கூடியவன்" என்று பெயர்கள். வியஷ்டியில் ஸூக்ஷ்ம சரீரத்துடன் இருக்கும் பரமாத்மாவுக்கு "தைஜஸன்" "ஸ்வப்னத்தில் தோன்றுபவன்" "ப்ராதிபாஸிகன்" எனப் பெயர். வியஷ்டியில் ஸ்தூல சரீரத்தில் தோன்றும் பரமாத்மாவுக்கு "விசுவன்" "வ்யாவஹாரிகன்" "சிதாபாஸன்" என்று பெயர்கள் உண்டு.

இந்த ஜீவனுக்கு ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் ஆகிய மூன்று சரீரங்கள் எதற்காக என்றால் பிரயோஜனம் இருக்கிறது. ஜீவன் என்பது அந்தக்கரணத்தில் தோன்றும் பரமாத்மாவின் பிரதிபிம்பம். ஆகையால் ஜீவனுக்கு ஸூக்ஷ்ம சரீரம் அவசியமானது. ஸ்தூல சரீரம் இல்லாவிடில் ஸூக்ஷ்ம சரீரத்தால் மட்டும் எவ்வித காரியமும் செய்யமுடியாதாகையால் ஸ்தூல சரீரமும் அவசியம். இவ்விரண்டும் காரண சரீரமில்லாமல் இருக்கமுடியாதாகையால் அதுவும் அவசியமாகும். ஆகையால் ஜீவனுக்கு மூன்றுவித வியஷ்டி (தனிப்பட்ட) சரீரங்களும் அவசியமாகும்.

இப்படிப்பட்ட மூன்றுவிதமான வியஷ்டி சரீரத்தில் ஜீவனுக்குப்பற்றுதல் உண்டோ இல்லையோ என்றால், உண்டு என்றுதான் சொல்லவேண்டும். எப்படியெனில், ஜீவனுக்கு காரியத்தை செய்யும் தன்மை இருக்கிறது. சரீரத்தில் பற்றுதல் இல்லாவிடில் காரியத்தை செய்யும் நிலையே ஜீவனுக்கு ஏற்படுவதில்லை. கர்மாவைச் செய்யாவிடில் சரீரம் ஏற்படாது. சரீரம் இல்லாவிடில் ஜீவனே இல்லை. ஆகையால் ஜீவனுக்கு பற்றுதல் உண்டு எனக்கொள்ளவேண்டும். இவ்விதம்

பரமாத்மா ஒருவரே வியஷ்டி, ஸமஷ்டி, உபாதிகளால் ஜீவனுகவும் ஈசுவரனுகவும் ஆகிருன். உதாஹரணம்: ஒரு மனிதனுக்குப் பிள்ளை பிறந்துவிட்டால் தந்தையாக ஆகிருன். பேரன் பிறந்தால் பிதாமஹனுகிருன். பிள்ளையும் பேரனும் இல்லாவிட்டால் தந்தையாகவோ, பிதாமஹ னுகவோ ஆவதில்லை. இதுபோல் அவித்யையால் ஜீவனுகவும் மாயையால் ஈசுவரனுகவும் ஒரே பரமாத்ம சைதன்யம் ஆகிறது. அவித்யையும் மாயையும் நீங்கிவிட்டால் ஜீவ நிலையும் ஈசுவர நிலையும் நீங்கி ஒரே பரமாத்ம சைதன்யம் தான் மிஞ்சுகிறது.

இந்த உதாஹரணத்தின் மூலம் ஒரே ஆத்மாவுக்கு வெவ் வேறு உபாதிகளால் ஜீவன், ஈசுவரன் என்று இரண்டு பெயர்கள் ஏற்பட்டது பொருத்தமாக இருக்கலாம். ஆனல் ஜீவன் சிற்றறிவுடையது. ஈசுவரன் பேரறிவுடையது. இந்த வித்யாஸத்துக்கு என்ன திருஷ்டாந்தம் எனில் இதற்கும் திருஷ்டாந்தம் இருக்கிறது. ஜலம் ஒன்ருக இருந்த போதிலும் பெரிய தடாகத்தில் இருக்கும் போது ஒரு கிராமத்தையே காப்பாற்றும் பெருத்த சக்திவாய்ந்ததாக இருக்கிறது. இதே ஜலம் குடத்தில் இருந்தால் ஒரு வீட்டுக்கு மட்டும் உபயோகமாகும் சிறு சக்திவாய்ந்ததாகிறது. அக்னியும் அப்படியேதான் பருமனுன பெரிய திரியுடன் கூடியதாகில் வெகுதூரத்தில் பிரகாசிக்கும் பெரிய சக்தி உள்ளதாயும் சிறிய திரியுடன் கலந்தால் வீட்டுக்குள் மட்டும் பிரகாசிக்கும் சிறு சக்தி உள்ளதாயும் காண்கிருேம். ஆத்மாவும் அதுபோலவேதான் எல்லாவற்றிற்கும் காரண மான பெரிய மாயையுடன் சம்பந்தப்பட்டிருக்கும்போது ஸர்வக்ஞமாயும் (எல்லாம் அறிந்தநிலை), காரியபூதமான சிறிய அவித்யையுடன் கூடிய போது சிற்றறிவுடையதாயும் தோன்று கிறது ஆகையால் ஸர்வக்ஞனுன (பேரறிவுடைய) ஆத்மா, கிஞ்சிக்ஞனுன (சிற்றறிவுடைய) ஆத்மா என இரண்டு ஆத்மாக்கள் கிடையாது. அதனுல்தான் வேதாந்த சாஸ்திரம் तत् (அது) என்பதற்கும் त्वं (நீ) என்பதற்கும் மூன்றுவித ஸம்பந்தம் மூலம் பிரிவு அற்ற ஒரே ஆத்மவஸ்துவை போதிக் கிறது.

மூன்று ஸம்பந்தங்களாவன:—

1. இருபதங்களுக்குள் ஸாமானுதிகரண்ய ஸம்பந்தம்

2. இருபதங்களின் பொருள்களுக்கு விசேஷண விசேஷ்ய பாவ ஸம்பந்தம்.

3. பதங்களுடனே அல்லது பதங்களின் அர்த்தங்களுடனே பிரத்யகாத்மாவிற்கு லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தம். இவைகளுக்கு திருஷ்டாந்தங்களாவன:—

"அந்த தேவதத்தன் இவன் (सोऽयं देवदत्तः) என்றதில் மூன்று ஸம்பந்தங்களும் உண்டு. "அவன்" (सः) இவன் (अयं) என்ற இரு பதங்களுக்கும் தேவதத்தன் என்பவனே ஆச்ரயமாகிறான். ஆகையால் இரு சொற்களுக்கும் ஸாமாநாதிகரண்ய ஸம்பந்தம்.

அந்தக்காலம் அந்த இடம் இவற்றுடன்கூடிய தேவதத்தனைக் குறிக்கும் सः என்ற சொல்லின் பொருளுக்கும், இந்தக்காலம், இந்த தேசம் இவற்றுடன்கூடிய தேவதத்தனைக் குறிக்கும் अयं என்ற சப்தத்தின் பொருளுக்கும் ஒன்றுக்கொன்று வேற்றுமையை விலக்குவதால் இருபதங்களுக்கும் விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந்தம் உள்ளது.

सः अयं என்ற இரு சொற்களோ அல்லது அவைகளின் பொருள்களோ அகண்டார்த்தமான (பிரிவற்ற வஸ்துவான) தேவதத்த வ்யக்தியை மட்டும் குறிக்கும் விஷயத்தில் விருத்தமான அம்சங்களை விட்டு விரோதமில்லாத அம்சமான தேவதத்தனை மட்டும் குறிப்பிடுவதால் லக்ஷ்யலக்ஷண பாவ ஸம்பந்தமும் உள்ளது.

இந்த மூன்று ஸம்பந்தங்களும் तत् त्वं असि (நீ அதாக இருக்கிறாய்) என்ற வாக்யத்தில் எப்படி அமைந்திருக்கிறது என்பதை பார்ப்போம்.

'தத்' பதத்திற்கும் 'த்வம்' பதத்திற்கும் ஒரே சைதன்யம் ஆச்ரயமாக இருப்பதால் இருபதங்களுக்கு ஸாமாநாதிகரண்ய ஸம்பந்தம் உள்ளது.

ஸர்வக்ஞத்வம் (எல்லாம் அறியும் தன்மை) பரோக்ஷத்வம் (இந்திரியங்களுக்கு புலப்படாத்தன்மை) முதலியவைகளுடன்கூடிய சைதன்யத்தைச் சொல்கிற 'தத்' பதத்தின் பொருளுக்கும் கிஞ்சிஜ்ஞத்வம் (ஸ்வல்பமான ஞானம்) முதலியவைகளுடன்கூடிய சைதன்யத்தை சொல்கிற 'த்வம்'

பதத்தின் பொருளுக்கும் ஒன்றுக்கொன்று வேற்றுமையை விலக்குவதால் ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந்தமுள்ளது. 'தத் த்வம்' பதங்களாலோ அவைகளின் அர்த்தங்களாலோ பிரிவற்ற ஸச்சிதானந்த வஸ்து மட்டும் குறிப்பிடப்படும்பொழுது விருத்தமான அம்சங்களைத் தள்ளி விட்டு விரோதமில்லாத சைதன்யத்தை மட்டும் குறிப்பதால் லக்ஷ்ய லக்ஷணபாவ ஸம்பந்தமும் உள்ளது.

மேலே சொல்லப்பட்ட ஸம்பந்தங்களில் மூன்றுவதான லக்ஷ்யலக்ஷணபாவ ஸம்பந்தத்தை 'பாகத்யாகலக்ஷணை' (அம்சத்தை விடும் லக்ஷணை) ஜஹதஜஹல்லக்ஷணை (விட்டு விடாதலக்ஷணை) என்றும் கூறுவது உண்டு ஒரு வாக்யத் திலிருந்து அதன் பொருளைப்புரிந்து கொள்வதற்கு முக்ய வ்ருத்தி, குணவ்ருத்தி லக்ஷணுவிருத்தி என்ற மூன்று வ்ருத்தி களைக்காரணமாக சாஸ்திரங்களில் கூறுவார்கள். राजा गच्छति என்ற வாக்யத்திலிருந்து முக்ய விருத்தியினுலேயே அதாவது சப்த சக்தியினுலேயே 'அரசன் போகிருன்' என்று அறிந்து கொள்கிருேம். नील उत्पल என்ற வாக்யத்தில் नील என்ற சொல் கருப்பு நிறத்தையும் उत्पल என்ற சொல் உத்பல புஷ்பத்தையும் குறிப்பிடும். நீலநிறம் புஷ்பமாகாது புஷ்பம் நீல நிறமாகாது. ஆனுலும் புஷ்பத்தில் நீல நிறம் உள்ளது. ஆகவே கௌணவிருத்தியால் நீல நிறமுள்ள உத்பலபுஷ்பம் என்று இந்த வாக்யத்திற்கு பொருள் கிடைக்கிறது. இது போலவே अग्निः माणवकः என்ற வாக்யத்திற்கு நெருப்பு மாணவன் என்று பொருள். மாணவன் நெருப்பாக இருக்க முடியாது ஆனுலும் அக்னியில் உள்ள காந்தி என்ற குணம் மாணவனிடம் இருப்பதால் अग्निः माणवकः என்று சொல்கிருேம். இந்த வாக்யத்திற்கு கௌண விருத்தியால் காந்தியுள்ள மாணவன் என்று பொருள் கூறுகிருேம்.

லக்ஷணு விருத்தியானது ஜஹல்லக்ஷணு (விட்டலக்ஷணை) அஜஹல்லக்ஷணு (விடாத லக்ஷணை) ஜஹதஜஹல்லக்ஷணு (விட்டும் விடாத லக்ஷணை) என்று மூன்றுவிதமாகும்.

ஒரு சொல்லின் பொருளை விட்டுவிட்டு வேறு பொருள் கொள்வது ஜஹல்லக்ஷணையாகும். உதாஹரணம் गङ्गायां घोषः 'கங்கையில் இடைச்சேரி' என்பது இவ்வாக்யத்தின் பொருள்.

கங்காபதம் முக்யவிருத்தியால் பிரவாஹத்தைக் குறிக்கும் ஜலப்ரவாஹத்தில் இடைச்சேரி இருக்கமுடியாது. ஆகவே முக்யார்த்தத்தை ஏற்றுக்கொண்டால் விரோதம் ஏற்படுவதால் ஜஹல்லக்ஷணு வ்ருத்தியால் ப்ரவாஹம் என்ற முக்யார்த்தத்தை விட்டுவிட்டு गङ्गायां என்ற சொல்லுக்கு கங்கைக் கரையில் என்ற அர்த்தம் கொள்கிறோம். இப்பொழுது விரோதமில்லை. கங்கைக் கரையில் இடைச்சேரி இருக்கலாம். ஆகவே गङ्गायां घोषः என்ற வாக்யத்திற்கு ஜஹல்லக்ஷணையால் 'கங்கைக்கரையில் இடைச்சேரி' என்ற பொருள் கிடைக்கிறது

ஒரு சொல்லின் பொருளை விடாமல் அத்துடன் வேறு பொருளையும் சேர்த்துக்கொள்வது அஜஹல்லக்ஷணையாகும். உதாஹரணம். शोणो धावति 'சிகப்பு ஓடுகிறது' என்பது இவ்வாக்யத்தின் முக்யார்த்தம் இதில் விரோதம் ஏற்படுகிறது. சிகப்பு நிறம் ஓடாதல்லவா அதனுல் இங்கு சோணபதத்தின் முக்யார்த்தமான சிகப்பு நிறத்தைவிடாமல் அத்துடன் குதிரை என்ற வேறு அர்த்தத்தையும் சேர்த்துக்கொண்டு அஜஹல் லக்ஷணுவ்ருத்தியால் இவ்வாக்யத்திற்கு 'சிகப்புக்குதிரை ஓடுகிறது' என்ற அர்த்தம் கிடைக்கிறது.

ஒரு சொல்லின் பொருளில் ஒரு அம்சத்தை விட்டு விட்டு மற்றொரு அம்சத்தை விடாமல் வைத்துக்கொள்வதற்கு ஜஹதஜஹல்லக்ஷணை என்று பெயர். सोऽयं देवदत्तः அவன் இந்த தேவதத்தன் என்பது இந்த வாக்யத்தின் முக்யார்த்தம் இங்கு सः என்ற சொல் அந்ததேசம் அந்த காலம் இவற்றுடன் கூடிய தேவதத்தனையும் अयं என்ற சொல் இந்த தேசம் இந்த காலம் இவற்றுடன் கூடிய தேவதத்தனையும் குறிப்பிடுகிறது இங்கு அந்தக்காலமும் இந்தக்காலமும் அந்த தேசமும் இந்த தேசமும் ஒன்ருக முடியாது. ஆகவே விரோதமேற்படுகிறது. ஆகையினுல் ஜஹத்அஜஹல்லக்ஷணு விருத்தியால் இரண்டு சொற்களிலும் உள்ள முக்யார்த்தத்தில் ஏகதேசமான காலதேசங்களைவிட்டு ஏகதேசமான தேவதத்த வியக்தியை மட்டும் பொருளாகக் கொள்ளவேண்டும். இப்பொழுது விரோதமில்லை- இந்த இடங்களில் முக்யார்த் தத்தை ஏற்றுக்கொண்டால் விரோதம் ஏற்படுவதால் லக்ஷணு விருத்தியால் வேறு அர்த்தம் கொள்ளப்படுகிறது.

तत् (அது) त्वं (நீ) இந்த இரு பதங்களுக்கும் எது வாச்யார்த்தம், எது லக்ஷ்யார்த்தம் என்றால், மாயை, மாயையில் உள்ள பிரதிபிம்பம், மாயைக்கு அதிஷ்டானமான பிரம்மம் இம்மூன்றும் சேர்ந்து தத்பதத்தின் வாச்யார்த்தம் ப்ரஹ்ம ஸ்வரூபம் மட்டும் தத்பத லக்ஷ்யார்த்தம் இதுபோல் त्वं (நீ) என்ற பதத்துக்கு வாச்சியார்த்தமாவது அவித்யை, அவித்யையில் பிரதிபிம்பம், அவித்யையின் அதிஷ்டானமான ஸாக்ஷி சைதன்யம் இம்மூன்றும் சேர்ந்தது. त्वं பதத்தின் லக்ஷியார்த்தம் ஸாக்ஷிரூபியாக இருக்கும் கூடஸ்த சைதன்யம். (கூடஸ்தம் என்றால் மாறுதலில்லாதது அசைவற்றது முக்காலத்திலும் நாசமில்லாதது எனப்பொருள்). ஆகையால் तत् त्वं இரு பதங்களின் வாச்சியார்த்தமான ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் விரோதம் ஏற்படுவதால் அந்த இரண்டிலும் விருத்தமான அம்சங்களை விட்டுவிட்டு விருத்தமில்லாத பிரம்ம சைதன்யம் கூடஸ்த சைதன்யம் இவற்றை லக்ஷணையால் அர்த்தமாகக் கொள்ளவேணும். தத்பத லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்ம சைதன்யமும் த்வம்பத லக்ஷ்யார்த்தமான கூடஸ்த சைதன்யமும் ஒரே வஸ்துவானபடியால் இப்பொழுது மஹாவாக்யார்த்தத்தில் விரோதமில்லை. ஆகவே தத்த்வம்பத லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்ம கூடஸ்த சைதன்யங்களின் ஐக்யம் தான் அகண்டார்த்தமாக மஹாவாக்யத்தால் போதிக்கப்படுகிறது.

உதாஹரணமாக பிள்ளை, பேரன் என்ற இரண்டு அம்சங்களை நீக்கிவிட்டால், தகப்பன் பாட்டன் என்ற தன்மைகள் போய், தனிப்பட்ட தேவதத்தன் என்பவனே மிஞ்சுகிருன்; இதுபோல் பெரிய குளம், குடம் என்ற அம்சங்களை நீக்கிவிட்டால், சீதளமானதும், த்ரவமானதும், ருசியாயுமுள்ள ஜலம் மட்டும் மீதமிருக்கும். அதேபோல், பெரிய திரி, சிறிய திரி என்ற வித்யாஸத்தை நீக்கிவிட்டால், சிவந்த பிரகாசமுள்ள, உஷ்ணமான அக்னி மட்டும் மிஞ்சுகிறது. அப்படியே மாயை, அவித்யை என்ற இரு உபாதிகளையும் நீக்கிவிட்டால் சச்சிதானந்த ஸ்வபாவமான ஆத்மா ஒன்றே மிஞ்சுகிறது.

இப்படி விசாரணை செய்து, பரிபூர்ண ஸ்வபாவமுள்ள ஆத்மாவே என்னுடைய ஸ்வரூபம், अहं ब्रह्मास्मि, ब्रह्मैवाहमस्मि (நான் பிரம்மம், ப்ரஹ்மமே நான்) என்ற அனுபவம் எந்த

மகானுபாவனுக்கு வருகிறதோ அவனே முக்தன். செய்ய வேண்டியதை செய்து முடித்தவனும் அவனே என்று வேதாந்த வாக்கியங்கள் முழங்குகின்றன.

ஏழாவது வர்ணகம் முற்றும்.

---

## ॥ अष्टमवर्णकम् ॥

इतः परमात्मनः पूर्वोक्तशरीरत्रयविलक्षणत्वमवस्थात्रयसाक्षित्वं पञ्चकोशव्यतिरिक्तत्वं सच्चिदानन्दस्वरूपत्वं च चत्वारि लक्षणानि क्रमेण चतुर्भिर्वर्णकैरुच्यन्ते। एतेषु शरीरत्रयविलक्षणत्वं पञ्चकोशव्यतिरिक्तत्वं चातद्व्यावृत्तिलक्षणम्, अवस्थात्रयसाक्षित्वं तटस्थलक्षणम्, सच्चिदानन्दस्वरूपत्वं स्वरूपलक्षणम्। तथा आकाशादिशरीरत्रयान्तं दृश्यजातं 'नेति नेति' इति वाक्येन विहायावशिष्टं वस्त्वात्मेत्यतद्व्यावृत्तिलक्षणम्, 'अस्य प्रपञ्चस्य यदधिष्ठानं तदात्मवस्तु' इति तटस्थलक्षणम्, सच्चिदानन्दः पूर्णं नित्यमात्मवस्तु' इति स्वरूपलक्षणम् ॥

अस्मिन्नष्टमवर्णके शरीरत्रयविलक्षणत्वमुच्यते। शरीरत्रयस्याज्ञाने तद्विलक्षणत्वमपि दुर्विज्ञेयमिति प्रथमतः शरीरमुच्यते। स्थूलं सूक्ष्मं कारणमिति शरीरं त्रिविधम्। तत्र सर्वेषां प्रत्यक्षं करचरणाद्यवयवोपेतं स्तम्भवद्वर्तमानं यत् तत्स्थूलशरीरम्। सप्तदशावयवकं सूक्ष्मशरीरम्। अज्ञानमेव कारणशरीरम्। एतेषां शीर्यते क्षीयत इति व्युत्पत्त्या शरीरमिति नाम। तथा हि — इदं स्थूलशरीरमन्नाभावे शीर्यते, अन्ने विद्यमानेऽपि व्याधिना शीर्यते, तदभावेऽपि वयःपरिणामेन शीर्यते। पल्लवमिव सूक्ष्मशरीरमपि कदाचिद्वर्धते कदाचित् क्षीयते। रागद्वेषाद्यन्तःकरणवृत्तिविजृम्भणमेव सूक्ष्मशरीरस्य वृद्धिः, तासां संकोच एव जीर्णता। कारणशरीरस्यापि 'अहं जीवः' इति

वृद्धिः, 'अहं ब्रह्मास्मि' इति संकोचः। अनयोः सूक्ष्मकारणशरीरयोरुक्तरूपा वृद्धिरज्ञानिषु दृश्यते, संकोचश्च ज्ञानिषु दृश्यते। एवं शरीरत्रयस्यापि जराया दर्शनेन 'शरीरम्' इति नाम। एतेषां 'देहः' इति नाम च 'दह्यते' इति व्युत्पत्त्या आगतम्॥

ननु लोके सर्वोऽपि स्थूलदेहोऽग्निना दह्यते, सूक्ष्मशरीरं कारणशरीरं च न कदाचिदप्यग्निना दह्यते, तत्कथमिति तेषां देहत्वमिति चेत् — अग्नेरप्यधिकेन तापत्रयेण सर्वमपि शरीरं दह्यते; अतः शरीरत्रयस्यापि देह इति नाम युज्यते। स्थूलशरीरस्य स्तम्भवत्स्थूलभूतकार्यत्वेन स्थूलत्वम्। सूक्ष्मशरीरस्य स्थूलशरीरवत्स्थूलत्वाभावात्सूक्ष्मभूतजन्यत्वाच्च सूक्ष्मत्वम्। लीनं शब्दाद्यर्थं गमयतीति 'लिङ्गम्' इत्यपि नामास्यागतमिति ज्ञेयम्। स्थूलसूक्ष्मशरीरद्वयकारणस्य कारणशरीरमिति नाम॥

हे स्वामिन्, पूर्वं स्थूलं सूक्ष्ममिति शरीरद्वयमपि पञ्चभूतेभ्य उत्थितमित्युक्तम्, इदानीं कारणशरीरादुत्थितमिति कथमुच्यत इति चेत्, शृणु। अध्यारोपसृष्टौ तथा पञ्चभूतोत्थितमित्युक्तम्। तत्तथैव। आत्मनः शरीरवत्त्वेऽज्ञानं कारणमिति युगपत्सृष्टौ सर्वस्यापि जगतोऽज्ञानमेव कारणमिति कृत्वा शरीरद्वयस्याप्यज्ञानमेव कारणमित्युक्तम्॥

कथं क्रमसृष्टिः कथं युगपत्सृष्टिरिति चेत्. उच्यते। मूलप्रकृतिर्माया अविद्या आवरणं विक्षेप आकाशो वायुरग्निरापः पृथिवीति क्रमेणोत्पत्तिकथनं क्रमसृष्टिः। सर्वोऽपि प्रपञ्च आत्माज्ञानेन जात इति कथनं युगपत्सृष्टिः। ननु स्थूलस्य प्रत्यक्षेणानुभूयमानत्वात्तत्र न संदेहः; सूक्ष्मशरीरस्य बहिरप्रतीतेस्तदस्तीति ज्ञानं कथं जायत इति चेत्, शृणु। सप्तदशकरणकार्यैस्तत्सूक्ष्मशरीरं ज्ञातं

शक्यम्। तत्सप्तदशकरणकार्यमपि स्थूलशरीरेण कर्तुं न शक्यते वेति चेत्, सुषुप्तिमूर्च्छामरणेषु स्थूलशरीरे विद्यमानेऽपि सप्तदशकरणकार्याणामदर्शनाज्जाग्रत्स्वप्नयोस्तत्कार्यदर्शनाच्च स्थूलशरीरव्यतिरेकेण सप्तदशावयवात्मकं लिङ्गशरीरमस्त्येवेत्यवगन्तव्यम् ॥

इदं सूक्ष्मशरीरमपि स्थूलशरीरं विना न कदापि कार्यं करोति, अत उभयमपि दर्शनादिकार्यं करोत्विति चेत्, शृणु। विवेकेन विचार्यमाणे दर्शनादिकार्यं सकलमपि सूक्ष्मशरीरसाध्यमेव, न तु स्थूलसाध्यम्। कथमिति चेत्। काष्ठमाश्रित्याग्निर्दाहपाकादिकर्म करोति, काष्ठाभावे न करोति; तथाप्यग्निकार्यमेव दाहपाकादि, न तु काष्ठकार्यं यथा; तथा स्थूलशरीरमाश्रित्य तेन सूक्ष्मशरीरेण क्रियमाणमपि दर्शनादिकं सूक्ष्मकार्यमेव, न तु स्थूलकार्यम्। अतो दर्शनादिकार्येणानुमेयं सप्तदशावयवकं सूक्ष्मशरीरमित्युक्तम्। ज्ञानेन्द्रियपञ्चकं कर्मेन्द्रियपञ्चकं प्राणपञ्चकं मनो बुद्धिश्चेति सप्तदशावयवाः। एतत्सप्तदशकं सूक्ष्मशरीरम् ॥

श्रोत्रत्वक्चक्षुर्जिह्वाघ्राणानि ज्ञानेन्द्रियाणि। शब्दस्पर्शरूपरसगन्धा एतेषां विषयाः। तेषां ज्ञानसाधनत्वाज्ज्ञानेन्द्रियत्वम्। सुखप्रकाशाभिव्यञ्जकसत्त्वगुणकार्यत्वादेतेषां ज्ञानसाधनत्वम्। वाक्पाणिपादपायूपस्थाः कर्मेन्द्रियाणि। वचनादानगमनविसर्गानन्दनरूपक्रियासाधनत्वेन तेषां कर्मेन्द्रियत्वम्। चञ्चलमलिनरजोगुणकार्यत्वेनैतेषां क्रियासाधनत्वम्। प्राणापानव्यानोदानसमानाः प्राणाः। ते उच्छ्वासनिःश्वासादिव्यापारैः शरीरधारकत्वाद्बलप्रदत्वाच्च प्राणसंज्ञाः। तादृशसामर्थ्यं च तेषां रजोगुणजन्यत्वादिति ज्ञेयम्। विमर्शात्मकान्तःकरणवृत्तिर्मनः। निश्चयात्मकान्तःकरणवृत्तिर्बुद्धिः। एवं सूक्ष्मशरीरस्य सप्तदशावयवाः ॥

लोके एकस्मिन्वस्तुनि ज्ञातव्ये उद्देशो लक्षणं परीक्षा चेत्युपायत्रयमस्ति । तत्र वस्तुनामग्रहणमात्रमुद्देशः । वस्तुस्वरूपविचारः परीक्षा । सप्तदशावयवनामग्रहणेनोद्देशो जातः । इतः परं लक्षणं परीक्षां च वदामः । लक्षणं नामाव्याप्त्यतिव्याप्त्यसंभवरूपदोषत्रयरहितोऽसाधारणधर्मः । लक्ष्यैकदेशे लक्षणस्यावर्तनमव्याप्तिः । यथा कपिला गौरिति । अलक्ष्येऽपि लक्षणस्य वर्तनमतिव्याप्तिः । यथा चतुष्पाद्गौरिति । लक्ष्ये क्वापि लक्षणस्यावर्तनमसंभवः । यथैकशफा गौरिति । दोषत्रयरहितोऽसाधारणधर्मो लक्षणं किमिति चेद्गोः सास्नादिमत्त्वम् ॥

तद्वज्ज्ञानेन्द्रियाणां किं लक्षणमिति चेत्क्रमेण कथयिष्यामः ॥

तत्र श्रोत्रेन्द्रियं किमिति चेत्, दिग्रूपाधिष्ठानदेवतया प्रेरितं सत्कर्णशष्कुल्यवच्छिन्ननभोदेशे स्थित्वा अष्टादशभाषाणां वेदशास्त्राणां चेदमित्थमिति ज्ञातृ यदिन्द्रियं तच्छ्रोत्रम् । परीक्षा कीदृशीति चेत् — कर्णशष्कुल्यवच्छिन्नं नभ एव जानात्विति चेत्सुषुप्तिमूर्च्छादिसमयेऽपि कर्णशष्कुल्यवच्छिन्नं नभो विद्यमानमपि शब्दं न गृह्णाति ; तस्मात्तदन्यदिति परीक्षा । त्वगिन्द्रियं किमिति चेत्, वायुरूपाधिष्ठानदेवतया प्रेरितं सत्त्वचं सर्वत्र व्याप्य शीतमुष्णं मृदु कठिनं कर्कशमित्यनेकविधं स्पर्शं यज्जानाति तत्त्वगिन्द्रियम् । त्वगेव जानात्वित्युक्ते सुषुप्त्यादिषु त्वचि विद्यमानायामपि स्पर्शं न जानाति । तस्मात्सा न त्वगिन्द्रियम् । चक्षुरिन्द्रियं किमिति चेत्, सूर्यरूपाधिष्ठानदेवतया प्रेरितं सत्कृष्णताराग्रमाश्रित्य नीलं श्वेतं रक्तं पीतं हरितं धवलं स्थूलं सूक्ष्मं ह्रस्वं दीर्घमित्युक्तबहुविधरूपं यज्जानाति तच्चक्षुरिन्द्रियम् । कृष्णताराग्रमेव जानात्विति चेत्, सुषुप्त्यादिषु तद्विद्यमानमपि न जानाति ; तस्मान्न तच्चक्षुरिन्द्रियम् । रसनेन्द्रियं

किमिति चेत्, वरुणरूपाधिष्ठानदेवतया प्रेरितं सद्रसनामाश्रित्य मधुरतिक्तलवणाम्लादीन्षड्रसान्यज्जानाति तद्रसनेन्द्रियम् । रसनैव जानात्विति चेत्, सुषुप्त्यादिषु रसनामात्रं विद्यमानमपि रसं न जानाति; अतो न तद्रसनेन्द्रियम् । घ्राणेन्द्रियं किमिति चेत्, अश्विदेवतया प्रेरितं सन्नासाग्रमाश्रित्य सुगन्धं दुर्गन्धं च यज्जानाति तद्घ्राणेन्द्रियम् । नासाग्रमेव जानात्विति चेत्, सुषुप्त्यादौ विद्यमानमपि सन्नासाग्रं गन्धं न जानाति; तस्मान्न तद्घ्राणेन्द्रियम् । एवं ज्ञानेन्द्रियलक्षणानि ॥

इतः परं कर्मेन्द्रियलक्षणमुच्यते । अग्निरूपाधिष्ठानदेवतया प्रेरितं सत्तालुमूलमुत्तराधरोष्ठं दन्तं कण्ठं हृदयं नाभिमेवमादिस्थानान्याश्रित्य पूर्वोक्तशब्दभेदान्यदुच्चरति तद्वागिन्द्रियम् । सुषुप्त्यादौ ताल्वादिस्थानं विद्यमानमप्यक्षराणि नोच्चरति । तस्मान्न तद्वागिन्द्रियम् । इन्द्ररूपाधिष्ठानदेवतया प्रेरितं सत्करतलमाश्रित्यादानादिक्रिया यत्करोति तत्पाणीन्द्रियम् । सुषुप्त्यादौ विद्यमानमपि करतलं नादानादिक्रियाः करोति । अतो न तत्पाणीन्द्रियम् । उपेन्द्ररूपाधिष्ठानदेवतया प्रेरितं सत्पादतलमाश्रित्य गमनं यत्करोति तत्पादेन्द्रियम् । सुषुप्त्यादौ विद्यमानमपि पादतलं न गमनक्रियां करोति । अतो न तत्पादेन्द्रियम् । मृत्युरूपाधिष्ठानदेवतया प्रेरितं सद्गुदमाश्रित्य यत्पुरीषविसर्जनादि करोति तत्पाय्विन्द्रियम् । सुषुप्त्यादौ विद्यमानमपि गुदं तन्न करोति । अतो न तत्पाय्विन्द्रियम् । प्रजापतिरूपाधिष्ठानदेवतया प्रेरितं सद्योनिं लिङ्गमप्याश्रित्य शुक्लशोणितमूत्रविसर्जनं यत्करोति तदुपस्थेन्द्रियम् । सुषुप्त्यादौ योनिलिङ्गं च विद्यमानमपि तद्विसर्जनं न करोति । अतो न तदुपस्थेन्द्रियम् । एवं कर्मेन्द्रियलक्षणान्युक्तानि ॥

अथ प्राणपञ्चकस्य लक्षणमुच्यते। चिशिष्टनामकाधिष्ठान-देवतया प्रेरितः सन्हृदये स्थित्वा य उच्छ्वासं करोति स प्राणः। विश्वसृष्टनामकाधिष्ठानदेवतया प्रेरितः सन्गुदे स्थित्वा यो निःश्वासं करोति सोऽपानः। विश्वयोनिनामकाधिष्ठानदेवतया प्रेरितः सन्नन्त-र्बहिश्च शरीरे स्थित्वेन्द्रियाणां बलं यच्छन्यो वर्तते स व्यानः। अजनामकाधिष्ठानदेवतया प्रेरितः सन्कण्ठे स्थित्वा सुषुप्ताविन्द्रियाणां गोलकेषु लयं कारयित्वा जाग्रति पुनरिन्द्रियाणि गोलकेषु स्थापयित्वा उत्क्रमणकाले इन्द्रियाणि गृहीत्वा लोकान्तरं गच्छति यो वायुः स उदानः। यो जयनामकाधिष्ठानदेवतया प्रेरितः सन्नाभिदेशे स्थित्वा भक्ष्यभोज्यचोष्यलेह्यरूपं चतुर्विधमन्नं जाठराग्नौ पाचयित्वा शरीरपुष्टिं करोति स समानवायुः। एवं पञ्च प्राणाः॥

नागः कूर्मः कृकरो देवदत्तो धनञ्जय इत्यन्ये पञ्च वायवः श्रूयन्ते। तेषामपि पूर्वप्रोक्तपञ्चप्राणेष्वन्तर्भावः। तत्र नागो वान्तिं करोति। कूर्म उन्मीलननिमीलने अधरोष्ठयोः संयोगं विभागं च करोति। कृकरः क्षुतं करोति। देवदत्तो विजृम्भणं करोति। धनंजयः शरीरस्योच्छूनतां करोति॥

इतः परमन्तःकरणचतुष्टयं मनो बुद्धिरहंकारश्चित्तमिति जानीहि। अत्र मनश्चन्द्रेणाधिष्ठितं सत्कण्ठमाश्रित्य स्थित्वा संकल्पविकल्पौ करोति। बुद्धिश्चतुर्मुखेणाधिष्ठिता सती मुखमाश्रित्य स्थित्वा निश्चयं करोति। अहंकारो रुद्रेणाधिष्ठितः सन्हृदयमाश्रित्य स्थित्वा अभिमानं करोति। क्षेत्रज्ञरूपविष्णुनाधिष्ठितं सच्चित्तं नाभौ स्थित्वा अवधानं करोति। एतल्लिङ्गशरीरं काचिच्छ्रुतिः षोडशात्मकं वदति। तस्मिन्पक्षेऽन्तःकरणमेकमिति जानीहि। पुनरन्या श्रुतिः सप्तदशात्मकं वदति। तस्मिन्पक्षे मनो बुद्धिरिति द्विविधमिति जानीहि। पुनरन्या

श्रुतिरेकोनविंशत्यात्मकं वदति । तत्पक्षे मनो बुद्धिरहंकारश्चित्तमिति चतुर्विधमन्तःकरणमिति जानीहि । एवं लिङ्गशरीरनिर्णयः ॥

इदानीं कारणशरीरमुच्यते । अज्ञानमेव कारणशरीरम्, स्थूलसूक्ष्मशरीरकारणत्वात् । अस्य जीवेश्वरयोः प्रथमशरीरत्वात्पश्चाद्भाविशरीरद्वयकारणत्वम् । तस्मिन्नर्थे प्रमाणं किमिति चेत्-अज्ञानं कारणमिति श्रुतिर्वदति । कार्येण कारणमूह्यत इति युक्तिः । 'अहमज्ञः' इत्यनुभवः ॥

भोः स्वामिन्, आत्मा क इत्युक्ते शरीरत्रयविलक्षण इति बोधयितुं प्रथमतः शरीरत्रयं लक्षणैर्बोधितं किल? एवमेवात्मापि लक्षणैर्बोधयितव्य इति चेत्, शृणु । सर्वत्र परिपूर्णं ब्रह्मेति तदेव ब्रह्म प्रत्यगात्मस्वरूपमिति च सकलोपनिषदो वदन्ति । तस्मादात्मा सच्चिदानन्दस्वरूप एवेति जानीहि । सत्किं चित्किमानन्दः किमिति चेत्-बाधरहितं सत्, स्वप्रकाशश्चित्, स्वानुभूतिरेवानन्द इति जानीहि । एवमात्मा सच्चिदानन्दस्वरूपः । अनात्मा त्वनृतजडदुःखस्वरूपः ॥

आत्मानात्मनोरन्योन्यवैलक्षण्यं कथं ज्ञातव्यमिति चेत् – यथा पुरुषलक्षणं स्त्रियां नास्ति स्त्रीलक्षणं पुरुषे नास्ति. एवमेव सल्लक्षणमनृते नास्त्यनृतलक्षणं सति नास्ति । यथा प्रकाशलक्षणमन्धकारे नास्त्यन्धकारलक्षणं प्रकाशे नास्ति, एवं चिल्लक्षणं जडे नास्ति जडलक्षणं चिति नास्ति । यथा चन्द्रिकालक्षणमातपे नास्त्यातपलक्षणं चन्द्रिकायां नास्ति, एवमानन्दलक्षणं दुःखे नास्ति दुःखलक्षणमानन्दे नास्ति ॥

सच्चिदानन्दानामनृतजडदुःखानां च लक्षणानि विस्तरेण ज्ञातव्यानीति चेत्, शृणु वदामः । कालत्रयेऽपि केनाप्यबाध्यमान-

मेकरूपं सत्। कालत्रयेऽपि मिथ्याभूतमपि सत्यमिव भासमानं विचार्यमाणे बाध्यमानमसत्। अस्य दृष्टान्तः–मन्दान्धकारे वर्तमाना रज्जुः स्वारोपितसर्पमाल्यदण्डजलधारादिभिर्बाध्यमाना भ्रान्तेः पूर्वकाले पश्चात्काले भ्रान्तिकाले चैकरूपा वर्तते; अध्यस्तसर्पादि तु कालत्रयेऽपि स्वयं मिथ्याभूतमविद्यमानमपि विद्यमानमिव प्रतीयते, प्रमातुः परमार्थविचारेण बाध्यते च। एवंभूतरज्जुलक्षणं सर्पादौ नास्ति सर्पादिलक्षणं रज्जौ च नास्ति। अतोऽन्योन्यं शब्देनार्थेन लक्षणेन प्रतीत्या व्यवहारेण च पञ्चभिः प्रकारैर्वैलक्षण्यं यथा अनयोरस्ति, तथा सल्लक्षणमसल्लक्षणे देहादिप्रपञ्चे नास्ति, असल्लक्षणं च सल्लक्षणे प्रत्यगात्मनि नास्ति। तस्मादनयोरन्योन्यं शब्देनार्थेन लक्षणेन प्रतीत्या व्यवहारेण च पञ्चभिः प्रकारैर्वैलक्षण्यमस्ति। तस्मादेवं विचार्य सतोऽनृतस्य च वैलक्षण्यं जानीहि ॥

इतः परं चितो जडस्य च वैलक्षण्यमुच्यते। सूर्यादिप्रकाशमनपेक्ष्य स्वप्रकाशेनैव प्रकाशमानं स्वारोपितस्य जडस्यापि प्रकाशकम्, अत एव सूर्यादिप्रकाशपदार्थं मृच्छिलाद्यप्रकाशपदार्थं च प्रकाशयति यद्वस्तु तच्चित्। जडलक्षणं कीदृशमिति चेत्, स्वयमप्रकाशमानमन्यपदार्थस्य च प्रकाशनेऽसमर्थं यत्तज्जडम्। अत्रोभयत्र दृष्टान्तः–यथा आदित्यः प्रकाशान्तरानपेक्षं स्वयमेव प्रकाशमानः सन्स्वप्रकाशसंबन्धिघटपटादिपदार्थमपि प्रकाशयति, तथा चित्प्रकाशः; यथा घटादिपदार्थः स्वयमप्रकाशमानोऽन्यपदार्थमपि प्रकाशयितुमसमर्थः, तथा जडवस्त्वपीति जानीहि। यथा आदित्यस्य घटादेश्च शब्दादिपञ्चप्रकारैर्वैलक्षण्यम्, एवं चितो जडस्य च वैलक्षण्यम् ॥

एवं ज्ञानस्य किं फलमिति चेत्, लोके प्रकाश्यपदार्थनिष्ठविकाराः प्रकाशवस्तु कालत्रयेऽपि न स्पृशन्तीति ज्ञानफलम्। तदपि

कथमिति चेत्, आदित्येन प्रकाश्यमानघटादिनिष्ठच्छिद्रेण हानि-रच्छिद्रेण लाभः स्पर्शेन त्याज्यत्वमस्पर्शेन ग्राह्यत्वम्, लक्षणेन हर्षोऽलक्षणेन विषादः, समीचीनतयाऽतिशयः असमीचीनतया अनतिशयः, इत्यादिविकारगुणाः प्रकाशकमादित्यं न स्पृशन्ति। एवमात्मना प्रकाश्यमान देहेन्द्रियादिनिष्ठ नामरूप जातिवर्णाश्रमप्रवृत्तिनिवृत्तिविधि-निषेध षड्भावविकार षडूर्मि षट्कोशान्ध्य मान्द्य पटुत्वादिसकलगुण-विकाराश्च प्रकाशकमात्मानं कालत्रयेऽपि किंचिदपि स्प्रष्टुं न शक्नुवन्तीति ज्ञानं सुकरमिति जानीहि। एवं चिज्जडयोर्वैलक्षण्यम्॥

इतः परमानन्दस्य दुःखस्य च वैलक्षण्यमुच्यते। आनन्दलक्षणं किमिति चेत्, निरुपाधिकं निरतिशयं नित्यं यत्सुखं स आनन्दः। दुःखलक्षणं किमिति चेत्, प्रतिकूलतया वेदनीयत्वम्, इतरेच्छा-नधीनेच्छाविषयभिन्नत्वे सति द्वेषविषयत्वं वा। तत्तु त्रिविधम् आध्यात्मिकमाधिभौतिकमाधिदैविकं चेति। तत्रेन्द्रियैर्देह एव वात-पित्तश्लेष्मवैपरीत्येन जायमानं व्याध्यादिदुःखमाध्यात्मिकम्। भूतैश्च भौतिकैश्च सर्पव्याघ्रादिभिर्जायमानं दुःखमाधिभौतिकम्। देवैर्जायमान-मतिवृष्टयनावृष्टिविद्युत्पातादिदुःखमाधिदैविकमिति॥

आनन्दस्य दुःखस्य च को दृष्टान्त इति चेत्, उच्यते। यथा अमृतं स्वयं सुखरूपं सत्स्वमनुभवतो जीवानपि सुखयति, कालकूटविषं स्वयं तापकं सत्स्वमनुभवतो जीवानपि पीडयति। एवंभूतयोरमृत-विषयोरन्योन्यं शब्दादिपञ्चप्रकारैर्यथा वैलक्षण्यम्, एवमानन्दलक्षणं तापत्रयात्मके दुःखे नास्ति दुःखलक्षणमप्यात्मस्वरूपे आनन्दे नास्ति। तस्माच्छब्दादिभिः पञ्चप्रकारैरनयोर्वैलक्षण्यं जानीहि। अत्र निष्कृष्टार्थः सिद्धान्तः क इति चेत्, रज्जुवत्सद्रूप आदित्यवच्चिद्रूपोऽमृतवदानन्द-रूपोऽहंशब्दार्थ आत्मा सर्पवदनृताद्घटवज्जडाद्विषवद्दुःखाद्देहेन्द्रियादि-

प्रपञ्चादिविलक्षण इति यो गुरुमुखेणात्मानं जानाति स एव असङ्गः स एव कृतकृत्यः स एव मुक्त इति सकलवेदान्तनिश्चय इति जानीहि ॥

इति अष्टमवर्णकम् ॥

---

## எட்டாவது வர்ணகம்.

இனி வரும் நான்கு வர்ணகங்களில் ஆத்மாவின் நான்கு லக்ஷணங்கள் நிருபிக்கப்படும். அவையாவன:—

1. ஆத்மா ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களைக் காட்டிலும் வேறுபட்டது.

2. அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஜ்ஞானமயம் ஆனந்த மயம் என்னும் ஐந்து கோசங்களைக் காட்டிலும் வேறுபட்டது. இவை இரண்டும் அதத்வ்யாவ்ருத்தி லக்ஷணம் அதாவது ஆத்மாவல்லாத தான (அநாத்மாவான) மூன்று சரீரங்களையும் ஐந்து கோசங்களையும் ஒவ்வொன்ருக ஆத்மா அல்ல ஆத்மா அல்லஎன்று ஒதுக்கித்தள்ளுவதன் மூலம் மிஞ்சியுள்ள ப்ரஹ்மவஸ்துவைக் காட்டுகிறது. அதுபோலவே ஆகாசம் முதல் சரீரம் வரை காணப்படும் பொருள் எல்லாவற்றையும் ஒவ்வொன்ருக ஆத்மா அல்ல என்று தள்ளி மிஞ்சிய வஸ்துவை ஆத்மாவாக காட்டுவதும் அதத்வ்யாவ்ருத்தி லக்ஷணம்.

3. விழிப்பு, ஸ்வப்னம், ஸுஷுப்தி ஆகிய மூன்று நிலைகளிலும் ஸாக்ஷியாக உள்ளது. இது தடஸ்த லக்ஷணம் கரையிலுள்ள மரம் நதியில் இல்லாவிட்டாலும் நதியை காட்டுகிறது. இது போல் உண்மையில் அவஸ்தாத்ரயங்களேயில்லாதபடியால் அவஸ்தாத்ரய ஸாக்ஷித்வமும் ப்ரஹ்மத்திற்கு இல்லை ஆனாலும் கல்பிதமான அவஸ்தாத்ரயங்களுக்கு பாஸகமாக ஸவிசேஷப்ரஹ்மம் இருப்பதால் இந்த லக்ஷணத்தைக் கொண்டு நிர்விசேஷப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்ளலாம் கல்பிதமான பிரபஞ்சம் அதன் அதிஷ்டானமான ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகிறது.

4. ஸச்சிதானந்த ஸ்வரூபமானது ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் ஸச்சிதானந்தமானதால் இது ஸ்வரூப லக்ஷணமாகிறது. பூர்ணம் நித்யம் இவையெல்லாம் ஸ்வரூபலக்ஷணம்.

இந்த வேது வர்ணகத்தில் மூவகை சரீரங்களைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டவன் என்பது நிருபிக்கப்படுகிறது. மூவகை சரீரங்களைப் பற்றித் தெரிந்துகொள்ளாவிட்டால் அவைகளைக் காட்டிலும் ஆத்மாவிலக்ஷணன் என்பதைத் தெரிந்துகொள்ள முடியாது. ஆகையால் மூவகை சரீரங்களைப்பற்றி முதலில் கூறப்படுகிறது.

ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணமென்று, சரீரம் மூவகைப் படும். எல்லோருக்கும் பிரத்யக்ஷமாய்த் தோன்றுவதும் கை, கால் முதலிய அவயவங்கள் கொண்டதும் கம்பம்போல் இருப் பதும் எதுவோ அது ஸ்தூல சரீரம். ஸூக்ஷ்ம சரீரம் என்பது 5 ஞானேந்திரியங்கள், 5 கர்மேந்திரியங்கள், 5 பிராணன்கள், மனம், புத்தி என்னும் பதினேழு அவயவங்கள் கொண்டது. அக்ஞானம் காரண சரீரம்.

(சரீரம் என்றபதத்துக்கு குறைவையடைவது என பொருள். ஸ்தூல சரீரம் ஆகாரமில்லாவிட்டால் குறைவையடையும். ஆகாரம் இருந்தாலும் வியாதியினுல் குறையும், அதுவு மில்லாமல் வயது அதிகமாவதால் குறைவையடையும். ஸூக்ஷ்ம சரீரமும், புஷ்பம் தளிர்களைப்போல் சிலசமயம் வளர்கிறது, சிலசமயம் குறைவை அடைகிறது. ராகம் த்வேஷம் முதலான அந்தக்கரண வ்ருத்திகள் அதிகரித்தால் ஸூக்ஷ்ம சரீரவளர்ச்சி என்றும் அவை குறைந்தால் ஸூக்ஷ்ம சரீரத்தின் குறைவு என்றும் தெரிந்துகொள்ளவேண்டும். காரண சரீரத்துக்கும் "நான் ஜீவன்" எனப்படும்போது வளர்ச்சியும், "நான் பிரம்மம்" என்னும்போது குறைவும் உண்டு. இந்த ஸூக்ஷ்ம காரண சரீரங்களின் வளர்ச்சியை அஞானிகளிடமும் அவைகளின் குறைவை ஞானிகளிடமும் காணலாம். ஆகையால் மூவகை சரீரத்துக்கும் கிழத்தனம் ஏற்படுவதால் சரீரம் என்று சொல்லப்படுகிறது. எரிக்கப்படுவதால் இவை களுக்கு தேஹம் என்ற பெயரும் உண்டு.)

கேள்வி:—உலகில் ஸ்தூல சரீரத்தைத்தான் அக்னியினுல் எரிக்கிறுர்கள். ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள் அக்னியினுல்

எரிக்கப்படுவதில்லையே. அப்படி இருக்க அவைகளுக்கு தேகம் (எரிக்கப்படுவது) என்ற பெயர் எப்படி வந்தது?

பதில்:— அக்னியைவிட கொடூரமான தாபத்ரயங்களால் (ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆத்யாத்மிகம்) எல்லா சரீரங் களும் தபிக்கப்படுவதால் மூவகை சரீரத்துக்கும் சரீரம் என்ற பெயர் உகந்ததே. ஸ்தூல பூதங்களிலிருந்து உண்டானபடி யால் சரீரம் ஸ்தூலமாக இருக்கிறது. ஸ்தூல சரீரம்போல் ஸ்தூலமாக இல்லாததாலும் ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து உண்டானபடியாலும் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. தான் மறைந்து கொண்டு சப்தம் முதலான விஷயங்களை அறிவிப்பதால் இதற்கு லிங்க சரீரமென்றும் பெயர். (ஸ்தூலம், ஸூக்ஷ்மம் இவ்விரண்டிற்கும் காரணமாக இருப்பதால் காரண சரீரம் என்று மற்றதை சொல்லுகிறோம்.)

கேள்வி:— முன்பு ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்கள் இரண்டும் பஞ்சபூதங்களிலிருந்து உண்டானவை என்று சொல்லப் பட்டது இப்போது இவை இரண்டும் காரண சரீரத்திலிருந்து உண்டானதாக சொல்லப்படுகிறதே. எது சரி?

பதில்:— அத்யாரோப ஸ்ருஷ்டியில் (ஆத்மாவில் கிரமமாக பிரபஞ்சத் தோற்றம் ஏற்படும்பொழுது) சரீரம் பஞ்ச பூதங் களிலிருந்து உண்டானதாக சொல்லப்பட்டது. அது சரியே. ஆனால் மொத்தமாக ஸ்ருஷ்டியைக் கூறும்பொழுது பிரபஞ்சம் முழுவதற்கும் அக்ஞானம் காரணமானதாலும் ஆத்மாவுக்கு சரீரம் ஏற்படுவதற்கும் அக்ஞானம் காரணமானதாலும் (ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்ற இரண்டு சரீரங்களுக்கும் அக்ஞானம் காரணமென்று கூறப்படுகிறது.)

சிருஷ்டியில் கிரம சிருஷ்டி யுகபத் சிருஷ்டி என்ற வகை களின் விவரங்கள் என்ன? வரிசைக்கிரமமாக, அதாவது மூலப்பிரகிருதி, மாயை அவித்யை, ஆவரணம், விக்ஷேபம், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், மண் என்று கிரமமாக உத்பத்தியைச் சொல்வது கிரமசிருஷ்டி. எல்லா பிரபஞ்சமும் அக்ஞானத்தால் ஆத்மாவை அறியாததால் உண்டானதாகச் சொல்வது யுகபத் சிருஷ்டி எனப்படும்.

கேள்வி:— ஸ்தூல சரீரம் கண்ணுக்குத் தெரிவதால் அதைப்பற்றி சந்தேகம் இல்லை. ஸூக்ஷ்ம சரீரம் நமக்குத்

தெரியாததால் இது உள்ளது என்று எப்படி தீர்மானிக்க முடியும் ?

பதில்:—பதினேழுவிதமான கரணங்களின் காரியங்களால் இந்த ஸூக்ஷ்ம சரீரம் இருக்கிறது என உணரலாம். அந்த 17வித கரணங்களின் காரியத்தை ஸ்தூல சரீரத்தால் செய்ய முடியாதா எனில், முடியாது என்பதுதான் பதில். ஏனெனில் ஸுஷுப்தி, மூர்ச்சை மரணம் ஆகிய நிலைகளில் ஸ்தூல சரீரம் இருந்தபோதிலும் மேல்கண்ட 17 கரணங்களின் காரியங்கள் ஏதும் காணப்படாததால் விழிப்பிலும் ஸ்வப்னத்திலும் அந்தக் கரணங்களின் வேலை காணப்படுவதாலும் ஸ்தூல சரீரத்தைத்தவிற 17 அவயவங்களுடன் கூடிய சூக்ஷ்ம சரீரம் உண்டு என்று முடிவு செய்கிறோம். அதுவே லிங்க சரீரம் எனப்படும்.

கேள்வி:—இந்த ஸ்தூல சரீரம் இல்லாமல் ஸூக்ஷ்ம சரீரம் காரியம் செய்வதில்லையே ஆகையால் இரண்டும் சேர்ந்துதான் பார்ப்பது முதலான காரியங்களைச்செய்கிறது என்று சொல்லக் கூடாதா ?

பதில்:—பகுத்தறிவுடன் விசாரித்துப் பார்த்தால் பார்ப்பது முதலிய காரியங்கள் எல்லாம் சூக்ஷ்ம சரீரத்தால் ஏற்படுகிறதே தவிற ஸ்தூல சரீரத்தால் அல்ல என்பது தெரியவரும். எப்படியெனில், கட்டையில் ஏற்றிய நெருப்பு சமையல் செய்ய உஷ்ணத்தைக் கொடுக்கிறது. கட்டையின்றி அக்னி வேலை செய்வதில்லை. ஆனாலும் எரிப்பது சமையல் பக்குவம் செய்வது ஆகியவை நெருப்பின் வேலையேதான் கட்டையின் வேலை இல்லை. அதுபோல ஸ்தூல சரீரத்தை உபயோகித்துக் கொண்டு ஸூக்ஷ்ம சரீரம் எல்லாக்காரியங்களையும் செய்த போதிலும் அவை சூக்ஷ்ம சரீரத்தின் வேலையே தவிற ஸ்தூல சரீரத்தின் வேலை இல்லை. ஆகையால் பார்ப்பது முதலிய காரியங்களிலிருந்து 17 அவயவங்கள் கொண்ட சூக்ஷ்மசரீரம் ஒன்று உண்டு என்று தீர்மானிக்கலாம்.

5 ஞானேந்திரியங்கள்—காது, கண், நாக்கு மூக்கு, தோல்.
5 கர்மேந்திரியங்கள்—வாக்கு, கை, கால், குதம், குறி.
5 பிராணன்கள்—பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன். அந்தக்கரணம் 2-மனஸ் புத்தி, இவைதான் லிங்க சரீரத்திலுள்ள 17 அவயவங்கள்,

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் ஆகியவை ஞானேந்திரியங்களால் கிரகிக்கப்படும் விஷயங்கள். (அறிவதற்கு உதவி செய்வதால் ஞானேந்திரியம் எனப்பெயர்.) சுகத்தையும் பிரகாசத்தையும் விளக்குகிற ஸத்வகுணத்திலிருந்து உண்டாயிருக்கிறபடியால் இந்த இந்திரியங்கள் ஞான ஸாதனமாகின்றன. பேசுவது, எடுப்பது, நடப்பது வெளிப்போக்குவதுசந்தோஷம், ஆகிய க்ரியைகளைச்செய்வதால் வாக் முதலியவற்றிற்கு கர்மேந்திரியம் எனப்பெயர். சஞ்சலமாயும் அழுக்கடைந்துமுள்ள ரஜோகுணத்திலிருந்து உண்டானபடியால் இவை க்ரியா ஸாதனங்கள். வெளிமூச்சு விடுதல் உள் மூச்சு இழுத்தல் ஆகியவைகளால் சரீரத்தைக் காப்பாற்றி பலத்தையும் கொடுப்பதால் இவைகளுக்கு பிராணன்கள் எனப்பெயர். ரஜோகுண காரியமானதால்தான் இவைகளுக்கு இந்த சக்தி உண்டாகிறது என அறியவும். விமர்சனம் (ஆலோசனை) செய்யும் அந்தக்கரண வ்ருத்திக்கு மனம் என்றும் தீர்மானம் செய்யும் விருத்திக்கு புத்தி என்றும் பெயர். இவ்வாறு ஸூக்ஷ்ம சரீரத்திற்கு 17 அவயவங்கள் உள்ளன.

உலகில் ஒரு வஸ்துவை அறியவேண்டும் என்றால் மூன்று உபாயங்கள் உண்டு. இவை 1 உத்தேசம், 2 லக்ஷணம், 3 பரீக்ஷை ஒரு வஸ்துவின் பெயரை மாத்திரம் சொல்வது உத்தேசம். வஸ்துவின் வாஸ்தவமான ரூபத்தை அறிவது லக்ஷணம். வஸ்துவின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளும் விசாரணையே பரீக்ஷை என்பது. 17 அவயவங்களின் பெயரைச் சொன்னதினாலேயே உத்தேசம் ஏற்பட்டுவிட்டது, அடுத்தது லக்ஷணம்.

அவ்யாப்தி, அதிவ்யாப்தி, அஸம்பவம் என்னும் மூவித தோஷங்களற்று அதற்குமட்டும் ஏற்பட்டுள்ள தர்மம் அதற்கு லக்ஷணமாகும்.

(1) அவ்யாப்தி : லக்ஷணத்தால் குறிப்பிடப்படவேண்டிய லக்ஷ்யத்தில் சிலவற்றில் அந்த லக்ஷணம் இல்லாமலிருந்தால் இது அவ்யாப்தியாகும்.

உதாஹரணம் :—கருப்பு நிறமுள்ளது பசு என்று சொன்னால் இந்த லக்ஷணம் பசுக்களிலேயே சிகப்பு நிறமுள்ள பசுவில் இல்லை. ஆகவே அவ்யாப்தி என்ற தோஷம் வருவதால்

சில பசுக்களில் இல்லாமல் சில பசுக்களில் மட்டும் உள்ள இது எல்லாப்பசுக்களுக்கும் பொதுவான லக்ஷணமாகாது.

(2) அதிவ்யாப்தி :— லக்ஷ்யமல்லாதவற்றிலும் லக்ஷணம் இருக்குமானுல் இது அதிவ்யாப்தியாகும்.

உதாஹரணம்:— நான்கு கால்களுள்ளது பசு என்று சொன்னுல் இந்த லக்ஷணம் பசுவல்லாத நாய் முதலானவற்றிலும் இருக்கிறபடியால் அதிவ்யாப்தி தோஷமுள்ளது. ஆகையால் இதுவும் பசுவுக்கு லக்ஷணமாகாது.

(3) அஸம்பவம் :— லக்ஷ்யம் முழுவதிலுமே இல்லாமலிருப்பது.

உதாஹரணம் :— ஒரு குளம்பு உள்ளது பசு என்று சொன்னுல் ஒரு பசுவுக்குக்கூட ஒரு குளம்பு இல்லாதபடியால் இது அஸம்பவ தோஷமுள்ளது. ஆகையால் இம்மூன்றும் தோஷமுள்ளதால் பசுவுக்கு லக்ஷணமல்ல. ஸாஸ்னு (திமிழ்) முதலியவைகளுடன் கூடியது பசு என்று சொன்னுல் இதுதான் பசுவிற்கு லக்ஷணமாகும். இது எல்லாப் பசுக்களிலும் இருப்பதாலும் பசுவைத்தவிற வேறு ஒன்றிலும் இல்லாததாலும் மூவித தோஷங்களற்ற அஸாதாரண தர்மமானதாலும் இது தான் பசுவின் சரியான லக்ஷணமாகும்.

இதுபோல் ஞானேந்திரியங்களுக்கு லக்ஷணம் சொல்ல முடியுமா என்ருல் சொல்லலாம். க்ரமமாகச் சொல்கிருேம். ச்ரோத்ரேந்திரியம் என்ருல் என்ன ? திக்கு என்ற அதிஷ்டான தேவதையால் ஏவப்பட்டு முறுக்குவடிவமுள்ள காதுடன் சேர்ந்த ஆகாசத்தில் இருந்துகொண்டு 18 பாஷைகள் வேதம் சாஸ்திரம் இவைகளை இது இப்படிப்பட்டது என்று உணரும் இந்திரியம் சுரோத்திரேந்திரியமாகும். இதை பரீக்ஷிப்பது எப்படியெனில் சரீரத்தில் காது என்ற ஓட்டை இருக்கும் இடத்தில் உள்ள ஆகாசமே சப்தத்தை கேட்கிறது என்று சொல்வோமானுல் ஸுஷுப்தி, மூர்ச்சையடைந்திருக்கும் நிலை முதலிய சந்தர்ப்பங்களிலும் இந்த காதுடன் சேர்ந்த ஆகாசம் இருப்பதால் அப்பொழுதும் சப்தத்தைக் கேட்கவேணுமே. அப்பொழுது சப்தத்தை அறியமுடிவதில்லையே. ஆதலால் சுரோத்ரேந்திரியமென்பது அந்த ஆகாசத்தைக்காட்டிலும் வேறு என்று தீர்மானிக்கலாம்.

த்வகிந்த்ரியம் என்றால் எது? வாயு என்னும் அதிஷ்டான தேவதையால் தூண்டப்பட்டு சரீரத்திலுள்ள தோல் முழுவதும் பரவியிருந்துகொண்டு சீதம், உஷ்ணம், மிருது, கடினம், கரடுமுறடு என்ற அநேகவிதமான ஸ்பர்சத்தை அறிகிறது த்வகிந்திரியம் ஸுஷுப்தி முதலிய சமயங்களில் தோல் முன்போலவே இருந்தபோதிலும் ஸ்பர்ச உணர்ச்சி தோன்றுவதில்லை. ஆகையால் தோல்மட்டும் த்வகிந்திரியம் ஆகாது. தோலைக்காட்டிலும் வேறுதான் த்வ்கிந்திரியம்.

சக்ஷுரிந்திரியம் எது எனில், சூரியரூபமான அதிஷ்டான தேவதையால் ஏவப்பட்டு கண்ணின் கருவிழியில் இருந்து கொண்டு நீலம், சிவப்பு, கருப்பு, வெளுப்பு, மஞ்சள், பெரிது, சிறிது; குட்டை, நீளம் என்று சொல்லப்படும் பலவிதமான ரூபங்களை அறிகிறது சக்ஷுரிந்திரியம். கருப்பு விழியே ரூபங்களை அறிகிறது என்று சொல்லமுடியாது. ஏனெனில் தூக்கத்தில் இந்தக்கண் இருந்தும் ரூபம் தெரிவதில்லை. ஆகையால் வெளிக்கண் சக்ஷுரிந்திரியம் ஆகமாட்டாது.

ரஸனேந்திரியம் எது எனில், வருணன் என்ற அதிஷ்டான தேவதையால் தூண்டப்பட்டு நாக்கில் இருந்துகொண்டு, தித்திப்பு, கசப்பு, உப்பு முதலிய ஆறு ரஸங்களை எது உணர்கிறதோ அது ரஸனேந்திரியமே தவிற, வெறும் நாக்கு ரஸனேந்திரியமாகாது. ஏனெனில் ஸுஷுப்தியில் நாக்கு மட்டும் இருந்தும் ரஸ உணர்ச்சி ஏற்படுவதில்லை.

முகரும் இந்திரியம் எது எனில் அசுவினீ தேவதையால் தூண்டப்பட்டு மூக்கின் நுனியில் இருந்துகொண்டு, நல்ல வாசனை, துர்வாஸனை இவைகளை எது அறிகிறதோ அதுதான் க்ராணேந்திரியம் ஸுஷுப்தியில் மூக்கு இருந்தும் வாசனை தெரியாததால் மூக்கு கிராணேந்திரியமாகாது. மூக்கைக் காட்டிலும், வேறானது அது இவ்விதம் ஞானேந்திரியங்களின் லக்ஷணங்கள் கூறப்பட்டன.

இனி கர்மேந்திரியங்களின் லக்ஷணங்களை கவனிப்போம். அக்னி என்னும் அதிஷ்டான தேவதையால் தூண்டப்பட்டு மோவாய்க்கட்டையின் அடி மேல் கீழ் உதடுகள், பல், கழுத்து ஹிருதயம், தொப்பிள் முதலிய சரீரத்தின் அவயவங்களை அடைந்து முன்சொன்ன பலவித சப்தங்களை எது சொல்

கிறதோ அது வாக் இந்திரியம். ஸுஷுப்தியில் இந்த அவயவங்கள் இருந்தபோதிலும் பேசுவதில்லை. ஆகையால் இந்த அவயவங்கள் மட்டும் வாக் இந்திரியமாகாது. இவற்றைக்காட்டிலும் வேறானதுதான் வாகிந்திரியம்.

இந்திர தேவதையால் தூண்டப்பட்டு உள்ளங்கையை ஆசிரயித்து ஆதானம் (எடுப்பது) முதலிய காரியங்களை எது செய்கிறதோ அது, பாணி (கை) இந்திரியம். சாதாரணமான கையாகிய அவயவம் மட்டும் பாணி என்ற இந்திரியமாகாது. ஏனெனில் தூக்கம் முதலிய காலங்களில் இந்தக் கை இருந்தும் எடுப்பது முதலான வேலை செய்வதில்லை.

உபேந்திர தேவதையினால் தூண்டப்பட்டு உள்ளங்காலில் இருந்துகொண்டு நடத்தல் எனும் வேலையை எது செய்கிறதோ அது பாத இந்திரியமாகும். சாதாரணமான கால் என்ற அவயவம் பாத இந்திரியமாகாது. ஏனெனில் தூங்கும் காலத்தில் கால் இருந்தும் நடப்பதில்லை

மிருத்யு தேவதையினால் தூண்டப்பட்டு குதம் என்னும் அவயவத்தை ஆசிரயித்துக்கொண்டு எது சரீரத்தை விட்டு மலத்தை வெளித்தள்ளுகிறதோ அதற்கு பாயு இந்திரியம் எனப்பெயர். கேவலம் குதம் என்னும் அவயவம் பாயு இந்திரியமாகாது. ஏனெனில் ஸுஷுப்தியில் இந்த அவயவம் இருந்தும் அதன் வேலையை அது செய்வதில்லை. ஆகையால் இந்த அவயவத்தைக் காட்டிலும் வேறானது பாயு இந்திரியம்.

பிரஜாபதி என்ற தேவதையினால் தூண்டப்பட்டு யோனி (பிரஜா உத்பத்தி ஸ்தானம்), லிங்கம் (ஆண்குறி) என்ற அவயவங்களை அடைந்து சுக்லம், சோணிதம், மூத்திரம் முதலியவைகளை எது வெளியில் தள்ளுகிறதோ அதற்கு உபஸ்த இந்திரியம் எனப்பெயர். கேவலம் சரீரத்தில் உள்ள அந்த அவயவம் உபஸ்தேந்த்ரியமாகாது. ஏனெனில், ஸுஷுப்தியில் இந்த அவயவம் இருந்தும் அதன் வேலை நடைபெறுவதில்லை.

இனி ஐந்து பிராணன்களின் லக்ஷணங்கள் என்னவென்று கவனிப்போம். விசிஷ்டம் என்று பெயருள்ள அதிஷ்டான தேவதையின் பிரேரணையினால் ஹ்ருதயத்தில் இருந்துகொண்டு வெளிமூச்சு விடுகிறது பிராணவாயு, விசுவசிருஷ்டன் என்ற

தேவதையினுல் தூண்டப்பட்டு குதம் (குண்டி) என்ற அவயவத்தில் இருந்துகொண்டு உள்ளே மூச்சை இழுப்பது அபானவாயு எனப்படும். விசுவயோனி என்ற தேவதையால் தூண்டப்பட்டு சரீரத்துக்கு உள்ளும் வெளியும் இருந்து கொண்டு இந்திரியங்களுக்கு பலத்தை எது கொடுக்கின்றதோ அது வியான வாயு என்பது. அஜன் என்ற தேவதையின் தூண்டுதலால் கழுத்து பிரதேசத்தில் இருந்துகொண்டு எது ஸுஷுப்தியில் இந்திரியங்களுக்கு அந்தந்த அவயவங்களில் லயத்தை ஏற்படுத்தியும் விழிப்பு வரும் காலத்தில் வேலை செய்யும்படி அந்தந்த அவயவங்களில் அந்தந்த இந்திரியங் களை ஸ்தாபித்தும் மனிதன் இறந்தவுடன் அந்த இந்திரியங் களை எடுத்துக்கொண்டு வேறு லோகங்களுக்கு (ஜீவனுடன்) செல்லுகிறதோ அதற்கு உதானவாயு எனப்பெயர். ஜயன் என்ற தேவதையின் தூண்டுதலால் எது தொப்புள் பிரதேசத் தில் இருந்துகொண்டு நாம் உட்கொள்ளும் பக்ஷ்யம் (கடிக்கப் படுவது) போஜ்யம் (விழுங்கப்படுவது) சோஷ்யம் (உறிஞ்சப் படுவது) லேஹ்யம் (நாக்கால் நக்கப்படுவது) ஆகிய நான்கு வகையான உணவுகளையும் ஜாடராக்னியில் ஜீரணிக்கச் செய்து எது சரீரத்திற்கு புஷ்டியை உண்டுபண்ணுகிறதோ அது ஸமான வாயு எனப்படும். இப்படி பிராணன்கள் ஐந்து வகைப்படும்.

இதுதவிற நாகன், கூர்மன். க்ருகரன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்று ஐந்து வாயுக்கள் சொல்லப்படுகின்றன. அவைகள் முன்சொல்லப்பட்ட ஐந்து பிராணன்களைச் சேர்ந்தவைதான். நாகன் என்பது வாந்தி எடுக்கும்படி செய்கிறது கூர்மன் என்பது கண்களை மூடுவது திறப்பது மேல் கீழ் உதடுகளைச் சேர்ப்பது பிரிப்பது இந்தக் காரியங் களைச் செய்கிறது. க்ருகரன் என்பது தும்மலையும், தேவ தத்தன் என்பது கொட்டாவியையும் உண்டுபண்ணுகிறது. தனஞ்ஜயன் என்பது உடலைப் பருக்கும்படி செய்கிறது.

இதன்மேல் அந்தக்கரணத்தின் நான்கு பிரிவுகளான மனம், புத்தி, சித்தம் அஹங்காரம் என்பவைகளை கவனிப் போம். சந்திர தேவதையால் தூண்டப்பட்டு கழுத்தை அடைந்து வஸ்துவை ஆராய்ந்து இப்படியா அப்படியா என்று யோஜிப்பது மனஸ். நான்முக பிரும்மனுல் தூண்டப்பட்டு வாயை அடைந்து எது தீர்மானம் செய்கிறதோ அது புத்தி

எனப்படும், அஹங்காரம் என்பது ருத்திரனுல் தூண்டப்பட்டு ஹிருதயத்தில் இருந்துகொண்டு பற்றுதலை உண்டுபண்ணு கிறது. சித்தம் என்பது க்ஷேத்ரஜ்ஞனை விஷ்ணுவினுல் தூண்டப்பட்டு நாபி (தொப்புள்) பிரதேசத்தை அடைந்து நினைவுறுத்துகிறது.

ஒரு சுருதி லிங்க சரீரத்தில் 16 அவயவங்கள்தான் உள என்கிறது. இந்த இடத்தில் அந்தக்கரணத்தை ஒன்ருகக் கணக்கிட்டிருக்கிறது. வேறு ஒரு சுருதி 17 அவயவங்கள் கொண்டது லிங்கசரீரம் என்கிறது இதன்படி மனது புத்தி என்று இரண்டும் கணக்கிடப்படுகிறது. மற்ருெரு சுருதி லிங்க சரீரம் 19 அவயவங்களுடையதாகச் சொல்லுகிறது. அப்போது மனஸ், புத்தி, சித்தம் அகங்காரம் என்ற அந்தக் கரணத்தின் நான்கு பிரிவுகளையும் கணக்கிடவேண்டும்.

இனிக் காரண சரீரம் எது எனப் பார்ப்போம். அஞானம் தான் காரண சரீரம். ஸ்தூலம், ஸூக்ஷ்மம் இவ்விரண்டு சரீரங்களுக்கும் இது காரணமாகிறது. அதனுல் இப்பெயர் இது ஜீவனும் ஈசுவரனும் முதலில் அடையும் சரீரமானதால் பின்னிட்டு வரும் இரண்டு சரீரங்களுக்கும் காரணமாக ஆகிறது. இதற்கு என்ன பிரமாணமெனில் சுருதி, யுக்தி, அனுபவம் மூன்றும் ப்ரமாணமாகும். அக்ஞானம் காரணம் என்று சுருதி கூறுகிறது. கார்யத்தைக்கொண்டு காரணத்தை ஊகிக்கவேண்டும். இது யுக்தி. நான் அறிவில்லாதவன் என்று எல்லோருக்கும் அக்ஞானுனுபவம் இருக்கிறது.

ஆத்மா எது என்று முன்பு விசாரித்தபோது ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களுக்கு அப்பாற்பட்டது எனறு சொல்லி அந்த மூன்று சரீரங்களின் லக்ஷணங்கள் சொல்லப் பட்டதல்லவா. அதுபோல் ஆத்மாவை லக்ஷணங்களினுல் எப்படி அறிவது என்ருல், சொல்லுவோம். எல்லா இடத் திலும் பரிபூர்ணமாக இருப்பது பிரம்மம், அதே ப்ரஹ்மம் ப்ரத்யகாத்மஸ்வரூபமாக உளது என்று எல்லா உபநிஷத்துக் களும் சொல்லுகின்றன. ஆகையால் ஆத்மா ஸச்சிதானந்த ஸ்வரூபமானது என்று அறியவும். ஸத் என்ருல் என்ன? சித் என்ருல் என்ன? ஆனந்தம் என்ருல் என்ன? மூன்று காலங்களிலும் (சென்ற, நிகழ், வரும்) பாதிக்கப்படாமை ஸத் என்பது. ஸ்வயமே ப்ரகாசமயமானது சித் என்பது.

தன்னுள் ஏற்படும் அனுபவமே ஆனந்தம். இப்படி ஆத்மா ஸச்சிதானந்த ஸ்வரூபமுடையது. ஆத்மா அல்லாதது பொய், ஜடம், துக்கம் இந்த ஸ்வரூபமாக உள்ளது.

ஆத்மா, அனாத்மா என்பவைகளுள் உள்ள வித்தியாஸங்களை எப்படி அறிவது? புருஷனுடைய லக்ஷணம் ஸ்திரீயிடத்தில் இல்லை. ஸ்திரீயின் லக்ஷணம் புருஷனிடத்தில் இல்லை. ஆகையால் ஸ்திரீயும் புருஷனும் வெவ்வேறு, அதுபோல் ஸத் (இருப்பது) என்றதின் லக்ஷணம் பொய்யில் (ஒரு ஸமயத்தில் இல்லாதது) கிடையாது. பொய்யின் லக்ஷணம் ஸத்தில் இல்லை. எப்படி வெளிச்சத்தின் லக்ஷணம் இருட்டில் இல்லையோ, இருட்டினுடைய லக்ஷணம் வெளிச்சத்தில் இல்லையோ அதுபோல் அறிவின் லக்ஷணம் ஜடத்தில் இல்லை. ஜடத்தின் லக்ஷணம் அறிவில் கிடையாது. எப்படி சந்திரிகையின் லக்ஷணம் வெய்யிலில் இல்லையோ, வெய்யிலின் லக்ஷணம் சந்திரிகையில் கிடையாதோ அவ்விதமே ஆனந்தத்தின் லக்ஷணம் துக்கத்தில் இல்லை துக்கத்தின் லக்ஷணம் ஆனந்தத்தில் கிடையாது. ஆகையால் ஸச்சிதானந்தரூபமான ஆத்மாவும் அந்ருத ஜட துக்க ரூபமான அநாத்மாவும் வெவ்வேறுதான்.

இவைகளுள் இருக்கும் வித்தியாஸத்தை இன்னும் விரிவாக அறிவோம். இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் இம்மூன்றிலும் பாதிக்கப்படாமல் ஒரே ரூபமாய் இருப்பது ஸத். முக்காலத்திலும் பொய்யாக இருந்தாலும் மெய்போல் தோன்றி விசாரிக்கப்பட்டபோது பாதிக்கப்படுவது அஸத் எனப்படும். இதற்கு திருஷ்டாந்தம்: கொஞ்சம் இருட்டாக இருக்கும் இடத்தில் உள்ள கயிறு, அதன்மேல் ஏற்படும் தோற்றமாகிய ஸர்ப்பம், மாலை, தடி, நீர்க்கோடு முதலியவைகளால் பாதிக்கப்படாமல் பிராந்தி ஏற்படுவதற்கு முன்னும் பிராந்தி இருக்கும்போதும், பிராந்தி நீங்கிய பின்னும் ஒரே ரூபமாக இருக்கிறது. இந்தக் கயிற்றில் ஆரோபிதமான (தோற்றமான) ஸர்ப்பம் முதலியவைகள் முக்காலத்திலும் இல்லாதவைகளாக பொய்யாக இருந்தும் இருப்பவைபோல் தோன்றுகிறது. இதைப்பார்க்கும் மனிதன் உண்மையை விசாரணை செய்தால் அது பாதிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட கயிற்றின் லக்ஷணம் ஸர்ப்பத்தில் இல்லை. ஸர்ப்பத்தின் லக்ஷணம் கயிற்றில் இல்லை. ஆகவே சொல், அர்த்தம்,

லக்ஷணம், தோற்றம், வியவகாரம் என்று ஐந்து வகைகளினுலும் கயிறும் அதில் தோன்றும் பாம்பும் ஒன்றுக்கொன்று விலக்ஷணமானது என்று தெரிகிறது.

அப்படியே ஸத்தின் லக்ஷணம் அஸத்தாகிய தேகம் முதலிய பிரபஞ்சத்தில் கிடையாது. அஸத்தின் லக்ஷணம் ஸத்தான ஆத்மாவில் இல்லே. ஆகையால் இவைகளுக்குள்ளும் மேலே சொன்ன ஐந்து வகைகளால் வைலக்ஷண்யம் இருக்கின்றது. இப்படி விசாரணை செய்து ஸத்துக்கும் அஸத்துக்கும் உள்ள வித்தியாஸத்தை உணரவேண்டும்.

சித் என்பதற்கும் ஜடம் என்பதற்கும் உள்ள பேதத்தைப் பார்ப்போம். ஸூரியன் முதலியவைகளின் ஒளியை எதிர்பாராமல் தன் சொந்த பிரகாசத்தாலேயே பிரகாசித்துக்கொண்டு தன்னிடம் ஆரோபிதமான ஜடவஸ்துவையும் பிரகாசப்படுத்துகிறதாகவும் அதனுலே ஒளியுள்ள ஸூர்யன் முதலியவைகளேயும் ஒளியற்றதான மண் கல் முதலிய வஸ்துக்களேயும் எது பிரகாசப்படுத்துகிறதோ அதுதான் சித் வஸ்து.

ஜடத்தின் லக்ஷணம் என்னவெனில், தானும் பிரகாசிக்காமல் மற்றதையும் பிரகாசப்படுத்த முடியாத தன்மையையுடையது ஜடம். இரண்டுக்கும் திருஷ்டாந்தம் :—சூரியன் இதர வஸ்துவின் பிரகாசத்தை எதிர்பாராமல் தானே பிரகாசித்துக்கொண்டு தன் ஒளியுடன் சேர்ந்துள்ள குடம், வஸ்திரம் முதலிய பதார்த்தங்களேயும் பிரகாசப்படுத்துகிறது. இதுபோல்தான் சித் பிரகாசமும். எப்படி குடம் வஸ்திரம் முதலியவை தான் பிரகாசிக்காமல் மற்றதையும் பிரகாசப்படுத்த சக்தியற்றதாக இருக்கிறதோ அதுபோல்தான் ஜட வஸ்துவும். எப்படி சூரியனுக்கும் குடம் முதலியவைகளுக்கும் சப்தம் முதலிய மேலேசொன்ன ஐந்து வகையிலும் பேதம் உண்டோ அப்படியே "சித்"துக்கும் ஜடத்துக்கும் பேதம் உண்டு.

இப்படி அறிவதனுல் என்ன பிரயோஜனம் எனில் உலகில் எந்த வஸ்து பிரகாசப்படுத்தப்படுகிறதோ அதில் உள்ள மாறுதல்கள் பிரகாசிக்கும் பதார்த்தத்தை முக்காலங்களிலும் பாதிப்பதில்லே என்று உணர்கிரேம். அது எப்படியெனில், சூரியனுல் பிரகாசப்படுத்தப்பட்ட குடத்தில் ஓட்டை ஏற்பட்டால் நஷ்டமோ, ஓட்டை இல்லாமலிருந்தால் லாபமோ

ஸ்பர்சத்தால் விலக்கப்படும் தன்மையோ ஸ்பர்சம் இல்லாததால் ஸ்வீகரிக்கும் தன்மையோ நல்ல லக்ஷணத்தால் சந்தோஷமோ, அவலக்ஷணத்தால் துக்கமோ நன்ருக இருத்தலால் சிறப்போ, நன்ருக இல்லாமையால் சிறப்பின்மையோ இது முதலான மாறுதலான குணங்கள் பிரகாசத்தைக் கொடுக்கும் சூரியனை அடைவதில்லை. இதுபோல் ஆத்மாவினுல் பிரகாசத்தை அடையும் தேகம், இந்திரியம் முதலியவைகளிலுள்ள பெயர், ரூபம், ஜாதி, வருணம், ஆசிரமம், ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி, கட்டளை, தடை [1] ஆறுவித மாறுதல், [2] ஆறுவித அலைகள், ஆறுகோசங்கள் குருட்டுத்தன்மை, மந்தத்தன்மை, சாமர்த்தியம் முதலிய எல்லா குணபேதங்களும் பிரகாசப்படுத்தும் ஆத்மாவை முக்காலத்திலும் கொஞ்சமேனும் பாதிக்காது என்ற ஞானம் ஸுலபமாக ஏற்படும்.

இனி ஆனந்தத்துக்கும் துக்கத்துக்கும் உள்ள பேதம் சொல்லப்படும் ஆனந்தத்தின் லக்ஷணம் என்ன? வேறு ஒன்றினுல் ஏற்படாததும், மிக மிகச்சிறந்ததும் (இதைவிட மேலானது இல்லாததும்) சாசுவதமுமான சுகம் எதுவோ அதுவே ஆனந்தம் துக்கம் என்பது என்னவெனில் ப்ரதிகூலமாக அறியத்தக்கது துக்கம். மற்ருென்றில் விருப்பம் ஏற்படுவதன் மூலமாக இல்லாமல் தானுகவே விருப்பம் ஏற்படும் பொருளைக்காட்டிலும் வேருனது எதுவோ, எதில் வெறுப்பு ஏற்படுகிறதோ அது துக்கம் என்றும் சொல்லலாம்.

இது மூவகைப்படும்:— ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் இந்திரியங்களினுல் தேகத்தில் வாதம், பித்தம், சிலேஷ்மம் இவற்றின் விபரீதத்தினுல் உண்டாகும் வியாதி முதலிய துக்கம் ஆத்யாத்மிகம். பிருதிவி முதலான பூதங்களாலும் ஸர்ப்பம், முதலிய பிராணிகளினுலும் ஏற்படுவது ஆதிபௌதிகம். தேவதைகளால் ஏற்படும் மழைஇன்மை, அதிகமழை, இடி முதலியவற்ருல் ஏற்படும் துக்கம் ஆதிதைவிகம் எனப்படும்.

ஆனந்தத்துக்கும் துக்கத்துக்கும் என்ன திருஷ்டாந்தம்? அம்ருதம் தான் ஸ்வயமாக ஸுக ரூபமானது. அதை

---

1. உண்டாவது, இருப்பது, வளர்ச்சி, மாறுதல், குறைவு, அழிவு இவை 6 பாவ விகாரங்கள்.

2. ஷடூர்மிகள்—சோகம், மோஹம், பசி, தாகம், கிழத்தனம், சாவு

சாப்பிடுபவர்களுக்கும் ஸுகத்தைக் கொடுக்கிறது. காலகூட விஷம் தான் கொடியது. அதை சாப்பிடுபவர்களையும் தபிக்கச் செய்கிறது. இப்படிப்பட்ட அமிருதத்துக்கும் விஷத்துக்கும் மேலே சொன்ன சப்தம் முதலிய ஐந்து காரணங்களால் எப்படி பேதமுள்ளதோ அப்படியே ஆனந்தத்தின் லக்ஷணம் தாபத்ரயங்களை உண்டுபண்ணும் துக்கத்தில் இல்லை துக்கத்தின் லக்ஷணமும் ஆத்மஸ்வரூபமான ஆனந்தத்தில் இல்லை. ஆகையால் ஐந்து வகையிலும் ஆனந்தத்திற்கும் துக்கத்திற்கும் பேதம் உண்டு என்று அறிய வேணும் இதனால் முடிவானது என்னவெனில், "நான்" என்பதில் உள்ள ஆத்மா என்பது கயிறைப்போல் "ஸத்" ரூபமானதும் சூரியனைப்போல் "சித்" ரூபமானதும், அம்ருதம்போல் "ஆனந்த" ரூபமுமானது இது பாம்பைப் போல் பொய்யானதும், குடத்தைப்போல் ஜடமானதும், விஷத்தைப்போல் துக்கத்தை உடையதுமான தேகம் இந்திரியம் முதலான பிரபஞ்சத்திலிருந்து வேறுபட்டது என்று எவன் குருமுகமாக ஆத்மாவை அறிந்து கொள்கிறானோ அவன் பற்றற்றவன், அவனே செய்ய வேண்டியதை செய்தவன் அவனே முக்தன் என்பது வேதாந்த சாஸ்திரத்தின் முடிவு என்பதை அறியவும்.

எட்டாவது வர்ணகம் முற்றும்.

---

## ॥ नवमवर्णकम् ॥

आत्मा शरीरत्रयविलक्षणः, अवस्थात्रयसाक्षी, पञ्चकोशव्यतिरिक्तः, सच्चिदानन्दलक्षण इत्यात्मन उक्तेषु चतुर्विधलक्षणेषु शरीरत्रयविलक्षणत्वमेवमष्टमवर्णके उक्तम्। इतः परमवस्थात्रयसाक्षित्वमस्मिन्नवमे वर्णके उच्यते। मनः सत्वरजस्तमोगुणात्मकम्। तथापि सत्त्वगुणप्रधानमेव मनः। सात्त्विकेनैव मनसा आत्मा ज्ञातव्यः, न च राजसेन, नापि तामसेन। तत्र सत्त्वगुणः सूक्ष्मः। रजोगुणश्चञ्चलः। तमोगुणः स्थूलः। तस्मात्सूक्ष्मवस्तुयोग्ये रन्ध्र

## 11-வது வர்ணகம்

ஆத்மாவின் நான்காவது லக்ஷணமான ஸச்சிதானந்த ரூபம் இந்த அத்தியாயத்தில் விளக்கப்படும்.

கேள்வி:— ஆத்மாவின் 'ஸத்' ரூபம் எது? 'சித்' ரூபம் எது? 'ஆனந்தரூபம்' எது?

பதில்:— முக்காலத்திலும் எதனுலும் எவ்விதமும் பாதிக்கப் படாமலும் மாறுபாடடையாமலும் ஒரேவிதமாக இருப்பது தான் ஸத் என்பது இந்த லக்ஷணம் ஆத்மாவிடத்தில் இருக்கிறது இதற்கு என்ன பிரமாணம் எனில், வேதாந்த சாஸ்திரத்தில் இந்த பிரபஞ்சத்தின் சிருஷ்டிக்கு முன் "ஸத்" ஒன்றுதான் இருந்தது. அதிலிருந்து ஆகாசம் முதலியவை உண்டாயின என்று சொல்லப்படுவதுதான் பிரமாணம் மேலும் உலகில் உள்ள எல்லா ஜனங்களின் அனுபவமும் பிரமாண மாகும். பணக்காரன், தரித்திரன், கர்மாவில் ஈடுபட்டவன், பக்தன், மோக்ஷத்தில் ஆசையுள்ளவன் என்று உலகமக்களை ஐந்து பிரிவாகப்பிரிக்கலாம். இவர்களின் அனுபவம் பின் வருமாறு:—

"நான் பூர்வஜன்மத்தில் ஸத்பாத்திரத்துக்கு (சிறந்த யோக்யதை உள்ளவர்களுக்கு) ஏதோ கொஞ்சம் கொடுத் திருப்பேன் அதனுல்தான் இந்த ஜன்மாவில் ஐசுவரியத்தை அனுபவிக்கிறேன் இந்த ஜன்மாவிலும் ஏதாவது மற்றவர் களுக்குக்கொடுப்பேனுகில் அடுத்த ஜன்மாவிலும் ஐசுவரிய வானுக இருப்பேன்" என்பது பணக்காரரின் அனுபவம்.

"நான் பூர்வ ஜன்மாவில் ஸத்பாத்திரத்தில் ஏதும் தானம் செய்யவில்லை. அதனுல் இந்த ஜன்மாவில் தரித்திரனுக இருக்கிறேன். இந்த ஜன்மாவில் நான் ஏதாவது தானம் கொடுக்காவிடில் அடுத்த ஜன்மாவிலும் தரித்திரனுக இருப்பேன்' என்பது தரித்திரனுடைய அனுபவம்.

"பூர்வஜன்மத்தில் நான் நல்ல கர்மாக்களைச் செய்தேன். அந்த வாசனையினுல் இந்த ஜன்மாவிலும் நல்ல கர்மாக்களை செய்கிறேன். இதனுல் வரும் ஜன்மாவில் சுவர்க்கத்தில் தேவத்தன்மையை அடைவேன்" என்பது கர்மாவை செய்பவனின் அனுபவம்.

"பூர்வஜன்மாவில் பகவானை உபாசித்தேன். அந்த தொடர்பினால் இந்த ஜன்மாவிலும் பகவத் பக்தனாக இருக்கிறேன். இதனால் அடுத்த ஜன்மாவில் வைகுண்டம் முதலிய லோகங்களில் ஸாலோக்யம் முதலான முக்தியை அடைவேன் என்பது பக்தனுடைய அனுபவம்.

"பல ஜன்மாக்களில் ஈசுவரார்ப்பணமாக கர்மாவைச் செய்தேன். அதனால் இந்த ஜன்மாவில் சாதன சதுஷ்டயத்துடன் கூடி ஸத்குருவை அடைந்து சிரவணம் முதலியவைகளால் ஆத்மஞானம் கிடைத்தது. இனிமேல் எனக்கு ஜன்மா கிடையாது. நான் அடையவேண்டியதை அடைந்து விட்டேன் என்பது முமுக்ஷுவின் அனுபவம்.

இப்படி எல்லா ஜனங்களுக்கும் மூன்று காலங்களிலும் (अहमस्मि) நான் இருக்கிறேன் என்றே அனுபவம் காணப்படுவதால் இந்த ஆத்மாவில் ஆரோபிதமான தேகத்துக்குத்தான் நாசம் உண்டே தவிர ஆத்மாவுக்கு ஒருக்காலும் எவ்விதத்திலும் நாசம் கிடையாது என்று அறியவேணும். ஆகையால் ஆத்மா முக்காலங்களிலும் பாதிக்கப்படாமல் மாறுபாடடையாமல் ஏகரூபமாக இருப்பதால் ஆத்மாவுக்கு 'ஸத்' (இருத்தல்) என்ற லக்ஷணம் உண்டு.

அனுபவத்தால் சொல்லப்பட்ட இந்த விஷயம் யுக்திக்கு பொருந்தி இருக்குமா எனில் விசாரித்துப் பார்த்தால் இது யுக்திக்கும் சரியாகவே இருக்கிறது. எப்படியெனில் நாம் இந்த உலகத்தில் இருக்கிறோமா இல்லையா என்று விசாரித்தால் இருக்கிறோம் என்றுதான் சொல்லவேண்டும். ஒவ்வொருவருக்கும் நான் இருக்கிறேன் என்றுதான் அனுபவம் ஏற்படுகிறது. நமக்கு சரீரம் இருக்கிறதா இல்லையா என்று பார்த்தால் இருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில் நாம் சரீரத்தை நேரில் காண்கிறோம்.

இந்த சரீரம் எதனால் ஏற்பட்டது? கர்மாவினால் அந்த கர்மா நம்முடையதா அல்லது பிறருடையதா? நம்முடையதுதான் என்று சொல்லவேண்டும். மற்றவனுடைய கர்மாவினால் அவனுக்கல்லவா ஸ்வர்க்கம் முதலிய பலன் ஏற்படும் நமக்கு அது வராதே பிறர் செய்த கர்மாவினால் வேறு ஒருவன் பலனை அடைவான் என்றால், யாகம் செய்தவனுக்கு அதன்

பலனான ஸ்வர்க்கம் கிடைக்காமல் போய்விடும். யாகம் செய்யாதவனுக்கு ஸ்வர்க்கம் கிடைத்துவிடும். இது நியாய மில்லை. மேலும் முன் ஒரு காலத்தில் ஸ்ரீசுகர் முதலிய பிரும்மரிஷிகள் செய்த ஞானஸமாதியின் பலனாக நம் எல்லோருக்கும் விதேக கைவல்யம் கிடைக்கவேணும் ஆகை யால் நாம் செய்த கர்மாவினால்தான் நமக்கு இந்த சரீரம் கிடைத்திருக்கிறது என்று தீர்மானிக்கவேணும்.

இந்தசரீரத்தை உண்டு பண்ணிய கர்மா இந்த ஜன்மாவில் செய்யப்பட்டதா பூர்வஜன்மாவில் செய்யப்பட்டதா என்று யோசித்தால், பூர்வஜன்மாவில் செய்யப்பட்டது என்றே சொல்லவேணும். இந்த சரீரம் உண்டானபின் செய்யும் கர்மா இந்த சரீரத்துக்கு காரணமாக இருக்கமுடியாது. காரணம் என்பது காரியம் ஏற்படுவதற்கு முன்னாலேயே இருக்கவேண்டும். இந்த சரீரம் ஏற்பட்டபின் நாம் செய்யும் கர்மாவானது இந்த சரீரம் ஏற்படுவதற்குமுன் இல்லாத படியால் இது இந்த சரீரத்திற்குக்காரணமாக முடியாது. முற்பிறவிகளில் செய்த கர்மாதான் இந்த சரீரத்திற்குக் காரணம். முன்பு கர்மா செய்யும்போது நாம் இருந்தோமா இல்லையா என்று விசாரித்தால், இருந்தோம் என்றே சொல்ல வேணும். இல்லாமலிருந்தால் எப்படி கர்மாவை செய்ய முடியும்? அப்போது நமக்கு சரீரம் இருந்ததா இல்லையா எனில், இருந்தது சரீரமில்லாவிட்டால் கர்மாவை செய்ய முடியாது அது அந்த ஜன்மாவில் செய்த கர்மாவின் பலனா அல்லது அதற்கு முன் பிறவியில் செய்த கர்மாவின் பலனா எனில், அது அதற்கு முன் ஜன்மாக்களில் செய்த கர்மாவின் பலன்தான் என்போம். இப்படி அடிக்கடி விசாரிக்கையில் சரீரத்துக்கும் கர்மாவுக்கும் இருத்தல் பிரவாகம் போல் அநாதி தண்ணீர் வெவ்வேறுயிருந்தாலும் ப்ரவாஹத்தில் தொடர்ந்து வந்து கொண்டிருப்பது போல் கர்மாவால் சரீரம் சரீரத்தால் கர்மா என்ற ரீதியில் அநாதிகாலமாக கர்மாவும் சரீரமும் தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது இதுதான் ப்ரவாஹ அநாதி என்பது. இவ்விரண்டுடன் கூடிய ஆத்மாவுக்கு உத்பத்தியே இல்லாததால் ஆகாசம்போல் இதன் ஸ்வரூபமே அநாதிதான். இது முக்யமான அநாதி இவ்வாறு சென்ற காலத்திலும் நிகழ்காலத்திலும் ஆத்மாவின் இருப்பை யுக்தியாலும் தீர்மானிக்கலாம்.

இனி வரும் காலத்தில் ஆத்மா இருக்கிறதா இல்லையா என்று யுக்தியினால் பார்ப்போம். நாம் முன் ஜன்மாவில் சிரவணம், மனனம், இவைகளைச் செய்யாமல் கர்மாவை மட்டும் முக்கியமாகக்கருதிச்செய்ததால் இந்த ஜன்மாவும் சரீரமும் ஏற்பட்டிருக்கிறது. இப்போது நாம் செய்யும் கர்மாவும் இனி பின்னால் ஜன்மாக்களைக்கொடுக்கும். அந்த ஜன்மாவில் செய்யும் கர்மா அதற்குப்பின்னும் ஜன்மாவைத் தரும். இப்படிப்பார்த்தால் வருங்காலத்திலும் கர்மாவுக்கும் சரீரத்துக்கும் பிரவாஹம்போல் இருத்தல் என்பது தீர்மான மாகிறது. இதற்கு முடிவே இல்லை தத்துவஞானம் ஏற்பட்டு கர்மா நாசமடைந்தால் சரீரம் ஏற்படுவதில்லை இந்த இரண்டுக்கும் சம்பந்தப்பட்ட ஆத்மாபிரும்மஞானம் ஏற்படும் வரையில் சரீரத்தின் உண்டாகுதல், நசித்தல் முதலியவை களை அனுபவித்துக்கொண்டும் சரீரம் இருக்கும் காலத்தில் சுக துக்கங்களை அனுபவித்துக்கொண்டும் கீழே ஸ்தாவரம் வரை யிலும், மேலே பிரஹ்மலோகம் வரையிலும் அலைந்து கொண்டும் இருக்கிறான் ஆத்மா நாசத்தை அடைவதில்லை தத்துவஞானம் ஏற்பட்டால், அவித்யை, ஆசை, கர்மா முதலியவை எல்லாம் நசித்து, துக்கத்துக்குக் காரணமானது ஏதும் இல்லாமல், ஸ்வஸ்வரூப ஆனந்த அனுபவத்துடன் விதேக கைவல்யத்தை அடைந்து நித்யானந்த ஸ்வரூபமாகி விடுகிறான். இப்படி வருங்காலத் திலும் ஆத்மாவுக்கு "ஸத்வம் (இருத்தல்) உண்டு, நாசம் என்பது கிடையாது ஆகவே எல்லாக்காலங்களிலும் ஆத்மா இருக்கிறான் என்பது யுக்தியினால் சித்திக்கிறது.

இப்படி முக்காலத்திலும் பாதிக்கப்படாமல் இருப்பதாலும் ஸ்வஸ்வரூபமாய் ஒன்றாக இருப்பதாலும் (ஸத்) எப்போதும் இருத்தல் என்பது தீர்மானமாயிற்று. இப்படி சுருதி (வேதம்) யுக்தி அனுபவம் இவைகளைக்கொண்டு பார்க்கும்போது அநேக பிரளயங்களில் அநேக பிரபஞ்சங்கள் நாசமடைந்தும் தான் நாசமடையாமல் ஆத்மா இருக்கிறது என்று அறிந்தோம். ஆகவே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்பது பிரபஞ்சத்துக்கே தவிர ஆத்மாவுக்கு அல்ல. இவ்விதம் முக்காலத்திலும் ஒரே ரூபமுடையதாலும் எதனாலும் பாதிக்கப் படாததாலும் ஆத்மா "ஸத்ரூபம்" (எப்போதும் இருத்தல் உடையது) என்று அறியவேண்டும்.

ஆத்மா ‘சித்’ (அறிவுமயம்) ரூபமானது என்று எப்படி தீர்மானிக்கிறது? சூரியன் முதலிய இதர ப்ரகாச வஸ்துக்களின் உதவி இல்லாமல் தானே பிரகாசித்துக்கொண்டு அதன் பேரில் சுமத்தப்பட்ட ஸகல ஜடபதார்த்தங்களையும் விளங்கும்படி செய்வதுதான் சித்ரூபமென்பது. இந்த சித்ரூப லக்ஷணம் ஆத்மாவில் இருக்கிறது. எப்படியெனில் கும்மிருட்டிலும் கூட வேறுஒன்றின் உதவி இல்லாமல் ஆத்மா தானே பிரகாசிக்கிறது. ஆத்மாவின் பேரில் சுமத்தப்பட்ட சரீரத்தின் தர்மங்களான பால்யம் யௌவனம் கிழட்டுத்தனம் ஆகிய நிலைகளையும் அந்நிலைகளில் ஏற்படும் காரியங்களையும் இதர உதவியின்றி நன்ருக அறிகிறது. ஆகவே ஆத்மா “சித்ரூபம்” என்பது தீர்மானமாகத் தெரிகிறது.

கேள்வி:—நமக்கு ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்த நிலை) இல்லாததால் எல்லா பதார்த்தங்களையும் விளங்கச்செய்யும் சக்தி நமக்கு எப்படி வரும்?

பதில்:—பிரபஞ்சம் இருவகைப்படும். வெளி பிரபஞ்சம் உள் பிரபஞ்சம் என்று. இவ்விரண்டு பிரபஞ்சங்களும் நம்மால்தான் விளங்கும்படி செய்யப்படுகின்றன. பிரபஞ்சத்தால் நாம் பிரகாசப்படுத்தப்படவில்லை. எப்படியெனில்:— பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்றும் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்றும், பஞ்சீக்ருத பூதங்கள் என்றும், பிரம்மாண்டம் என்றும் பதிநான்கு புவனங்கள் என்றும், நான்குவித ஸ்தூல சரீரங்கள் என்றும், பலவிதமான பெயர், உருவம், குணம், தர்மம், மாறுதல் சக்தி இவைகளுக்கு ஆச்ரயமாக உள்ளது தான் வெளிப்பிரபஞ்சம் என்பது இப்படிப்பட்ட வெளி பிரபஞ்சத்தை பல உட்பிரிவுகளால் பலவாருகப் பிரித்து பிரமாணங்களால் நாம் தான் அறிகிறோம். நம்மை இந்த பிரபஞ்சம் அறிவதில்லை எனறு உள் நோக்கி விசாரித்துப் பார்க்கும்போது வெளி உலகத்தை பிரகாசப்படுத்தும் தன்மை நமக்கு இருப்பது தீர்மானமாகத் தெரிகிறது.

இனி உள் உலகத்தை பிரகாசப்படுத்தும் தன்மை நமக்கு எப்படி ஏற்படுகிறது என்று பார்ப்போம். உள் உலகம் என்பது அன்னமயாதிகோசம் முதல் ஜீவன் முக்திநிலை வரை பலவாருகப் பிரிக்கப்படுகிறது. அதாவது:—

"இது அன்னமயம், இது பிராணமயம், இது மனேமயம் இது விஜ்ஞானமயம், இது ஆனந்தமயம், இப்படி இவை ஐந்து கோசங்கள் என்றும், இது ஸ்தூலசரீரம் இது சூக்ஷ்ம சரீரம், இது காரணசரீரம், இப்படி இவை மூன்று வகை சரீரங்கள் என்றும், இவை சரீரத்தின் ஆறுவித மாறுபாடுகள் இவை ஆறுவித கோசங்கள் இவை ஆறுவித ஊர்மிகள் (ஸமுத்திரத்தில் அலைகள் போல் ஓயாமல் திரும்பித் திரும்பி வருவதால் கிழத்தனம்-மரணம், பசி-தாகம், ராகம்-த்வேஷம் இந்தஆறுக்கும் ஊர்மி-அலை என்றுபெயர்.) இது குருட்டுத்தனம் இது மந்தத்தனம், இது சுறுசுறுப்புத்தனம், இது விருப்பம், இது வெறுப்பு, இது மூன்றுவித கரணங்கள் (மனம் வாக்கு காயம்) இது அந்தக்கரணம் இது விழிப்பு, இது ஸ்வப்னம், இது சுஷுப்தி இப்படி மூவகை அவஸ்தைகள், இவை ஐந்து ஞானேந்திரியங்கள், இவை ஐந்து கர்மேந்திரியங்கள் இவை ஐந்து பிராணன்கள், இவை ஐந்து உபபிராணன்கள். இது மனஸ், இது புத்தி, இது சித்தம், இது அஹங்காரம், இது ஸங்கல்பம், இது தீர்மானம். இது கவனம், இது பற்றுதல், இவன் வித்வான், இவன் தைஜஸன், இவன் பிராஜ்ஞன் என்று இவர்கள் அவஸ்தையுடன் கூடியவர்கள் இது பிராதிபாஸிகம், இது வ்யாவஹாரிகம். இது பாரமார்த்திகம், இது ஸாத்விகம், இது ராஜஸம், இது தாமஸம், இது சுகம். இது துக்கம், இது ஞானம், இது அஞானம், இது பிரியம், இது வெறுப்பு, இது உபேக்ஷை, இது ஸாதன சதுஷ்டயம், இவை மைத்ரீ, கருணை முதிதை உபேக்ஷை என்ற நான்கு. இது அஷ்டாங்கயோகம், இது சிரவணம், இது மனனம், இது நிதித்யாஸனம், இது ஸமாதி என்றும், இது பிரமாணம் இது அறியப்படுவது, இவன் அறிகிறவன், இது தாபத்ரயம் இது ஆதி (மனதில் உள்ளது), இது வியாதி, (சரீரத்திலுள்ளது) இது ஆரோக்யம், இது பக்தி, இது வைராக்யம், இது மந்தம், இது தீவ்ரம். இது அதிக தீவிரமானது, இது ஸகுணோபாஸனை. இது மனேநாசம், இது வாஸனக்ஷயம், இது விதேஹ கைவல்யம், இது ஜீவன் முக்தி என்ற வெவ்வேறு பெயர், ரூபம், குணம். மாறுதல்கள் சக்திகள் இவைகளுக்கு ஆச்ரயமாக இருப்பது உள் பிரபஞ்சம். இவைகள் ஒவ்வொன்றும் தனித்தனியே பிரிக்கப்பட்டு நம்மால் அறியப்படுகிறது. இந்த உள் பிரபஞ்சம் நம்மை அறிவதில்லை. நாம் அதை அறிகிருேம். ஆகவே ஆத்மா எல்லாவற்றையும் அறிவதாலும் வேறென்றிருலும் ஆத்மா

அறியப்படாததாலும் ஆத்மா 'சித்' ரூபமானது என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

கேள்வி :— ஆத்மா 'சித்ரூபி' யாராலும் அறியப்படுவதில்லை என்று சொல்லப்பட்டதே, மனதுக்கு எல்லாம் தெரிகிறதே. ஆத்மாவும் அதே மனதால் அறியப்படட்டுமே ?

பதில் :— மனம் என்பது உண்டாகி அழியக்கூடியது. ஸங்கல்ப ரூபமானது அளவுக்குட்பட்டது, குடம்போல் பூத காரியம், காமம் முதலிய விகாரங்களால் கலங்கியது ஞாபகம் மறதி இவைகளுடன் கூடியது. இப்பேற்பட்ட மனம் ஜடமென்று தெரிந்துகொள்ள வேண்டும். அந்த மனதுக்கு பிரகாசத்தன்மை கிடையாது. இந்த மனதும்கூட சைதன்யத்தால்தான் அறியப்படுகிறது. அப்படிப்பட்ட ஜடமான மனது தானே பிரகாசிக்கும் 'சித்'தை எப்படி அறியமுடியும் ? ஒரு விதத்திலும் அறியவே முடியாது.

கேள்வி :— அப்படியானல் "मनसैवानुद्रष्टव्यम्" மனதால் தான் (ஆத்மாவை) அறியவேண்டும் என்ற வேதவாக்யத்தின் தாத்பரியம் என்ன ?

பதில் :— அக்னியில் தங்கத்தை வைத்து காய்ச்சினுல் காய்ச்சப்பட்ட தங்கத்துக்கு பிரகாசம் உண்டாகிறது. இதனுல் தங்கத்தினிடத்தில் ஏற்கனவே இல்லாத பிரகாசத்தை புதிதாக அக்னி உண்டு பண்ணவில்லை. ஆனுல் அக்னியினுல் தங்கம் காய்ச்சப்பட, தங்கத்தின் மேல் உள்ள அழுக்குப் போன உடனே முன்பு அதில் இருந்த சுவர்ணத்தின் பிரகாசம் விளங்குகிறது. புதிதாக பிரகாசம் உண்டு பண்ணப்படவில்லையே. புதிதாக அக்னியினுல் தங்கத்தில் பிரகாசம் உண்டாக்கப்படுகிறது என்று சொல்வோமானுல் சூளையில் வைக்கப்பட்டிருக்கும் மண் பானையிலும் இந்த பிரகாசம் உண்டு பண்ணப்பட வேண்டுமே. அப்படி இல்லையே. இது எப்படியோ அப்படியே மேலே சொன்ன வேத வாக்யத்திலும் அர்த்தம் கொள்ள வேண்டும். எப்படியெனில், மனது ஆத்மாவின் ரூபமாக மாறி ஆத்மாவின் பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டு ஆத்மாவை மறைக்கிறதும் பொய்யானதும் அனுதியுமான அஞ்ஞானத்தைப் போக்குகிறது. இந்த அஞானம் நீங்கியதும் ஆத்மா தானுகவே விளங்குகிறது என்று தான் அந்த வாக்யத்துக்கு அர்த்தம் கொள்ள வேண்டும்.

ஆகையினுல் மனதும் ஆத்மாவால்தான் அறியப்படுகிறது. மனதினுல் ஆத்மா அறியப்படவில்லை. இதுவும் எப்படி யெனில் உதாகரணத்தில் பார்ப்போம். தீபத்கால் இருட்டைப் போக்கடிக்கும் இடத்தில் விளக்கு, எண்ணை, திரி இந்த மூன்று மட்டும் இருந்தால் இருட்டு நீங்காது. இதற்குக் காரணமாக இருக்கும் எங்கும் நிறைந்துள்ள அக்னியும் இவைகள் இல்லாமல் தானுகவே இதைச் செய்ய முடியாது. இருந்தபோதிலும் அந்த திரியுடன் சேர்ந்த அக்னி தீபம் என்ற பெயர் கொண்டு இருட்டைப் போக்குகிறது. இதேமாதிரி, விளக்கு ரூபமான சரீரத்தில், கர்மா என்ற எண்ணையுடன் கூடிய மனது என்ற திரியில் அக்னி ரூபமான ஆத்மா சேர்ந்து அதனுடன் ஒன்றுகக்கலந்துகொண்டு ஜீவன் என்ற பெயரையும் பெற்று அந்தந்த விஷயங்களை மறைக்கும் அஞானரூபமான இருளை நீக்கி, தீபமானது குடம் முதலிய வஸ்துக்களை விளக்குவதுபோல உள்ளேயும் வெளியிலும் உள்ள பதார்த்தங்களை பிரகாசப்படுத்துகிறது. தீபமானது எப்படிதான் ஒளிமயமாக இருந்துகொண்டு தனது பிரகாசத்தால் தன்னுடன் சேர்ந்துள்ள வஸ்துக்களையும் பிரகாசப் படுத்துகிறதோ அப்படியே ஆத்மாவும் அந்தக்கரணத்தில் இருந்துகொண்டு தனது சைதன்யத்தால் தானே பிரகாசித்துக் கொண்டு தன்னுடன் சேர்ந்துள்ள உள்ளேயும் வெளியிலும் உள்ள எல்லா வஸ்துக்களையும் பிரகாசப்படுத்துகிறது. ஆகவே ஆத்மா 'சித்ரூபம்' (ஞானரூபம்) என்று தீர்மானமாகிறது.

இனி ஆத்மா ஆனந்தரூபமானது என்பது பற்றி அறிவோம். சாசுவதமானதும், வேறு ஒன்றின் மூலம் ஏற்படாததும், நிரதிசயமானதும் (தன்னைவிட வேறு உயர்ந்தது இல்லாததும்) ஆன ஸுகம் எது உண்டோ அதற்கு ஆனந்தம் எனப்பெயர். அதுதான் ஆத்மாவின் ஸ்வரூபம். அதனுல்தான் மாலை, சந்தனம், ஸ்திரீ இவைகளை அனுபவிப்பதனுல் ஏற்படும் சுகம் அநித்தியம் ஒரு வஸ்துவின் உதவியால் உண்டானது, சிறப்புள்ளது என்பதனுல் அது ஆத்மஸ்வரூபம் ஆகமாட்டாது என்று ஏற்படுகிறது. முன் சொன்ன ஆனந்தமே ஆத்மஸ்வரூபம். அது எப்படி யெனில், சுஷுப்தியில் அடையும் ஆனந்தத்தில் ஆத்மஸ்வரூப ஆனந்தத்தின் அடையாளம் இருப்பதால் அந்த ஆனந்தமே தான் என்று அறியவும்.

கேள்வி:—ஸுஷுப்தியில் துக்கமின்மையே காணப்படுகிறது ஆனந்த அனுபவம் காணப்படுவதில்லையே. ஆகவே ஸுஷுப்தியில் ஆனந்தத்தின அடையாளம் உண்டு என்று எப்படி சொல்வது. ?

பதில்:—உலகில் தூங்கி எழுந்தவன் "நான் இவ்வளவு காலம் சுகமாய்த்தூங்கினேன்" என்று தூக்கத்தில் தான் அனுபவித்த சுகஸ்வரூபத்தை சொல்லுகிறான். ஆகையால் ஸுஷுப்தியில் எல்லோருக்கும் ஸ்வானுபவத்தில் ஆனந்தம் இருக்கிறது என்று தெரிகிறது

கேள்வி:—அப்படியானால் மேலே சொல்லப்பட்ட நித்யத்வம், வேறு ஒன்றின் ஆசிரயமின்மை, உயர்வற்ற தன்மை என்ற மூன்று லக்ஷணங்களும் சுஷுப்தியில் உள்ள ஆனந்தத்தில் இருக்கிறதா?

பதில்:—முதலில் வேறு ஒன்றின் ஆசிரயமின்மையைப்பற்றி கவனிப்போம். சந்தனம் புஷ்பம், ஸ்திரீ முதலான விஷயங்கள் உபாதிகள் அவைகளால் அடையும் சுகம் ஔபாதிகம் இந்த உபாதிகளில் ஒன்றுகூட ஸுஷுப்தியில் இல்லை. ஆனால் எல்லோராலும் சுகம் அனுபவிக்கப்படுகிறது. ஆகையால் ஸுஷுப்தியில் வேறு காரணமற்ற சுகம் இருக்கிறது என்று அறியலாம். அடுத்தது இதன் உயர்வற்ற தன்மை எப்படி என்று கவனிப்போம். தைத்திரீய உபநிஷத்தில் மனுஷ்யானந்தத்திலிருந்து ஹிரண்யகர்பரின் ஆனந்தம் வரை 11 வகையான ஆனந்தங்கள் சொல்லப்பட்டுள்ளன. அவை ஒன்றுக்கொன்று நூறுமடங்கு அதிகமானவை. ஆகையால் அவை ஸாதிசயம் உயர்வு, தாழ்வு உள்ளவை அந்த ஆனந்தங்கள் எல்லாவற்றிற்கும் மேல்பட்ட பிரும்மானந்தம் எல்லையற்றதானதினாலும் அதைவிட மேல்பட்ட வேறு ஆனந்தம் இல்லாததாலும் இதுவே நிரதிசயமானது இந்த பிரம்மானந்தமும் ஸுஷுப்தி ஆனந்தமும் ஒன்றே. அதனால் ஸுஷுப்தி ஆனந்தமும் நிரதிசயம் அதனால்தான் எல்லோரும் இதை விரும்புகிறார்கள். "ஸுஷுப்தி ஸுகமே சுகம். விஷய சுகம் சுகமல்ல" என்று எண்ணிக்கொண்டு எல்லோரும் ஸ்திரீ, புத்ரன் முதலியவர்களால் ஏற்படும் ஸுகத்தை விட்டுவிட்டு மிருதுவான படுக்கையை சம்பாதித்துக்கொண்டு பிரயத்தினத்துடன் தூக்கத்தை வரவழைத்துக்கொண்டு ஸுஷுப்தி சுகத்தை

அனுபவிக்கிருர்கள். இந்த சுஷுப்தி சுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும்போது மிகவும் ரூபலாவண்யமுடைய ஸ்திரீ தன்னை எழுப்பினுலும் கோபிப்பார்கள். அப்போது வேறு எதையும் அவர்கள் விரும்புவதில்லை. தூங்கி எழுந்த பிறகும் அதே ஆனந்தத்தை நினைத்துக்கொண்டு சந்தோஷப்படுவதுடன் மறுபடி அதையே அடையவேண்டி மறுபடியும் தூங்க பிரயத்னப்படுகிருர்கள். ஆகையால் சுஷுப்தியின் ஆனந்தம் உயர்வற்றது என்று நன்கு விளங்குகிறது.

இதற்கு சாசுவதத்வம் எப்படிச் சொல்வது எனில் விழிப்பிலும், ஸ்வப்னத்திலும் அநேக ரூபமாக பற்பல விஷயங்களால் தனித்தனியாக சுகம் அனுபவிக்கப்படுகிறது. ஒரு அளவுக்கு உட்பட்டதாகையால் இவை அநித்தியமானது சுஷுப்தி சுகம் ஒரே ரூபமானது அளவுக்கு உட்படாதது. வேறு ஒரு வஸ்துவின்மூலம் இது உண்டாவதில்லை. ஆகவே இது நித்யம்.

நித்யமானுல் இந்த சுகம் விழிப்பிலும் ஸ்வப்னத்திலும் கூட அனுபவிக்கப்படவேண்டுமே அப்பொழுது இது ஒருவராலும் அனுபவிக்கப்படுகிறதில்லையே எனில் அப்போதும் இந்த சுகம் இருக்கிறது. ஆனுல் மனதின் விருத்துகளால் மறைக்கப்பட்டு இநத சுகம் அனுபவிக்கப் படுவதில்லை.

கேள்வி:— எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கும் ஆனந்தத்தை காரியரூபமான அந்தக்கரண விருத்திகள் எப்படி மறைக்கமுடியும் ?

பதில் :— சூரியனை மேகம் போலும், அக்னியைப் புகை போலும், கயிறைப் பாம்பு போலும், பிரும்மானந்தத்தை அந்தக்கரண விருத்திகள் (காரியருபமாக இருந்தும்) மறைக்கின்றன. சாம்பலால் மறைக்கப்பட்ட அக்னியும் பனியால் மூடப்பட்ட சூரியனும் இல்லையென்றே சிறுவர்களும் மூடர்களும் எண்ணுகின்றனர். ஆனுல் விவேகிகள் அப்படி எண்ணுவதில்லை. இதுபோலவே வெளிப் பார்வை உள்ளவர்களுக்கு ப்ரஹ்மானந்த ரூபமான ஸுஷுப்தி ஆனந்தம் மறைக்கப்பட்டு தெரியாமல் போனுலும் உள் நோக்கு உள்ளவர்களுக்கு அப்படியில்லை. அவர்களுக்கு ப்ரஹ்மானந்தம ஸ்வஸ்வரூபமாக விளங்குவதால் முக்காலங்

களிலும் ஒரேவிதமாக அவர்களால் அனுபவிக்கப்படுகிறது. ஆகையால் ப்ரஹ்மானந்தத்தைவிட வேருக இல்லாத ஸுஷுப்தி ஆனந்தம் நித்யம் என்பது தீர்மானமாகிறது.

இப்படி வேறு ஆதாரமில்லாததும் வேறு உயர்வற்றதும் சாசுவதமுமான பிரும்மானந்தத்தின் ஸத் சித் ஆனந்தம் என்ற மூன்று லக்ஷணங்களும் நமக்கு அனுபவத்துக்கு வருவதால் நாம் ஆனந்தருபர் என்பது தீர்மானமாகிறது. இவ்விதம் சச்சிதானந்த லக்ஷணம் நம்மிடம் இருப்பதாக சுருதி யுக்தி அனுபவங்களால் முடிவானதால் நாம் ஸச்சிதானந்த ப்ரஹ்மம் என்பது தீர்மானமாகிறது. "நாம் சச்சிதானந்த ஸ்வரூபம்" என்று எப்படி அனுபவம் வருகிறது என்று கேட்டால் ஆறுவித லிங்கங்களால் வேதாந்த சாஸ்திரத்தின் தாத்பரியத்தைத் தீர்மானிப்பது என்ற சிரவணத்தை குருமுகமாகச் செய்து அதை அனுசரித்து மனனம், மனனத்தை அனுசரித்து நிதித்யாஸனம் முதலியது செய்து பின்னிட்டு வெகுகாலம் நிதித்யாஸனமே செய்து கொண்டிருப்பவனுக்கு "நான் சச்சிதானந்தமயமான பிரும்மம்" என்ற ஞானம் உண்டாகிறது. இது பரோக்ஷ ஞானம் எனப்படும்.

இந்த பரோக்ஷ ஞானத்தையும் விட்டு விட்டு "நான் காரியத்தைச் செய்பவன்" "இது என் காரியம்" "நான் இன்ன ஜாதிக்காரன்" "நான் இந்த வருணத்தவன்" "நான் இந்த ஆசிரமத்தில் இருப்பவன்" என்ற பற்றுதலை முற்றிலும் விட்டு விட்டு "நான் பிரும்மம்" "ப்ரும்மமே நான்" என்ற அனுபவத்தையும் அது விஷயமான முயற்சியையும் அதில் செய்கிறேம் என்ற எண்ணத்தையும் விட்டு விட்டு சும்மா ஸுஷுப்தியில் இருப்பது போல், ஜலத்தில் கரைந்த உப்பு மாதிரி, பிரும்மத்தில் மனம் லயித்தவனுக மாறுதல் இன்றி இருக்கும் மகாத்மாவுக்கு நிர்விசேஷமான எந்த ஞானம் ஸ்வயமாகவே தோன்றுகிறதோ அதுவே அபரோக்ஷானுபவம். இப்படிப்பட்ட அனுபவமானது எப்பொழுது ஏற்படுகிறதோ அப்போது அந்த புருஷன் ஸ்வானுபவரூபியாகவே ஆகிறுன். ஆனந்தரூபியாகிறுன். அந்த ஆனந்தத்தின் பெருமையை அவன்தான் அறியமுடியுமே தவிர மற்றவர்கள் அறிய முடியாது. ப்ரஹ்மானந்தத்தை விவரிக்கின்ற வேதாந்தமும் உள்ளபடி அறியாது. அதை எடுத்துச்சொல்லவும் முடியாது.

அந்த ஆனந்தத்தை அனுபவிக்கும் மனிதனும் அதை அனுபவிக்கத்தான் முடியும். அவன் சுஷுப்தி சுகத்தைப் போல் அதை மற்றவர்களுக்கு எடுத்து உரைக்கவும் முடியாது. மனதினால் நினைத்துப்பார்க்கவும் முடியாது. ஆகையால் நம்முடைய ஸ்வானுபவத்தை நாம்தான் அறிய முடியும். எந்த ஈசுவரன் தன் கருணையினால் குருவாகத் தோன்றி நமக்கு உபதேசம் செய்கிருரோ அவராலும் இது இப்படி என்று சொல்லமுடியாது. இப்படி ஸ்வானுபவத்தை அறிந்தும் அதை தெரியாததுபோலவே ஆனந்தரூபமாக இருக்கவேண்டும்.

பதினொன்ருவது வர்ணகம் முற்றும்

---

## ॥ द्वादशवर्णकम् ॥

अस्मिन्द्वादशवर्णके आत्मनोऽखण्डार्थं रहस्यमपि कृपया गुरुरुपदिशति ॥

शिष्यः—हे स्वामिन्, भवद्भिरेकादशसु वर्णकेषूपदिष्टैरर्थैर्देहादिपञ्चकोशेषु 'अहम्' 'मम' इत्यात्मात्मीयत्वबुद्धिर्गलिता । 'बुद्धिप्रकाशकं सच्चिदानन्दरूपं यद्ब्रह्म तदेवाहम्' इत्यात्मज्ञानमागतम् । सर्वे संशया नष्टाः । तथापि पुनरेकः संशयो वर्तते । स क इति चेत्, शृणु । अयमात्मा सद्रूप इति चिद्रूप इत्यानन्दरूप इति चोक्तं किल । एवं त्रिविधरूपप्रतिपादकानि त्रीण्यपि पदानि त्रिविधभेदभिन्नार्थं प्रतिपादयन्ति तथा भिन्नार्थकानीव मम प्रतिभान्ति । तस्मादेतस्य सच्चिदानन्दपदत्रयस्य भिन्नार्थवत्प्रतीयमानस्य अखण्डार्थत्वं कथं सिध्येत्? इति शिष्यवचः श्रुत्वा गुरुरुपदिशति—हे पुत्र, अखण्डार्थः क इति चेत्; देशपरिच्छेदः कालपरिच्छेदो वस्तुपरिच्छेद इति त्रिविधपरिच्छेदरहिततया अपरिच्छिन्नोऽर्थोऽखण्ड इति जानीहि । तर्ह्यखण्डस्यैतानि त्रीणि लक्षणानि किमर्थानीति चेत्,

शृणु । आकाशस्यापि व्यापकत्वेन देशपरिच्छेदरहितत्वात्तत्राति-व्याप्तिवारणाय कालपरिच्छेद उपात्तः । आकाशस्योत्पत्तिविनाश-वत्त्वेन कालपरिच्छेदोऽस्तीति न तत्रातिव्याप्तिः । देशकालपरिच्छेद-मात्रोपादाने कालेऽतिव्याप्तिः । कालस्य देशपरिच्छेदो नास्ति, कालपरिच्छेदोऽपि नास्ति, स्वस्य स्वेनैव परिच्छेत्तुमशक्यत्वात् । अत उक्तं वस्तुपरिच्छेदरहित इति । कालस्य स्वभिन्नवस्तुसद्भावाद्वस्तु-परिच्छेदोऽस्ति । आत्मन एवैतत्त्रिविधपरिच्छेदराहित्यमस्ति । अत-स्त्रीणि लक्षणान्युक्तानीति विज्ञेयम् ॥

ननु भवद्भिरुक्तमखण्डार्थलक्षणमात्मनि प्रदर्शयितव्यम्, आत्मन एवाखण्डार्थत्वात् । तच्चात्मनि न दृश्यते । तत्कथमिति चेत्, उच्यते– सर्वेषाम् 'अस्मिन्देशे तिष्ठामि, तस्मिन्देशे न तिष्ठामि' इत्यनुभवेन देशपरिच्छेदराहित्यं नास्ति । 'अहमस्मि-न्वर्षे जातः, इतः परं दशमे वर्षे मरिष्यामि' इत्यनुभवेनात्मनः कालपरिच्छेदराहित्यं नास्ति । 'नाहं ब्राह्मणः' 'नाहं क्षत्रियः' इत्याद्यनुभवादात्मनो वस्तुपरिच्छेदराहित्यमपि नास्ति । भवद्भि-स्त्रिविधपरिच्छेदशून्य आत्मेति कथमुक्तमिति चेत्, शृणु । मया पूर्वं तत्रैकादशवर्णके आत्मानात्मलक्षणकथनावसरे 'आत्मा परिपूर्णः' 'अनात्मा परिच्छिन्नः' 'दृश्यं सर्वमध्यस्तम्' इत्युपदिष्टं खलु ! तथाऽपीदानीमात्मलक्षणं प्रति शङ्कां करोषि । तस्मात्त्वं शिष्यो वा प्रतिवादी वेति संदेहः । शिष्यश्चेत्कृपया पुनरप्यनुग्रहं कुर्मः । प्रतिवादी चेत्क्षमया तूष्णीं भविष्यामः, अथ वा कोपेन शप्स्यामः । भवतां कोपो वादिनि फलिष्यति वेति चेत् । शिष्ये उपदेशार्थं क्रियमाणोऽनुग्रहः फलिष्यति चेद्वादिनि क्रियमाणो निग्रहोऽपि फलिष्यति लोके निग्रहानुग्रहसामर्थ्यवत ईश्वरस्य ब्रह्मज्ञानिनश्च भेदो नास्तीति ज्ञातव्यम् ॥

तर्हि हे स्वामिन्, सद्गुरोः कृपापात्रभूतः शिष्य एवाहम्, ममैकः संदेहो जातः, तस्मादेवं पृष्टवान्, न तु कुतर्केणेति चेत्, शृणु। इदं देशकालवस्तुपरिच्छेदत्रयं स्वभावतो देहस्यैव। न तु परिपूर्णप्रत्यगात्मनः परिच्छेदत्रयमस्ति। प्रत्यगात्मस्वरूपपरिपूर्णब्रह्मणो देशपरिच्छेदो नास्तीत्येतत्कथं ज्ञातव्यमिति चेत्, शृणु। 'घटः सन्' 'पटः सन्' 'कुड्यं सत्' 'कुसूलं सत्' इति, 'पृथिवी सती' 'आपः सत्यः' 'तेजः सत्' 'वायुः सन्' 'आकाशः सन्' इति चैवं भूतभौतिकप्रपञ्चे सद्रूपेणानुभूयमानत्वादात्मनो विभुत्वम्। एवं सर्वव्यापकस्यात्मनो देशपरिच्छेदो नास्ति। आत्मनः पूर्वोक्तप्रकारकयुक्त्या अनादित्वेन नित्यत्वाद्भविष्यत्कालपरिच्छेदो नास्ति। एवं भूतकालभविष्यत्कालसंबद्धस्यात्मन एकत्वाद्वर्तमानकालपरिच्छेदो नास्ति। वस्तुपरिच्छेदराहित्यमात्मनः कथमिति चेत्, शृणु। आत्मनः सर्वात्मकत्वाद्वस्तुपरिच्छेदो नास्ति। वस्तूनि कानीति चेत्, सजातीयभेदभिन्नं, विजातीयभेदभिन्नं, स्वगतभेदभिन्नमिति वस्तूनि। तानि वा कथमिति चेत्। वृक्षस्य वृक्षान्तरात्सजातीयभेदः। वृक्षस्य शिलादेर्विजातीयभेदः। वृक्षस्य पत्रपुष्पफलादेः स्वगतभेदः। अस्य त्रिविधस्यापि भेदस्यात्मन्यभावादात्मा भेदशून्यः। अत एवात्मनो वस्तुपरिच्छेदो नास्तीति जानीहि ॥

नन्वात्मनः सजातीयविजातीयस्वगतभेदा न सन्तीति वक्तुं न शक्यते। कथमिति चेत्। एकस्यैव चैतन्यं ब्रह्मचैतन्यमिति ईश्वरचैतन्यमिति कूटस्थचैतन्यमिति जीवचैतन्यमिति च वर्तते। अतः सजातीयभेदोऽस्ति। आत्मस्वरूपं ब्रह्म इति अनात्मस्वरूपं प्रपञ्च इति द्वयोर्वर्तमानत्वाद्विजातीयभेदोऽस्ति। ब्रह्मणि सत् चित् आनन्द इति त्रयस्य वर्तमानत्वात् स्वगतभेदोऽस्ति। एवं भेदत्रये स्थिते आत्मनो भेदत्रयं नास्तीति कथमिति चेत्, शृणु। आकाश एक एवोपाधि-

भेदेन महाकाश इति मेघाकाश इति घटाकाश इति घटजलप्रतिबिम्बिताकाश इति च भेदेन यथा प्रतीयते, तथा मायोपाधिनैकमेव चैतन्यं ब्रह्मेतीश्वर इति च, अविद्योपाधिना कूटस्थ इति जीव इति च केवलं प्रतीयते। विचार्यमाणे सजातीयभेदो नास्ति। विजातीयभेदः कथं नास्तीति चेत्, शृणु। रज्जुं विना यथा सर्पो नास्ति, आकाशं विना यथा तलमालिन्यं नास्ति, एवमात्मानं विना अनात्मापि नास्ति। अधिष्ठानं विना आरोपितं सर्वं मिथ्यैव। मिथ्या नाम वन्ध्यापुत्रशशविषाणादिवत्कालत्रयेऽप्यविद्यमानम्। अनात्मनः परमार्थतोऽविद्यमानत्वादात्मनो विजातीयभेदो नास्ति। स्वगतभेदः कथं नास्तीति चेत्, शृणु। 'आत्मा' 'साक्षी' 'कूटस्थः' 'पारमार्थिकः' 'प्राज्ञः' 'ब्रह्म' 'सत्' 'चित्' 'आनन्दः' 'नित्यः' 'एकः' 'परिपूर्णः' इत्यादिविधिवाक्यनामानि च 'अस्थूलम्' 'अनणु' 'अद्वैतम्' 'अचिन्त्यम्' 'अविकारि' 'अविनाशि' 'अकर्ता' 'अकारयिता' इति निषेधवाक्यनामानि चैकस्मिन्निर्विशेषात्मस्वरूपप्रकाशन एव तात्पर्यवन्ति न तु स्वरूपभेदे, आत्मनो निर्विशेषत्वान्निरंशत्वाच्च। तस्मात्स्वगतभेदो नास्तीत्येवं जानीहि ॥

ननु सच्चिदानन्दपदानां भिन्नार्थत्वाद्धस्तकरपाणिवत्पर्यायत्वाभावात्तैः पदैः प्रतिपाद्यमानस्यात्मनः 'वृक्षः पत्रपुष्पफलरूपेण वर्तते' इत्यत्र पत्रादिपदानां भिन्नार्थत्वात्तैः पदैः प्रतिपाद्यमानस्य वृक्षस्येव स्वगतभेदेन भवितव्यमिति चेत्। 'लोहितोष्णप्रकाशो दीपः' इत्यत्र यथा दीपस्य स्वगतभेदो नास्ति, एवं 'सच्चिदानन्दरूप आत्मा' इत्यत्रापि स्वगतभेदो नास्ति। न च तर्हि 'पत्रपुष्पफलरूपो वृक्षः' इत्यत्रापि स्वगतभेदो न स्यादिति वाच्यम्। तत्र वृक्षस्य सर्वस्यापि पत्रादिरूपत्वं नोच्यते। एकस्मिन्प्रदेशे पत्ररूप एकस्मिन्प्रदेशे पुष्प-

रूप एकस्मिन्प्रदेशे फलरूप इत्युच्यते। अतस्तत्र स्वगतभेदोऽस्ति। 'सच्चिदानन्दरूप आत्मा' इत्यत्र सर्वांशेनाप्यात्मनः सच्चिदानन्दरूपत्वस्य प्रतिपाद्यमानत्वात् 'लोहितोष्णप्रकाशो दीपः' इति सर्वांशेनापि लोहितोष्णप्रकाशत्वेन प्रतिपाद्यमानस्य दीपस्येव स्वगतभेदो नास्ति ॥

एवं चेत् श्रुतिः 'आत्मा सद्रूपश्चिद्रूप आनन्दरूपः' इति पुनः पुनः किमर्थमुपदिशति, एकेनैवोपदेशेनात्मनो ज्ञातुं शक्यत्वादिति चेत्, शृणु श्रुतेस्तात्पर्यं ब्रवीमि। कथमिति चेत्। आत्मनिष्ठं सत्त्वं जगति, चित्त्वं जडेषु बुद्ध्यादिषु, आनन्दत्वं पुत्रभार्यादिषु च. जगन्निष्ठमसत्त्वं बुद्ध्यादिनिष्ठं जडत्वं पुत्रभार्यादिनिष्ठं दुःखित्वं च सच्चिदानन्द आत्मनि च परस्परं वैपरीत्येनाविद्यया आरोपितम्। अतः 'सर्वं जगत्सत्यम्' 'बुद्ध्यादयश्चेतनाः' 'पुत्रभार्यादय आनन्दरूपाः' 'अहं नश्वरः' 'अहं जडः' 'अहं दुःखी' इति च परिभ्रमन्ति। एतद्भ्रान्तिनिवृत्तये मातृभूता श्रुतिर्जीवान्प्रत्युपदिशति। कथमिति चेत्। 'हे जीवाः, यूयं सच्चिदानन्दरूपा एव' इति बोधनार्थम् 'आत्मा सद्रूपो नानृतरूपः, चिद्रूपो न जडरूपः, आनन्दरूपो न दुःखरूपः' इति तद्भ्रान्तिनिवृत्त्यर्थं बोधयतीति जानीहि। श्रुतिरात्मनः सच्चिदानन्दरूपेण भेदं न बोधयति। लोके केचन वादिनः 'आत्मनः सत्त्वं धर्मः, चित्त्वं सुखं च गुणौ, अत आत्मा सच्चिदानन्दस्वरूपो न भवति' इति कथयन्ति। तन्निवारणार्थमपि श्रुतिः 'आत्मा सच्चिदानन्दस्वरूपः' इति वदतीत्यवगन्तव्यम्। भवद्भिः श्रुतेस्तात्पर्यमेवमिति कथं ज्ञातमिति चेत्। सर्वासामपि श्रुतीनामुपक्रमोपसंहारादिषड्विधलिङ्गैरखण्डार्थे तात्पर्यस्यावधारणादिति मन्तव्यम् ॥

हे स्वामिन्, एवं श्रुत्यैवाखण्डार्थः साधितः, इतः परं युक्त्यापि कृपया साधनीय इति चेत्, शृणु। सत्स्वयमेव प्रकाशते वा अन्येन वा प्रकाशते? आद्ये सदेव चित्स्यात्। अन्येन चेत्सतः प्रकाशकं तदन्यद्वस्तु सद्विलक्षणं वा सदन्तरं वा? सद्विलक्षणत्वे तस्य शश-विषाणादिवदसत्वेन तस्य सत्प्रकाशकत्वं न संभवति। सदन्तरमिति पक्षे तत्सदन्तरं स्वयं प्रकाशते वाऽन्येन प्रकाशते वेति विकल्पे, आद्य-पक्षे सत एव स्वयंप्रकाशत्वे चित्वं स्यात्, अन्येन प्रकाशत इति पक्षे पुनरपि विकल्पः पूर्ववदायाति। एवं विकल्पे क्रियमाणे आत्माश्रय-दोषोऽन्योन्याश्रयदोषश्चक्रकापत्तिदोषोऽनवस्थादोष इति बहवो दोषा आपद्येरन्। तस्मात्सत्स्वयमेव प्रकाशते। सतः स्वयंप्रकाशत्वे सदेव चिच्चिदेव सत्। उभयमप्येकमेव। सदन्तरमस्तीति वेदेषु न कुत्रापि दृश्यते। अतः सत्स्वयमेव प्रकाशत इति निश्चयः। अतः सदेव चिदिति सिद्धम्। तस्य स्वयं प्रकाशमानस्य सत आनन्दत्वं कथमिति चेत्, उच्यते– सतोऽद्वैतत्वादानन्दत्वम्। आनन्दः परिपूर्ण एव तिष्ठति। नाल्पे पूर्णत्वम्। पूर्णत्वं च सतोऽद्वैतस्यैव न द्वैतस्य। कथं सदद्वैतमिति चेत्। हे पुत्र, सतः सद्वितीयत्वं सदन्तरेण वा सद्विलक्षणेन वा वद। नाद्यः, सदन्तरस्य शास्त्रेण युक्त्या अनुभवेन चासिद्धत्वात्। न द्वितीयः, सद्विलक्षणस्य शशविषाणवत्स्वरूपाभावेन तेन सद्वितीयत्वस्य वक्तुमशक्यत्वात्। अस्माद्विकल्पद्वयादन्यो विकल्पो नास्ति। अत एकस्य सतो द्वितीयाभावादद्वैतत्वं सिद्धम्। तेन पूर्णत्वं सिद्धम्। तेन स्वप्रकाशसदेवानन्दः। एवं युक्त्यापि सच्चिदानन्दपदानामखण्डार्थत्वं जानीहि॥

अथानुभवेनाखण्डार्थत्वं साध्यते। अखण्डार्थत्वमेकादश वर्णकेऽप्युक्तम्। तथाऽपि पुनरुच्यते दाढर्यार्थम्। शृणु। सर्वेषां सुषुप्तावेकं सुखं भाति। तत्सुखं जाग्रत्स्वप्नयोरिव न नानारूपम्।

किं त्वेकरूपं निर्बाधम्। तस्मात्तत्सुखमद्वैतमेव। तस्यामवस्थायां सूर्याद्यालोकानपेक्षं सौषुप्तानन्दस्य प्रकाशमानत्वात्तस्य चित्त्वम्। तस्य सौषुप्तानन्दस्य स्वयंप्रकाशत्वे किं प्रमाणमिति चेत्। सुप्तोत्थितस्य 'एतावन्तं कालं सुखमहमस्वाप्सम्' इति स्मरणमायाति। स्मरणस्यानुभवपूर्वकत्वनियमात्सौषुप्तसुखस्यानुभवो वक्तव्यः। तदानीमनुभवकारणस्येन्द्रियादेरभावात्सोऽनुभवः सौषुप्तानन्दस्य स्वयंप्रकाशत्वादेवेति जानीहि॥

ननु सुषुप्तावनुभवेन सुखं च प्रकाशतेऽज्ञानं च प्रकाशते। तयोर्मध्ये सुखं वा अज्ञानं वा स्वप्रकाशं वस्त्विति विचार्यमाणे सुखमेव स्वप्रकाशमिति वक्तव्यम्। नाज्ञानम्, तस्यावरणरूपत्वेन प्रकाशाभावात्। अतः सुषुप्तावात्मरूपं सुखमेव स्वप्रकाशं सत्स्वस्मिन्नारोपितमज्ञानमपि प्रकाशयति। अतस्तत्सुखं स्वप्रकाशमेवेत्यनुभवेनापि सच्चिदानन्दपदानामखण्डार्थत्वं सिद्धम्॥

एवं श्रुतियुक्त्यनुभवैरात्मनः स्वगतभेदोऽपि नास्ति। एवं सजातीयविजातीयस्वगतभेदानामभावाद्वस्तुपरिच्छेदो नास्ति। एवं देशकालवस्तुपरिच्छेदाभावेनात्मा परिपूर्ण इति सिद्धम्। अनेनाखण्डैकरसत्वं सिद्धम्॥

हे पुत्र, परिपूर्णानन्दात्मनो दुःखमागन्तुकम्। तद्दुःखं शरीरेण, शरीरं कर्मणा, कर्म रागादिना, रागादिरभिमानेन, अभिमानोऽविवेकेन, अविवेकोऽज्ञानेन चागत इति ज्ञात्वा, तदज्ञानं ज्ञानेन बाधितव्यमिति, ज्ञानं च विचारेणागच्छतीति च, आत्मा सत्यज्ञानानन्दस्वरूप इति च, देहादिप्रपञ्चोऽनृतजडदुःखरूप इति च स प्रपञ्चोऽध्यारोप इति चैवं विचार्य तत्त्वंपदवाक्यजन्यज्ञानेन स्वात्मनः 'अहं ब्रह्मास्मि' इति यत्परोक्षज्ञानं तदनुभवेन साक्षात्काररूपं

यदपरोक्षज्ञानमेतच्च यः प्राप्नोति, स एव 'चण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम' इति भगवत्पादाचार्यवचनात्कुटीचक्रबहूदकहंससंन्यासिभ्योऽधिकतया पूजनीयः, स एव परमहंस इति निश्चित्य त्वमपि मदुक्तप्रकारेणात्मानं सम्यक्श्रुत्वा मत्वा ध्यात्वा साक्षात्कृत्य नित्यशुद्धबुद्धमुक्तसत्यपरमानन्दाद्वयब्रह्मरूपेण तिष्ठ। एतावदेवाचार्यैर्वक्तव्यं शिष्येण च श्रोतव्यम्। इतः परं वक्तव्यं श्रोतव्यं च नास्तीति सिद्धम् ॥

इति द्वादशवर्णकम् ॥

समाप्तश्चायं ग्रन्थः ॥

---

## பன்னிரண்டாவது வர்ணகம்

இந்த வர்ணகத்தில் ஆத்மாவின் அகண்டார்த்தம் என்னும் ரஹஸ்யம் விளக்கப்படுகிறது.

கேள்வி:—கீழே உள்ள 11 வர்ணகங்களில் அடங்கிய உபதேசங்களால் தேகம் முதலிய ஐந்து கோசங்களில் 'நான்' "என்னுடையது" என்ற எண்ணம் விலகிவிட்டது. புத்தியைப் பிரகாசப்படுத்தும் எந்த சச்சிதானந்தருபமான பரமாத்மா உண்டோ அதுவே நான் என்ற ஞானம் ஏற்பட்டுவிட்டது. எல்லா ஸந்தேகங்களும் நீங்கின. இருந்தாலும் ஒரு சந்தேகம் மட்டும் இருக்கிறது. அது என்னவெனில் ஆத்மா ஸத்ருபம், சித்ருபம், ஆனந்தருபம் என்று சொல்லப்பட்டதல்லவா. இந்த மூன்று லக்ஷணங்களைக்கூறும் ஸத், சித் ஆனந்தம் என்னும் மூன்று பதங்களும் வெவ்வேறான மூன்று ஸ்வருபங்களைக் குறிப்பிடுகின்றன. ஆகவே இப்பதங்கள் வெவ்வேறான மூன்று பொருள்களை உடையதுபோல் எனக்குத் தோன்றுகின்றன. ஆகையால் வெவ்வேறான மூன்று பொருள்களைக் கூறும் இந்த மூன்று பதங்களுக்கு பிரிவற்ற ஒரேவஸ்து எப்படி பொருளாகும்?

பதில்:— தேசத்தினால் பரிச்சேதம் காலத்தால் பரிச்சேதம் வஸ்துவினால் பரிச்சேதம் என்னும் மூன்றுவித பரிச்சேதங்கள்

அற்றதும் அதனுல் எல்லையற்றதுமான பொருள் தான் அகண்டம் என்பது. அகண்ட வஸ்துவிற்கு இந்த மூன்று லக்ஷணங்கள் எதற்காக எனில் கூறுவோம்.

தேச பரிச்சேதமற்றது என்ற ஒரே லக்ஷணத்தை அங்கிகரித்தால் எங்கும் வியாபகமான ஆகாசமும் தேச பரிச்சேதமற்றதாக இருப்பதால் ஆகாசமும் அகண்டார்த்தம் என்று ஆகிவிடும். அது அகண்டார்த்தமில்லை. ஆகவே அகண்டமான ஆத்மாவின் லக்ஷணம் லக்ஷ்யமல்லாத ஆகாசத்திலுமிருப்பதால் அதிவ்யாப்தி ஏற்படும். இதைத் தடுக்க கால பரிச்சேதமற்றது என்ற லக்ஷணம் கூறப்பட்டது. ஆகாசத்திற்கு உத்பத்தியும் விநாசமும் இருப்பதால் கால பரிச்சேதம் இருக்கிறது. ஆகாசம் காலபரிச்சேதமற்றதாக இல்லை. ஆகையால் அகண்டார்த்த லக்ஷணத்திற்கு ஆகாசத்தில் அதிவ்யாப்தி இல்லை.

தேச பரிச்சேத மற்றது, கால பரிச்சேதமற்றது என்ற இரண்டு லக்ஷணங்கள் மட்டும் கூறினுல் ஆகாசத்தில் அதி வ்யாப்தி இல்லாவிட்டாலும் காலத்தில் அதிவ்யாப்தி ஏற்படும். எங்கும் உள்ளதால் காலம் தேசபரிச்சேதமற்றது. தன்னுலேயே தன்னை அளவுக்குட்படுத்த முடியாததனுல் காலம் காலபரிச்சேதமற்றது. இந்த இரண்டு லக்ஷணங் களும் காலத்தில் இருப்பதால் காலமும் அகண்டமாகிவிடும். இதற்காக வஸ்து பரிச்சேதமற்றது என்ற மூன்ருவது லக்ஷணம் சேர்க்கப்பட்டது. காலத்தைக் காட்டிலும் வேருன பொருள்கள் ஏராளமாக இருப்பதால் காலத்தில் வஸ்து பரிச்சேதம் உள்ளது காலம் வஸ்து பரிச்சேதமற்றதாக இல்லை. ஆகையால் காலம் அகண்டமல்ல ஆத்மா ஒன்றில்தான் இந்த மூன்று லக்ஷணங்களும் இருப்பதால் அது ஒன்றே அகண்டம். வேறென்றும் அகண்டம் அல்ல. இதற்காகத்தான் மூன்று லக்ஷணங்கள் கூறப்பட்டன.

கேள்வி:—ஆத்மாவை அகண்ட வஸ்துவாக ஒப்புக் கொண்டால் நீங்கள் கூறிய மூன்று லக்ஷணங்களும் ஆத்மாவில் இருக்கவேண்டுமல்லவா! இவை ஆத்மாவில் காணப்படவில்லையே! எப்படியெனில் ஒவ்வொருவரும் "நான இந்த இடத்தில் இருக்கிறேன்" "அந்த இடத்தில் இல்லை" என்று சொல்வதனுல் ஆத்மாவுக்கு தேச அளவு

உண்டு என்று தெரிகிறது. "இன்ன வருஷத்தில் பிறந்தவன், அதற்கு முன்னால் நான் இல்லை என்ற அனுபவம் இருப்பதால் ஆத்மாவுக்கு கால அளவு உள்ளது என்று தெரிகிறது. "நான் பிராம்மணன் க்ஷத்திரியன் அல்ல" என்ற அனுபவம் இருப்பதால் வஸ்து அளவும் ஆத்மாவுக்கு உண்டு என்று தெரிகிறது. ஆகவே மூன்றுவிதமான அளவுக்குட்படாதது ஆத்மா என்று சொன்னது சரியாக இல்லையே?

பதில்:— முன் அத்தியாயத்திலேயே ஆத்மா அனாத்மா இவைகளின் லக்ஷணங்களைப்பற்றி சொல்லும்போது "ஆத்மா பரிபூர்ணன்" "அநாத்மா ஒரு அளவுக்கு உட்பட்டது" "கண்ணுக்கு தெரிவது வாஸ்தவமல்ல தோற்றம்" என்று சொல்லப்பட்டது அல்லவா! ஆகையால் அந்த உபதேசத்தில் நம்பிக்கை இருந்தால் இந்த சந்தேகமே வராது. ஆனாலும் மறுபடியும் விவரித்துக்கூறுகிறேன்.

இந்த மூன்றுவித அளவு (தேசம் காலம் வஸ்து இவைகளால்) ஸ்வபாவமாக தேகத்திற்குத்தான் பரிபூர்ணமான பரமாத்மாவுக்கு இந்த அளவுகள் இல்லை.

எப்படியெனில் குடம் இருக்கிறது. வஸ்திரம் இருக்கிறது, சுவர் இருக்கிறது, களஞ்சியம் இருக்கிறது. பூமி இருக்கிறது, ஜலம் இருக்கிறது, ஒளி இருக்கிறது, வாயு இருக்கிறது, ஆகாசம் இருக்கிறது என்றெல்லாம் பஞ்சபூதங்களிலும் அவைகளால் ஆக்கப்பட்ட பிரபஞ்சத்திலும் 'இருக்கிறது' என்று ஆத்மா உணரப்படுவதால் அது எங்கும் நிறைந்தது ஆனதால் ஆத்மாவுக்கு தேச பரிச்சேதமில்லை. இப்படி சர்வவியாபகமான ஆத்மாவுக்கு கால அளவும் இல்லை. முன் சொல்லப்பட்ட காரணங்களால் ஆத்மா, ஆதி அந்தம் அற்றது என்பதால் சென்றகால எதிர்கால அளவுகளுக்கு உட்பட்டதல்ல என்று தெரிகிறது. சென்ற காலத்திலும் எதிர்காலத்திலும் உள்ள ஆத்மா ஒரே வஸ்துவான படியால் அது நிகழ்கால அளவுக்குமுட்பட்டதல்ல. ஆகவே ஆத்மா கால அளவுக்கு உட்பட்டதல்ல. ஆத்மா எல்லா வஸ்துக்களாகவும் இருப்பதால் வஸ்து பரிச்சேதமும் அதற்கு இல்லை.

வஸ்துக்கள் என்றால் எவை? ஸஜாதீய (ஒரே வகையான) பேதத்தால் வித்யாஸமுள்ளது. விஜாதீய (வெவ்வேறு

வகையான) பேதத்தால் வித்யாஸம் உள்ளது. ஸ்வகத (தனக்குள்ளேயே உண்டான) வித்யாஸம் உள்ளது இவை தான் வஸ்துக்கள். எப்படியெனில் ஒரு மரத்துக்கும் மற்றொரு மரத்துக்கும் உள்ள வித்யாஸம். அதாவது ஒரே வகைக்குள் இரண்டும் இருந்தாலும் தனித்தனியானவை என்ற வித்யாஸம். இது ஸஜாதீய பேதம் என்பது. மரத்துக்கும் கல்லுக்கும் உள்ள வித்யாஸம் விஜாதீய பேதம் என்பது, மரம் ஒரு வகை வஸ்து. கல் வேறு வகை வஸ்து. மரத்திலே அதன் இலை, புஷ்பம் என்ற வித்தியாஸம் ஸ்வகத பேதம் (தனக்குள்ளேயே இருக்கும் வித்யாஸம்) இந்த மூன்று விதமான பேதங்களும் ஆத்மாவிடத்தில் இல்லாததால் அது பேதமற்றது. வஸ்துவினுல் அளவு அதற்கு கிடையாது என்று முடிவு செய்யவேணும்.

கேள்வி:—மேலே சொன்ன ஸஜாதீய, விஜாதீய வஸ்து பேதங்கள் ஆத்மாவுக்கு கிடையாது என்று சொல்லமுடியாது ஏனெனில் ஒரே சைதன்னியம் (அறிவு) பிரும்ம சைதன்யம் ஈசுவர சைதன்யம், கூடஸ்த சைதன்யம் ஜீவ சைதன்யம் என்று பிரிந்து இருக்கிறதல்லவா? ஆகையால் (ஸஜாதீய பேதம்) ஒரே வகைக்குள் பேதம் உள்ளதாக காண்கிறது. ஆத்ம ஸ்வரூபம் பிரும்மம். பிரபஞ்சம் அனுத்ம ஸ்வரூபம் என்று இரண்டு இருப்பதால் வெவ்வேறு வகையான (விஜாதீயம்) பிரிவும் இருக்கிறது. பிரும்மத்தில் ஸத், சித், ஆனந்தம் என்ற மூன்று இருப்பதால் ஒரே வஸ்துவுக்குள்ளேயே (ஸ்வகத) வித்யாஸம் இருக்கிறது. ஆகவே மூன்றுவித பேதங்களும் ஆத்மாவில் இருக்கின்றன. இவை இல்லை என்று எப்படிச் சொல்வது?

பதில்:—ஒரே ஆகாசம். அது எதை ஒட்டி இருக்கிறதோ அதை உத்தேசித்து, மஹாகாசம், குடத்தின் ஆகாசம், மேகத்தில் உள்ள ஆகாசம், குடத்தில் உள்ள ஜலத்தில் பிரதிபிம்பித்த ஆகாசம் என்று பலவித வித்தியாஸங்களுடன் தோன்றுகிறது. அதுபோலவே மாயையின் காரணத்தால் ஒரே சைதன்யம் (அறிவு) பிரும்மம், ஈசுவரன் என்றும் அவித்யையின் காரணத்தால் கூடஸ்தன் என்றும் ஜீவன் என்றும் வெவ்வேருகத் தோன்றுகிறது. விசாரித்துப்பார்க்கில் வாஸ்தவத்தில் ஆகாசம் ஒன்று தான். பலவிதமாகத் தோன்றுவது வாஸ்தவமல்ல. இதுபோல் மாயையாலும்

அவித்யையாலும் சைதன்யம் பலவாகத் தோன்றினுலும் உண்மையில் ஒன்று தான். ஆகையால் ஆத்மாவுக்கு ஸஜாதீய பேதம் இல்லை.

ஆத்மாவில் விஜாதீயபேதமும் இல்லை. கயிறு இல்லாமல் பாம்புத்தோற்றம் இல்லை. ஆகாசமில்லாமல் நீலநிறமில்லை. இது போலவே ஆத்மா இல்லாமல் அநாத்மா இல்லை. அதிஷ்டானத்தைத் தவிற அதில் ஆரோபிதம் எல்லாம் பொய்தான். அதிஷ்டானம் ஒன்றுதான் உண்மைப்பொருள். பொய் என்பது மலடியின் பிள்ளை, முயல் கொம்பு என்பவை போல் மூன்று காலங்களிலும் இல்லாதது. அனுத்மாவானது வாஸ்தவத்தில் இல்லாதலால் விஜாதீயபேதமும் இல்லை. ஸ்வகதபேதம் (ஒன்றிற்குள்ளேயே வித்தியாஸம்) இல்லை என்பது எப்படியெனில் 'ஆத்மா' 'ஸாக்ஷி' 'கூடஸ்தன்' 'பாரமார்த்திகன்' 'பிராஜ்ஞன்' 'பிரும்மம்' 'ஸத்' 'சித்' 'ஆனந்தம்' 'நித்யன்' 'ஒருவனே' 'பரிபூர்ணன்' என்ற விதிருபமான வாக்கியங்களில் உள்ள பதங்களும், 'பருமனற்றது' 'அணுவல்லாதது' 'இரண்டற்றது' 'எண்ண முடியாதது' 'மாறுதலில்லாதது' 'நாசமற்றது' 'செய்கை யற்றது' 'செய்விக்கும் தன்மையற்றது' என்ற நிஷேத வாக்கியங்களில் உள்ள பதங்களும், ஒன்றுன மாறுதலற்ற ஆத்மஸ்வரூபத்தை விளக்குவதில் தான் கருத்துக் கொண்டவைகளே அன்றி வெவ்வேறு ஸ்வரூபம் என்பதில் தாத்பர்யமில்லை. ஏனெனில் ஆத்மா மாறுதல் இல்லாதது. பிரிவு அற்றது. ஆகவே தனக்குள் உள்ள வித்தியாஸம் (ஸ்வகதபேதம்) அற்றது ஆத்மா என்று அறியவும்.

கேள்வி:—ஸத், சித், ஆனந்தம் இம்மூன்று சொற்களும் வெவ்வேறு பொருள்களைக் குறிப்பவை. ஆகையால் கை என்ற ஒரே பொருளைக்குறிக்கும் ஹஸ்தம், கரம், பாணி இம் மூன்று சொற்களும் பர்யாயங்களாக (ஒரே பொருளை குறிப்பவைகளாக) இருப்பதுபோல் ஸத், சித் ஆனந்தம் என்ற சொற்கள் பர்யாயங்களல்ல. "மரம் இலை, மலர், பழங்கள் உருவமாக இருக்கிறது" என்று சொல்லும்பொழுது வெவ்வேறு பொருள்களுள்ள இலை, மலர், பழம் என்ற சொற்களால் மரத்தைக் குறிக்கும்பொழுது மரத்தில் தனக்குள் இலை மலர், பழம் என்ற வேற்றுமை உண்டு என்று சொல்கிரும். இதுபோலவே வெவ்வேறு பொருள்களுள்ள ஸத், சித்,

ஆனந்தம் என்ற சொற்களால் ஆத்மாவைக்குறிக்கும் பொழுதும் ஆத்மாவில் தன்னுள் பேதம் உள்ளது என்றுதான் சொல்லவேண்டும் ?

பதில்: — தீபம், சிவப்பான உஷ்ணமான ஒளி உடையது என்கிறோம். ஆனாலும் ஸ்வகதபேதம் தீபத்தில் கிடையாது. அப்படியே ஆத்மா சச்சிதானந்தமயம் என்பதிலும் தன்னுள் பேதம் இல்லை.

கேள்வி: — அப்படியானால் அதேமாதிரி மரம், இலை, புஷ்பம் பழங்களாயிருக்கிறது என்று கூறும்போது மரத்திலும் தன்னுள் வேற்றுமை இல்லை என்று சொல்லலாமல்லவா ?

பதில்:—மரத்தில் எல்லா பாகமும் இலை என்று சொல்ல முடியாது. ஒரு இடத்தில் மரம் இலையாகவும் மற்றொரு இடத்தில் அது புஷ்பங்களாகவும் மற்றொரு இடத்தில் பழமாகவும் இருக்கிறது. ஆகவே அங்கு ஸ்வகதபேதம் இருக்கிறது. ஆத்மா சச்சிதானந்தமயம் என்ற இடத்தில் எல்லா அம்சமும் ஸத் சித் ஆனந்தமயமாக இருப்பதால் ஆத்மாவில் வேற்றுமை கிடையாது. சிவப்பான உஷ்ணமான ஒளி தீபம் என்ற இடத்தில் தீபம் முழுவதும் சிவப்பாகவும் உஷ்ணமாகவும் ஒளியாகவும் இருப்பதால் அதில் தன்னுள் வேற்றுமை இல்லையல்லவா !

கேள்வி :— அப்படியானால், " ஆத்மா ஸத்ரூபம், சித்ரூபம், ஆனந்தரூபம் " என்றெல்லாம் ஏன் அடிக்கடி சுருதி உபதேசிக்கிறது. ஒரே உபதேசத்தால் ஆத்மாவை அறிந்துவிடலாமே?

பதில் :—சுருதியின் தாத்பரியம் என்னவென்று கவனிப்போம். உலகில் எல்லோரும் ஆத்மாவைப் பற்றி சரியாக அறிந்து கொள்வதில்லை. ஆத்மாவில் உள்ள ஸத் ( இருத்தல் ) என்பதை உலகத்தின் பேரிலும், 'சித்' என்ற அறிவை ஜடமான புத்தியின் மேலும், 'ஆனந்தம்' என்பதை தன் மனைவி பிள்ளைகள் பேரிலும் ஜகத்தின் (உலகத்தின்) அஸத்தையும் புத்தியின் ஜடத்தன்மையையும் பெண்சாதி, பிள்ளை முதலியவர்களின் துக்கத்தையும் சச்சிதானந்தமயமான ஆத்மாவின் பேரிலும் அவித்யையின் காரணத்தால் சுமத்தி கஷ்டப்படுகிறார்கள். அதனால் 'ஜகத் ஸத்யமானது' 'புத்தி முதலியவை சேதனங்கள்' 'தன் மனைவி

பிள்ளை முதலியவர்கள் ஆனந்தமளிப்பவர்கள்' 'நான் அழியக்கூடியவன்.' 'நான் ஜடன்' 'நான் துக்கிப்பவன்' என்று சொல்லிக்கொண்டு அவஸ்தைப்படுகிறார்கள். இந்த ப்ராந்தியை நிவர்த்திக்கவே வேதமாதா இவர்களைக் குறித்து உபதேசிக்கிறது. "ஹே ஜீவர்களே, நீங்கள், ஸச்சிதானந்த ரூபர்கள்தான்" என்று போதிப்பதற்காக 'ஆத்மா ஸத்ரூபமானது, பொய்யல்ல சித், (அறிவு) ரூபமானது ஜடமல்ல. ஆனந்தரூபமானது துக்கமுள்ளதல்ல' என்று பிராந்தியை நிவர்த்திக்கத்தான் இவ்வாறு உபதேசிக்கிறது.

ஸத், சித் ஆனந்தம் என்ற பிரிவுகள் ஆத்மாவில் உள்ளதாக சுருதி சொல்லவே இல்லை. உலகில் சிலர் ஸத்வம் என்பது ஆத்மாவிலுள்ள தர்மம் (தன்மை), சித்வம், ஸுகம் இவ்விரண்டும் ஆத்மாவின் குணங்கள். ஆகவே ஆத்மா ஸச்சிதானந்த ரூபமல்ல என்று வாதாடுகிறார்கள். அதை மறுப்பதற்காகவும் வேதம் ஆத்மா ஸச்சிதானந்தரூபம் என்று சொல்லுகிறது. இது தான் சுருதியின் தாத்பர்யமென்று எப்படி அறிந்து கொள்ளலாமென்றால், ஆரம்பம், முடிவு முதலான ஆறுவித ஹேதுக்களைக் கொண்டு அகண்டார்த்தத்தில் தான் எல்லா சுருதிகளுக்கும் தாத்பர்யம் என்று தீர்மானம் செய்து கொள்ளலாம்.

ஆத்மா அகண்டம் (பிரிவற்றது) என்பது சுருதியைக் கொண்டு காட்டப்பட்டது. இனி யுக்தியாலும் இதை நிரூபிப்போம்.

ஸத் என்பது தானாகவே பிரகாசிக்கிறதா, வேறொன்றால் பிரகாசிக்கிறதா? தானாகவே பிரகாசிக்கிறது எனில் ஸத்து தான் சித்து என்று ஆகும். வேறொன்றால் பிரகாசிக்கிறது எனில் அந்த வேறு வஸ்து மற்றொரு ஸத்தா அல்லது ஸத்துக்கு எதிரிடையான ஸ்வபாவமுள்ளதா? எதிரிடையான ஸ்வபாவமுள்ளதானால் முயல் கொம்புபோல் அது அஸத்தானபடியால் எப்படி அது ஸத்தை பிரகாசிக்கும்படி செய்யமுடியும்? அந்த வேறு வஸ்துவும் மற்றொரு ஸத்துதான் என்றால் அதுவும் தானே பிரகாசிக்கிறதா அல்லது வேறொன்றால் பிரகாசிக்கப்படுகிறதா என்ற கேள்வி வரும். அது தானே பிரகாசிக்கிறது எனில் அந்த ஸத்தேதான்

சித்தாகிறது. வேறென்றினால் பிரகாசிக்கிறது எனில் மறுபடியும் முன்போல் கேள்விகள் வரும். இவ்வாறு மேலும் மேலும் கேள்விகள் கேட்டுக்கொண்டுபோனால் இதற்கு முடிவே இல்லாததால் பலவித தோஷங்கள் வரும். ஆகையால் ஸத்து தானே பிரகாசிக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். அப்பொழுது ஸத்துதான் சித்து, சித்து தான் ஸத்து இரண்டும் ஒன்றுதான் என்று ஏற்படுகிறது. மேலும் ஸத்தைக்காட்டிலும் வேறாக சித் வஸ்து இருப்பதாக வேதத்தில் ஒரு இடத்திலும் சொல்லவில்லை.

தானே பிரகாசிக்கிற அந்த ஸத்து எப்படி ஆநந்தமாகிறது எனில் ஸத்வஸ்து அத்வைதமானபடியால் இதைக்காட்டிலும் வேறு பொருள் இல்லாததால் இதுவே ஆநந்தரூபம். எங்கும் நிறைந்த பொருளில்தான் ஆனந்தம் இருக்கும். அல்பவஸ்துவில் ஆனந்தம் கிடையாது அத்வைதமான ஸத்வஸ்துதான் பூர்ணமானது. த்வைத வஸ்து பூர்ணமில்லை. ஆகவே பூர்ணமான ஸத்வஸ்து ஆனந்தரூபம்.

ஸத் எப்படி அத்வைதமாகிறது எனில், ஸத்தைக் காட்டிலும் வேறு இரண்டாவது பொருள் இருக்குமானால் அது ஸத்தா அஸத்தா? சாஸ்திரம் யுக்தி அனுபவம் இவைகளின் மூலம் விசாரித்துப்பார்த்தால் இரண்டாவது ஸத்வஸ்து இல்லை என்று நிச்சயமாகத் தெரிகிறது. அது அஸத்தானால் முயல் கொம்புபோல் அதற்கு ஸ்வரூபமே இல்லாததால் ஸத் வஸ்துவின் அத்வைதத்தன்மையை இது பாதிக்காது. ஆகவே வாஸ்தவத்தில் இரண்டாவது பொருள் இல்லாததால் ஸத் வஸ்து அத்வைதம். அதனால் இதுவே பூர்ணம். ஆகையால் ஸ்வப்ரகாசமான ஸத்வஸ்துவேதான் ஆனந்தம். இவ்வாறு யுக்தியைக்கொண்டும் ஸச்சிதானந்த பதங்களுக்கு அகண்ட வஸ்து பொருள் என்பதை தீர்மானிக்கலாம்.

இனி அனுபவத்தால் இந்த அகண்டார்த்தத்தை தீர்மானம் செய்வோம். அகண்டார்த்தத் தன்மையைப்பற்றி 11-வது வர்ணகத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஆனாலும் நன்கு மனதில் பதியவேண்டி இன்னும் ஒரு முறை அதை சொல்லுவோம். எல்லோருக்கும் சுஷுப்தியில் ஒரே சுகம் தோன்றுகிறது அந்த சுகம் ஜாக்கிரம், ஸ்வப்னம் இந்த நிலைகளில் உள்ளதுபோல பல வகைப்பட்டதல்ல அது ஒரே

ரூபமானது. வேறொன்றினால் பாதிக்கப்படாதது. ஆகவே அந்த சுகம் ஒன்றுனதுதான் அந்த சுஷுப்தியில் சூரியன் முதலியவைகளின் பிரகாசத்தை எதிர்பாராமல் சுஷுப்தி ஆனந்தம் தானே பிரகாசிப்பதால் அது 'சித்' ரூபமானது அந்த சுஷுப்தி ஆனந்தம் ஸ்வயமாக பிரகாசிக்கிறது என்று எதனால் சொல்லப்படுகிறது என்ருல் தூங்கி எழுந்தவன் 'இது வரை நான் சுகமாகத்தான் தூங்கினேன்'' என்று நினைவு படுத்திக் கொள்கிறுனல்லவா. இப்படி நினைவு வருவதற்கு முனபு அதன் அனுபவம் இருந்திருக்கவேண்டுமாதலால் சுஷுப்தியில் சுகானுபவம் உண்டு என்று சொல்லவேண்டும். அந்த ஸமயத்தில் அனுபவத்துக்குக் காரணமான இந்திரியம் முதலியவை இல்லாததால் அந்த சுஷுப்தியில் ஏற்படும் ஆனந்தம் தானுகவே பிரகாசிக்கிறபடியால்தான் ஆனந்தானு பவம் ஏற்படுவதாகச் சொல்லவேண்டும்.

கேள்வி :—சுஷுப்தியில் நம் அனுபவத்தில் சுகமும் விளங்கு கிறது. அஜ்ஞானமும் விளங்குகிறது. அவைகளிரண்டுக்குள் ஸுகம் ஸ்வப்ரகாசமா ? அக்ஞானம் ஸ்வப்ரகாசமா ?

பதில் :—சுகம்தான் ஸ்வப்ரகாசம். அக்ஞானம் அல்ல. அக்ஞானம் மறைவு ரூபமானதால் அது பிரகாசம் அல்ல. ஆகையால் சுஷுப்தியில் ஆத்மரூபமான சுகம் தானே பிரகா சித்துக்கொண்டு அஞானத்தையும் பிரகாசமடையும்படி செய் கிறது ஆகவே 'சத' என்பதின் சுகம் ஸ்வப்ரகாசமானது தான என்று அனுபவத்தினுலும் தீர்மானிக்கப்படுகிறது. ஆகவே ஸச்சிதானந்தம் என்ற பதங்களால் அகண்டார்த்தம் (ஒரேபொருள்) குறிக்கப்படுகிறது என்று அனுபவத்தாலும் முடிவுக்கு வரவேண்டியது.

இப்படி சுருதி, யுக்தி, அனுபவம் இவைகளினுல் ஆத்மா வுக்கு ஸ்வகத பேதமும் (உள்ளுக்குள் வேற்றுமை) கிடையாது என்று தெரிகிறது இப்படி ஸஜாதீயம், விஜாதீயம் ஸ்வகதம் என்ற மூன்று பேதங்களும் இல்லாததால் வஸ்துவினுல் அளவுக்குட்பட்டது என்பது ஆத்மாவுக்குக் கிடையாது. இவ்விதம், தேசஅளவு, காலஅளவு, வஸ்துஅளவு என்ற குறைகள் ஆத்மாவுக்கு இல்லாததால் ஆத்மா பரிபூர்ணன் (எங்கும் எப்போதும் எவ்விதத்திலும் நிறைந்தவன்) என்று தீர்மானமாகிறது இப்படி ஆத்மா அகண்டமானது ஏக ரஸமானது என்று தெரிந்துகொண்டோம்.

Sri Gurubyo Nama:

# ~ PRANAMS & GREETINGS ~

TO

# Sri.C.V. Venkateswaran

S/O *PUJYA SRI C.V.SWAMY SHASTRYJI*
(SRI ANANTHANANDA NATHA:)
OF GUHANANDAMANDALI.
IN HIS
AUSPICIOUS SASHTIABTHAPOORTY
ON
**10th April 1998**

*"The Brahmavidya Sadhana is the highest state of mind; Dhyanabhava is the lowest of all. Yoga is the process whereby union of Athma and Paramathma is achieved. Puja [worship] is the union of worshipper and worshipped. But for a sadaka who realizes that all things are Brahman, there is neither yoga nor puja. For him there is neither sin nor virtue, heven, or future birth. There is none to medidate on nor one to medidate."*

*- Maha Nirvana Tantra*

The above truth are fully observed in our *Sri Vidya Saparya Paddhathi* (Sri Vidya Navavarana Puja Kalpam) before performing the Undher Yaaga namely *Aathma Yajanam*. So one who is doing the Aathma Yajana in the above bhaava should certainly attain the brahmagnana.

Life is short. Many are the vedas, Many are the sastras, infinte of the obstacles; therefore it is necessary that the essence be mastered, as the gander (annam) sipes from the water the milk which has been mixed with it. Our beloved **Guruji Pujya Shri Ananthananda Nathar** dedicated his full life to propagate the Brahmavidya Upasana by doing various puja, homa and teaching the same to his diciples. In the same manner, we, the **Rhythanbhara Gnana Sabha,** are doing sadana to establish and propagate our **Guruji's** sayings through by printing and publishing his works.

We are giving our pranams to **Smt & Sri C.V. Venkateswaran** on his **61st Birthday** and also praying the Goddess to give them a long life and to guide us in the sadana.

Our pranams,

**Arutsakthi Nagarajan**

**(Sri Kameswarananda Natha:)**
**and**
**The Members**
**of the Rhythanbhara Gnana sabha**



Date : 10.4.1998
New Delhi

